# திருவரங்கம்

முனைவர் பேராசிரியர் **ந.க. மங்களமுருகேசன்**

எம்.ஏ., எம்.லிட்., எம்.எட்., பி.எச்.டி., வடமொழிப் பட்டயம்

வரலாற்றுப் பேராசிரியர் (பணி நிறைஞர்)

தொலைதூரக் கல்வி இயக்ககம்

சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை

**தென்றல் பதிப்பகம்**

13/3, பீட்டர் சாலை குடியிருப்பு

இராயப்பேட்டை

சென்னை – 600 014

# நன்றி

இந்நூல் திருமலை - திருப்பதி திருக்கோயில் சமயநூல்கள் வெளியீட்டிற்கு வழங்கும்

நிதியுதவி திட்டத்தின் கீழ் நிதி உதவி பெற்று வெளியிடப் பெறுகிறது.

நூலை வெளியிட முழு நிதியினை வழங்கிய திருமலை - திருப்பதி திருக்கோயில் நிர்வாகத்தினருக்கு இதய நன்றி.

திருவேங்கடவன் அருள் மலர்ப் பாதங்களில் திருவரங்கன் புகழ்பாடும் இந்நூலினை சமர்ப்பிக்கிறேன்.

- ந.க. மங்களமுருகேசன்

---

நூலின் பெயர் திருவரங்கம் ❑ ஆசிரியர் : முனைவர் ந.க. மங்கள முருகேசன் ❑ பக்கம் : 208 ❑ பதிப்பு : முதற் பதிப்பு ஜூலை – 2006 ❑ உரிமை: திருமதி ம. இராஜம் மங்களமுருகேசன், எம்.ஏ.,எம்.பில்., பி.எட்., ❑ தாள் : 13.7 கி.கி. வெள்ளைத்தாள் ❑ படிகள் : 1000 * நூல் அளவு : டெம்மி ❑ அச்சிட்டோர் : அலமு அச்சுக் கூடம் ❑ கணினி : கற்பகம் டேட்டா சிஸ்டம்ஸ் ❑ வெளியிட்டோர் : தென்றல் பதிப்பகம் ❑ விலை : ரூ. 65/–

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | பள்ளி கொண்ட பெருமாள் | 5 |
| 2. | கோயில் | 15 |
| 3. | மரபுச் செய்திகள் | 21 |
| 4. | வரலாறு காட்டும் திருவரங்கம் | 26 |
| 5. | திருக்கோயில் அமைப்பு | 39 |
| 6. | திருக்கோயில் நிருவாகம் | 59 |
| 7. | திருவரங்கத்துத் திருவிழாக்கள் | 71 |
| 8. | துணைக் கோயில்கள் | 174 |
| 9. | தாயார் சந்நிதி விழாக்கள் | 178 |
| 10. | வழிபாடுகளும் கட்டளைகளும் | 180 |
| 11. | விழாக்களின் நடைமுறை | 187 |
| 12. | திருவரங்கத்துப் பிரசாதங்கள் | 194 |
| 13. | திருவரங்கத்துச் சிற்பங்கள் | 197 |
| 14. | கல்வெட்டுக்கள் | 201 |
| 15. | திருவரங்கன் உலா | 204 |

காவேரி விரஜா சேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்
பரவாசுதேவோ ரங்கேச; பிரத்யக்ஷம் பரம்பதம்
விமானம் பிரணவாகரம் வேதச்ருங்கம் மகாத்புதம்
ஸ்ரீரங்கசாயீ பகவான் பிரணவார்த்த பிரவர்தகா:

காவேரியே விரஜா நதி. அரங்க நாதரின் இருப்பிடம் வைகுந்தம். பரவாசுதேவப் பரம் பொருள் ஸ்ரீ ரங்கநாதர். விமானம் ஓம் என்றும் பிரணவம். அதனுடைய எடுப்பான கலசங்களே வேதங்கள். பள்ளி கொண்ட பெருமாளின் தோற்றமே பிரணவம்.

இயல் : ஒன்று

# பள்ளி கொண்ட பெருமாள்

வைணவம் இந்துச் சமயத்தின் ஒரு பிரிவு. தொன்மைச் சிறப்புடையது. 'சரணாகதி' எனப்படும் இறைவன் திருப்பாதங்களைச் சரண்புகுந்தாலே வேண்டிய, வேண்டியவாறு அருளாளனான பெருமான் அருளிச் செய்வான் என்பது அடியவர் நம்பிக்கை. வைணவக் கொள்கை கொண்டோர் அவனே எல்லாம் என்னும் ஆழ்ந்த நம்பிக்கையாளர். உண்மையான வைணவனுக்குச் சாதி வேறுபாடு கிடையாது. திருமாலைச் சரண் புகுந்தார் எல்லாரும் அவர் சாதி.

விஷ்ணு* என்னும் சொல்லுக்கு எங்கும் நிறைந்து, இகபரசுகமளித்து, மாயையிலிருந்து காத்து, மண்ணுயிர்ப் பொருள் அனைத்திலும் உயிராய் உயிர் நாடியாய் விளங்குபவர் என்று பொருள் கூறுவர். திருமாலை மலரால் போற்றி, நெருப்பினால் ஆகுதி செய்து, சிலை வழிபாட்டு வழியும் வழிபடலாமெனப் புராணங்கள் கூறும்.

*வாயினால் பாடி*
*மனத்தினால் சிந்திக்க*
*போயபிழையும், புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும்*

என ஆண்டாள் உரைத்த திருப்பாவை உரைக்கும், வழி காட்டும்.

எளிமை, நீர்மை, செம்மை, பரிவு, தலைமை என்று பொருள்தரும் சௌலப்யம், சௌசீல்யம், ஆர்ஜவம், வாத்சல்யம், சுவாமித்துவம் எனும் பண்புகள் உடையவர் பெருமாள்.

---

* 'கரந்தெங்கும் பந்துளன் – நம்மாழ்வார்.

அடியாரை உய்விக்க விபவ அவதாரமாகவும், அர்ச் சாவதரமாகவும், அந்தர்மியாகவும் அருளும் கோலம் கொண்டவர் அந்தப் பெருமாள்.

பரமபதத்தில் அமர்ந்த திருத்தோற்றத்தில் இருந்து காத்தருளும் பரமன், பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அருச்சை என ஐவகைப்படும் வடிவங்களில் அருள் பாலிக்கிறார் என்று கூறுவர்.

## ஐந்து நிலைகள்

*1. பரம் :* திருமகள், மண்மகள், நீளாதேவி எனும் முத்தேவியருடன் எழுந்தருளியிருக்கும் திருக்கோலம்.

*2. வியூகம் :* பாற்கடலில் பள்ளி கொண்டு திருமகளும், பூமகளும் திருவடி வருட உறங்குவது போல பாசாங்கு செய்து இருக்கும் நிலை இது. வியூகம் என்பதற்கு விரிவுபடுத்தல் எனப் பொருள். தம்மை வாசுதேவனாகவும், சங்கர்ஷனனாகவும், பிரத்யுமனனாகவும், அனிருத்தனாகவும் வியூகப்படுத்திச் சகல திக்குகளையும் நோக்கியிருப்பார் என்பர்.

*3. விபவம் :* விபவம் என்றால் இறங்கி வருதல், அதாவது இறைவன் அன்பர்க்கு அருள் செய்ய மானிடனாய் அவதரித்து இறங்கி வருதல் ஆகும். அவதாரங்கள் நிலையே விபவம். ஸ்ரீ இராமனாயும், ஸ்ரீ கிருஷ்ணனாயும் இறங்கி வந்த நிலை இதுவாகும்.

அவதாரங்களைப் பூர்ணாவதாரம், அம்சாவதாரம், ஆவேச அவதாரம் என்று வகைப்படுத்தி, இராமாவதாரம், கிருஷ்ணா வதாரம், பரசுராம அவதாரம், வாமன அவதாரம் ஆகியவற்றைப் பூர்ணவதாரம் எனவும், மச்சாவதாரம், வராக அவதாரம் முதலியன அம்சாவதாரம் எனவும், நரசிம்ம அவதாரத்தை ஆவேச அவதாரம் எனவும் கூறுவர்.

*4. அந்தர்யாமித்வம் :* ஒவ்வொரு ஜீவாத்மாவின் உள்ளிருந்தும் பரம் பொருள், மறைமுகமாக, அந்தர்யாமியாகத் தம் ஆற்றலை வெளிப்படுத்தும்.

இந்த நான்கு நிலைகளை – அதாவது பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் ஆகியவற்றை நாம் கண்ணால், எண்ணத்தால்

நெருங்குதல் அரிது. அது மட்டுமல்லாது விபவ அவதாரங்கள் நிகழ்ந்த காலத்தில் நாம் எவ்வாறு இருந்தோம் என்பதை உய்த்துணரும் ஆற்றல் நமக்கு இல்லை. ஆதலால் மானிடப் பிறவி பெற்றோர், தங்கம், வெள்ளி, கல், மரம், சாளக்கிராமம் முதலிய யாதாயினுமொரு கருப்பொருளில் தான் எண்ணியவாறு மேற்சொன்னவற்றில் ஏதேனும் ஓர் உருவில் வழிபாடு செய்ய விரும்புகிறார் இதுவே அர்ச்சை.

*5. அருச்சை :* அருச்சை எனில் விக்கிரக அல்லது உருவ வழிபாடு. இந்தியத் திருநாட்டில் தெற்கே கருங்கல்லிலும், வடக்கே சலவைக் கல்லிலும் இறைவனைப் படைக்கின்றனர்.

மனிதன் உருவாக்காமல் பக்தர்களின் வேண்டுகோளை ஏற்று எம்பெருமான் தாமே விரும்பி அர்ச்சாவதாரமூர்த்தியாக எழுந்தருளித் தம்மை வெளிக்காட்டியதும் உண்டு.

மண்ணுலகில் வாழ்வோர் மனம் நிறைந்த பரம்பொருள் அர்ச்சா வடிவ மூர்த்தமேயாகும்.

பரம், வியூகம், விபவம், அந்தர் யாமித்வம் ஆகிய நிலைகளை நம்மாழ்வார்,

விண்மீதிருப்பாய், மலைமேல் நிற்பாய், கடற்சேர்ப்பாய்,
மண் மீதுழல்வாய், இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்
என் மீதியன்ற புறவண்டத்தாய் என தாவி

என்கிறார்.

அவரே "நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பிரியன ஒன்றலா அருவாய் உருவாய்" எனப் பாடுகிறார்.

## திவ்ய தேசங்கள்

திவ்யம் என்னும் வடசொல்லுக்கு இறைத்தன்மை என்பது பொருள். ஆழ்வார்களின் பாசுரங்கள் பெற்ற திருத்தலங்களே திவ்ய தேசங்கள்.

சேஷத்ரம், வனம், நதி, சிந்து, புரம்,
புஷ்கரிணி, ததா
விமானம், சப்த பண்யஞ்சயத்ரதேனே

ஆகிய ஏழு புண்ணியங்கள் அடங்கிய திருத்தலத்தை அஷ்டாச்சர மந்திரம் நிலைபெற்ற ஒன்றைத் திவ்விய தேசம் என்பர். அவை பன்னிரு ஆழ்வார்களால் பாடப் பெற்றவை. 'ஸ்தலம்' (தலம்) என்றால் ஆச்சார்யர்களால் உருவாக்கப் பெற்றவை.

பன்னிரு ஆழ்வார்களால் பாடல் பெற்ற திருத்தலங்கள் நூற்றியெட்டு ஆகும்.

ஆழ்வார்கள் காலத்து இருந்த, ஆழ்வார்களின் பாடல் பெறாத திருத்தலங்கள் சில உள்ளன. அவற்றில் குறிப்பாகக் கூற வேண்டுமாயின் காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் திருக்கோயிலையும், குருவாயூரப்பன் திருக்கோயிலையும் குறிப்பிடலாம். காஞ்சிபுரத்தில் திருப்பாடகம் முதலியவற்றைப் பாடிய, மங்களா சாசனம் செய்த ஆழ்வார்கள் இவற்றைப் பாடாது விட்டது ஏன்?

அவை ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டிருந்தால், புராணங்களில் விரித்துரைக்கப்பட்டதாயின், தாமே தோன்றியவையாயின், பிரம்மாதி தேவர்களால் உண்டாக்கப்பட்டவையாயின், மன்னவர்கள், அடியார்களால், பிரதிட்டை செய்யப்பட்டிருப்பின், ஏற்கனவே வேறு வகைகளில் அபிமானிக்கப்பட்டிருப்பதால் ஆச்சார்யர்களும் அவற்றை அபிமானிக்கவில்லை அல்லது பாடவில்லை என்பர்.

## பழம் பாடல்

ஆழ்வார்கள் அபிமானம் பெற்ற, ஆழ்வார்களின் அருட்பாடல் பெற்ற திருத்தலங்கள் எத்தனை, எத்தனை என்பதனைப் பழம் பாடல் இவ்வாறு கூறுகிறது.

ஈரிருபதாஞ் சோழம் ஈரொன்பதாம் பாண்டி
ஓர் பதின்மூன்றாம் மலைநாடு ஓரிரண்டாம் - சீர்நடுநாடு
ஆறோடீரெட்டுத் தொண்டை அவ்வட
நாடாறிரண்டு கூறும் திருநாடு ஒன்றாக் கொள்

**108 திவ்ய தேசங்களில் இரண்டு, இவ்வுலகில் காண இயலாதவை. ஒன்று பரமபதம், மற்றொன்று பாற்கடல். இவ்வுலகில் 106ஐச் சேவித்தவர்களை எம்பெருமானே பரமபதம், பாற்கடலுக்கும் அழைத்துச் சென்று சேவை சாதிக்கிறார் என்பது வைணவக் கொள்கையாகும்.**

108 திவ்ய தேசங்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமானார் அடியவருக்கு நின்ற திருக்கோலம், அமர்ந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம் என மூன்று திருக்கோலங்களில் காட்சி தருகிறார்.

## மூன்று கோலங்களின் பொருள்

பரம்பொருளான திருமால் அமர்ந்த நிலையில் அனைத்து உலகங்களையும், அவற்றின் இயக்கத்திற்குக் காரணமான தேவர்களையும், அதிதேவதைகளையும் படைக்க எண்ணிய உடனே எழுந்து நின்றார். அப்போது அனைத்தும் படைக்கப்பட்டு விட்டமையால், இவ்வியக்கம் தொடர்ந்து முறை வழுவாது செயல்படத் துயிலும் கோலத்தில் அனைத்தையும் நிருவகித்துக் கொண்டே உறங்காமல் அறிதுயிலில் உள்ளார் என்பர்.

திருமாலை நின்ற திருக்கோலத்தில் வணங்குவது ஸ்தாபனா எனவும், அமர்ந்த திருக்கோலத்தில் வணங்குவது அஸ்தாபனா எனவும், பள்ளி கொண்ட வடிவத்தில் தொழுவது சமஸ்தாபனா எனவும், வாகனங்களில் பல வடிவங்களில் அமைப்பது பரஸ்தாபனா எனவும், சன்மார்ச்சையுடன் அமைப்பது பிரதிஷ்டானா எனவும் பாஞ்சராத்ர பாத்மம் கூறுகிறது.

108 திவ்ய தேசங்களில் 67 தலங்களில் நின்ற திருக்கோலத்திலும், 17 தலங்களில் அமர்ந்த திருக்கோலத்திலும், 24 திருத்தலங்களில் சயனத் திருக்கோலம் கொண்டு விளங்குகிறார்.

இந்த 24 சயனக் கோலங்களில் 18 கிழக்கு நோக்கியது மூன்று. மேற்கு நோக்கிய மூன்று தெற்கு நோக்கிய சயனமாகும்.

## சயனங்கள்

திருமாலின் சயனங்கள், ஜலசயனம், தலசயனம், புஜங்க சயனம், அல்லது சேஷசயனம், உத்தியோக சயனம், வீர சயனம், போக சயனம், தர்ப்ப சயனம், பத்ர சயனம், மாணிக்க சயனம், உத்தான சயனம் என்று பத்து வகைப்படும்.

இந்தியத் திருநாட்டில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருத்தலங்களில் மேலே குறிப்பிட்ட சயனங்களில்

அருள்பாலிக்கும் அந்தப் பேரருளான். திருக்கோயில் வலம் வரவும், ஆழ்வார்கள் அருளிச் செய்த திருப்பாடல் பெறாத திருத்தலங்களில் நிலை கொண்டு அறிதுயல் கொண்ட திருமாலவனின் திருக்கோலம் காணும் ஆசையின் முயற்சியை இங்கே எதிர்வரும் பக்கங்களில் கண்ணுறலாம்.

மாலவன் பள்ளிகொண்ட கோலத்துத் திருத்தல வரலாறு, திருக்கோயில் வரலாறு, திருஉரு, திருவிழாக்கோலம் என்று காண்பதில் அடியவர்களுக்கு ஒரு சுகம். நின்ற கோலத்தவனையும், இருந்த கோலத்தவனையும் விடக் கிடந்த கோலத்தவனின் தோற்றங்கள் தான் எத்தனை, எத்தனை என்று வியக்கிறோம்.

எல்லாம் பள்ளி கொண்ட தோற்றம்தானே என்று படியளக்கும் அந்தப் பரம்பொருளை எளிதில் எடுத்துக் கூறி விட இயலாது.

படி அளப்பவன் மரக்காலைத் தலைக்கு வைத்துக் காவிரியின் கரையில் திசை ஒன்றை நோக்கி நிற்கிறான் என்று சொல்ல வியலாதவாறு படிகொண்டு கிடக்கிறான்.

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு நோக்கி நின்றும், இருந்தும் காட்சி தரும் அந்த மாயவன் வடக்கு நோக்கிச் சயனம் ஏதும் கொள்ளவில்லை.

ஒரே சன்னிதியில் நின்று, இருந்த கிடந்தவனாகவும் அப் பெருமான் கொண்ட கோலங்கள் அமைந்த திருத்தலங்கள் பல உண்டு. அவற்றில் திருநீர்மலை, திருக்கோட்டியூர், மதுரை திருவல்லிக்கேணித் திருத்தலங்களைச் சான்று காட்டலாம்.

திருக்கோட்டியூரில் முதல் தளத்தில் பாற்கடல் வண்ணனாய், இரண்டாவது தளத்தில் நின்ற நாராயணனாகவும், மூன்றாம் தளத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் பரமபதநாதனாய் வீற்றிருக்கிறார்.

பள்ளி கொள்ள விழைந்த பரந்தாமன் கடல், சோலை, மலை, ஆற்றுக்கரை என்று இயற்கையின் அரவணைப்பில் பல இடங்களில் காணப்படும் காட்சி கண்ணுக்கு இனிய காட்சி.

பாண்டி நாட்டுத் திருப்பதிகளில் திருக்கோயில்கள் மூன்று அடுக்குகள் உடையனவாய், மூன்று தலங்களிலும் நின்ற, இருந்த,

கிடந்த கோலத்தில் ஒவ்வொரு தலத்திற்கு ஒவ்வொரு கோலமாய் அருள்பாலிக்கக் காண்கிறோம்.

திருக்கோட்டியூர், கூடல் மாநகரில் இவ்வாறு தோன்றுவது போல், அருள்பாலிப்பதுபோல் சோழ நாட்டில் நாம் காண இயலவில்லை.

சோழ நாட்டில் நாற்பது திவ்யதேசங்கள் உள்ளன. அதனை,

உயர் திருவரங்கம் உறையூர் தஞ்சை
அயர்வகற்றிடும் அன்பில் கரம்பனூர்
புகழ் வெள்ளறை புள்ளம் பூதங்குடி
அந்தமில்பேர் நகர் ஆதனூர் அழுந்தூர்
போதமருட் சிறு புலியூர்ச் சேறை
மாதலைச் சங்க நாண்மதியங்குடந்தை
விரவு கண்டியூர் விண்ணகர் கண்ண
புரமுடனாலி பொன்னாகை நறையூர்
நத்துநந்தி புரவிண்ணகர மித்தனூர் திருச்
சித்திரக் கூடஞ்சீராம விண்ணகரம்
கூடலூர் கண்ணங்குடி கண்ணமங்கை
வீடருள் கவித்தலம் வெள்ளியங்குடி
வண்ண மணி மாடக்கோவில் வைகுந்த
விண்ணகரம் அரிமேய விண்ணகரம்
திருத்தேவனார்த் தொகை சிறந்த தாயவண்
புருடோத்தமஞ் செம்பொன் செய்கோயிலே
பாவனத் தெற்றியம்பலம் பலமணிக்கூடங்
காவளம் பாடிக்கவின் வெள்ளக்குளம்
துதிபார்த்தன் பள்ளிசேர், சோழ நாட்டுப்
பதியதோர் நாற்பதும் பணிந்து போற்றுவோம்

தொண்டை மண்டலம் ஆழ்வார்கள் நால்வர் அவதரித்த திருத்தலங்கள் கொண்ட பெருமைக்குரியது. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியோர்

திருவெஃகா, மாமல்லை, திருமயிலை, திருமழிசை ஆகியவற்றில் முறையே அவதரித்துள்ளனர்.

வடகலை சம்பிரதாய, கவிதார்கிக சிம்காயகேசரி, வேதாந்த தேசிகர், பெரியநம்பி, எம்பார், முதலியாண்டார், கூரத்தாழ்வார் முதலியோர் அவதரித்த திருமண்டலம் இது.

திருவெஃகா, திருப்பரமேச்சுர விண்ணகரம், திருவள்ளூர், (திருவல்லிக்கேணி) திருநீர்மலை, திருக்கடல்மல்லை, திருக்காரகம் ஆகியன மாயவன், மாமாயன் பள்ளி கொண்ட திருத்தலங்கள்.

## மலை நாடு

இயற்கை கொஞ்சி விளையாடும் எழிற் கோலங்கொண்ட மலைநாடாம், மலையாள நாடு, தமிழ்த் திருமண்டலத்தில் திவ்ய தேசங்களைக் கொண்டிருந்தாலும் தமிழகத்தில் உள்ளது போன்று கோபுரங்கள் விமானங்கள், சிற்பங்கள் கொண்டு இலங்கவில்லை.

இந்நாட்டுக் கோவில்களை அம்பலம் என்னும் தமிழ்ச் சொல்லால் அழைக்கின்றனர். இத்திருநாட்டுத் திவ்ய தேசங்கள் நான்கு வாயில்களுடன், நாற்புறமும் சுவர்கள் கொண்டு சதுர வடிவில் அமைந்தவை. கருவறை வட்ட வடிவமாகவும், கருவறை மேல் முக்கோண வடிவில் கூம்பு வடிவ அமைப்புடனும் அமைந்து, ஆலயத் தூய்மையை எங்கும் பறை சாற்றுகின்றன. தமிழகம் போலக் கொடி மரங்கள் உள்ளன. கருடாழ்வாரும் இருக்கின்றார்.

மலை நாட்டு வழிபாட்டு முறையும் வேறுபட்டது. ஆடவர், மேல் சட்டை, பனியன் அணிந்து செல்லக்கூடாது. சில திருக்கோயில்களில் முழுக்கால் சட்டை அணியாது வேட்டியே அணிய வேண்டும். வைணவத்திருக்கோயில்களில் தீர்த்தம், துளசி, சடாரி இருப்பதில்லை. இங்கு மாறுபட்ட வழிபாட்டு முறையைப் பகவானே ஏற்றுக் கொண்டதாகவும் கூறுவர். இம்மலை நாட்டு ஆழ்வார் குலசேகர ஆழ்வார் ஆவார். மன்னராய் இருந்தவர், அடியவராய் ஆழ்வாராய்ப் பெருமாள் என்னும் எந்த ஆழ்வாரும் பெறாத திருப்பெயர் பூண்டொழுகினார்.

திருவனந்தபுரம், திருவட்டாறு ஆகிய இரண்டு திருத்தலங்களே மலை நாட்டில் எம்பெருமாள் பள்ளி கொண்ட திவ்ய தேசங்களாகும்.

## பாண்டிய நாடு

பன்னிரு ஆழ்வார்களில் நால்வரைக் கொண்ட இந்நாட்டிலேதான் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் வளர்த்தெடுத்த இளங்கிளியாள் ஆண்டாளும், வேதம் தமிழ் செய்த மாறன் நம்மாழ்வாரும், அவரின் திருவடி போற்றி உயந்த மதுரகவிப்பிரானும் அவதரித்த நாடு தமிழ் காத்த, தமிழ் வளர்த்த பாண்டிய மண்டலமாகும்.

வெள்ளாறது வடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனர்கன்னி தெற்காகும் - உள்ளார்
ஆண்டகடல் கிழக்கா ஐம்பத்தாறு காதம்
பாண்டி நாட்டெல்லை பகர்

என்று பாண்டித் திருநாட்டின் எல்லை பகர்கிறது பெருங்கதை.

பாண்டிய நாடு இன்றைய மதுரைக்கும், மதுரைக்கு அப்பாலும் உள்ள நிலப்பரப்புத்தான். பாண்டி நாட்டிலுள்ள பதினெட்டுத் திவ்ய தேசங்களைக் காட்டும் பாடல் இது.

துய்யமா லிருஞ்சோலை கோட்டியூர்
மெய்யம் புல்லாணி விளங்குதன் காளூர்
குளிர்க்குமெழின் மோகூர் - கூடலூர் வில்லிபுத்தூர்
மிளிர்க குருகூர்த் தொலை வில்லிமங்கலம்
சீவரமங்கை சீவைகுண்டம் தென்பேரை
மாவளப்புளிங்குடி வரகுணமங்கை
கோன் தவிர்குளத்தை குறுங்குடிகோளூர்
பாண்டி நாட்டுப்பதி பதினெட்டு மேத்துவம்

திருப்புளிங்குடி, திருக்கோளூர், திருவில்லிபுத்தூர், திருப்புல்லாணி, திருமெய்யம், திருக்கோட்டியூர் ஆகியன பாண்டிய நாட்டுத் திவ்ய தேசங்களில் பெருமாள் பள்ளி கொண்ட திருத்தலங்கள் ஆகும்.

வடநாட்டில் மங்களாசாசனத் திருத்தலங்களில் பள்ளி கொண்ட பரந்தாமன் திருக்காட்சி அமைந்துள்ள திருத்தலம் திருப்பிரிதி மட்டுமேயாகும்.

நில உலகில் காணவியலாத சூட்சும சரீரம் பெற்றபின் மானிடர் செல்லக்கூடிய திருப்பதிகள் என்று இரண்டு திருப்பதிகளைக் கூறுவர். அவற்றில் ஒன்று திருப்பாற்கடல். அங்கே வியூக நிலையில் தெற்கே திருமுக மண்டலம் கொண்டு ஆதிசேட சயனத்தில் எம்பெருமான் க்ஷீராப்தி நாதனாகக் காட்சி அளிப்பான். இத்திருப்பாற்கடலைப் பெரியாழ்வார் முதல் நம்மாழ்வார் உள்ளிட்ட, மதுரகவி தவிர்த்த பதினோரு ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

மற்ற 106 திவ்ய தேசங்களையும் சேவித்தவர்களை அவர்கள் பரமபதித்த பின் பகவானே இந்தத் திவ்யதேசத்திற்கு அழைத்துச் சென்று சேவை சாதிக்கின்றார் என்பது பெரியோர்கள் நம்பிக்கை.

**இயல் : இரண்டு**

# கோயில்

திருவைணவத் திவ்ய தேசங்களில் முதன்மை பெற்றுக் 'கோயில்' எனும் சிறப்புப் பெயர் கொண்டு விளங்குவது ஸ்ரீரங்கம் எனப்படும் திருவரங்கம் ஆகும். பூலோக வைகுந்தம், போக மண்டபம் முதலிய பெயர்களும் இதற்கு உண்டு.

திருமாலின் திவ்வியத் திருத்தலங்கள் 108ல் தலையாயது திருவரங்கம். கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று முதன்மையாகச் சொல்லப்பட்டவை திருவரங்கம், திருப்பதி, அருளாளன் வரதப் பெருமாள் திருக்கோயில் ஆகியன. இம்மூன்றில் முதன்மை நிலை திருவரங்கத்திற்கே எனலாம். செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் என ஆண்டாள் மங்களாசாசனம் செய்துள்ளார்.

பெரிய கோயில், பூலோக வைகுண்டம், போக மண்டபம் என்றெல்லாம் போற்றப்படும் திருக்கோயில் இது. தொன்றுதொட்டு வரும் மரபின் படி திருவரங்கமே தலை சிறந்த திவ்ய தேசம் என்று அனைவரும் மதித்துப் போற்றி வருகின்றனர். ஆதலால், **கோயில்** என்னும் சொல், வைணவத்தில் திருவரங்கம் கோயிலையே காரண இடுகுறிட பெயராகச் சிறப்பாகக் குறிக்கும்.

திருவரங்கம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையும், பண்பாடும், நாகரிகமும் கொண்ட திருத்தலம்.

திருவரங்கத் திருக்கோயிலின் திருத்தல வரலாறு, பழமைச் சிறப்பு ஆகியன காணும் முன் அதன் தனிப்பெரும் சிறப்புகளைக் காண்போம். அச்சிறப்புகள் ஒன்றல்ல இரண்டல்ல பலவாகும்.

* ஆசியாவிலேயே உயர்ந்த 236 அடி உயரம் உள்ள விண்ணை மூட்டும் கோபுரம், 156 ஏக்கர் பரப்பளவு, 21 கோபுரங்கள், 7 திருச்சுற்றுக்கள், 42 உட்துணைக் கோயில்கள், 8 துணைக் கோயில்கள் கொண்ட திருத்தலம் உலகிலேயே இது ஒன்றே.

* இராமாயணக் காலத்திலிருந்தே இருந்துவரும் கோயில் என்னும் சிறப்புடன், சிலம்பும், நாலாயிரமும் திருவரங்கன் பெருமை பேசும் திருக்கோயில் இது.

* பட்டர்பிரான், பிள்ளை லோகாச்சாரியார், வடக்கு வீதிப்பிள்ளை பெரிய நம்பி ஆகியோர் வாழ்ந்திருந்தத் திருத்தலம்.

* பாமாலை பாடிக் கொடுத்துப் பூமாலை சூடிக் கொண்ட ஆண்டாள் பிராட்டி, திருப்பாணாழ்வார், பீபிநாச்சியார், உடையவர் என்று உத்தமத் திருவடியார்கள், திருமாலாம் அரங்கனுடன் ஒன்றிக் கரைந்த திருத்தலம்.

* அவதாரபுருடனாய் அவதரித்த இராமபிரான் வழிபட்டது இத் திருக்கோயில். அதனால், அரங்கனைச் சுற்றி நாற்புறமும் இராமர் சன்னதிகள் உடைய கோயில்.

* பள்ளி கொண்டு அருள் பாலிக்கும் இந்தப் பரந்தாமன் காலத்தால் மூத்தவர். பிரம்மா, சூரியன், வைவஸ்தவமனு இக்ஷ்வாகு, சூரிய குலத்தோர், தசரதர், இராமர் என்று ஒரு பாரம்பரியம் மிக்கோர் வழிபட்ட அரங்கன் திரு உருவை அயோத்தியிலிருந்து விபீடணன் பெற்று வந்த பெருஞ்சிறப்பும் இதற்கு உண்டு.

* 'கங்கையில் புனிதமாய காவிரி' என்பதனை மெய்ப்பிக்கக் காவிரிக்கும், தர்ம வர்மாவிற்கும் அளித்த வாக்கு மெய்ப்படக் காவிரியின் கரையில் திருவரங்கன் எழுந்தருளிய திருத்தலம்.

* பள்ளிகொண்ட அரங்கரைப் பெரிய பெருமாள் எனவும், உற்சவ மூர்த்திப் பெருமாளை நம்பெருமாள் என்றும் அழைக்கின்றனர்.

* எங்கும் இல்லாக் கோலமாய், விபீடணுக்காகத் தென் திசை நோக்கிக் கிடக்கும் திருஉருவத்தான் இப்பெருமான்.

* 'மானிடவர்க்கு என்று பேச்சுப்படின் வாழ்கிலேன்' என்று, அரங்கன் மீது காதல் கொண்ட திருப்பாவை நாச்சியார் திருமொழி நிறைவேறிடப், பெரியாழ்வார் வளர்த்து எடுத்த இளங்கிளியாளுக்கு இப்பெருமான் பல்லக்கு அனுப்பி அழைத்துத் தன்னோடு ஒன்றிடச் செய்த திருவூர்.

* எல்லா ஊர்களிலும் நின்ற கோலத்தில் நிற்கும் அத்திருப்பாவை, திருமணக்கோலத்தில் மணமகளாய் அழகுக் கோலம் கொண்டு அமர்ந்திருக்கும் அற்புதக் காட்சி காணும் திருத்தலம்.

* அது மட்டுமா? ஆண்டாள் என்றவுடன் அந்த உச்சிக் கொண்டையும், ஒய்யார அழகும் கொண்ட ஆண்டாள், கொண்டையின்றிக் கண்ணைக் கவரக் கிரீடத்துடன் காணும் அற்புத அழகு இங்கு மட்டும்தான்.

* பட்டர்பிரான் வில்லிபுத்தூரில் நந்தவனம் கொண்டு மலர்த் தொண்டு புரிந்ததுபோல், தம் மகளை மணந்த மணாளன் மனம் குளிரும் மலர்தொடுக்க மலர்த் தோட்டம் அமைத்தத் திருத்தலம் இது.

* மதுரகவி ஆழ்வாரின் நந்தவனம் ஒன்று அம்மா மண்டபத்தின் கீழ்ப்புறம் உள்ளது. வரலாற்றுப் புகழ் பெற்ற அந்த நந்தவனத்திலிருந்து இன்றும் பெருமாளுக்கும், தாயாருக்கும் துளசி, துளசி மாலை செல்கின்றன.

* 108 திவ்ய தேசங்களில் ஏழுதிருச்சுற்றுக்கள் கொண்ட ஒரே திருக்கோயில் இது. ஏழு திருச்சுற்றுக்களின் மொத்த நீளம் 14 கி.மீ. என்றால் ஒரு திருச்சுற்றைச் சுற்றி வந்தாலே இரண்டு கிலோ மீட்டர் ஆகிவிடுகிறது.

பெரியது கேட்கின்புவனம் பெரிது என்று அடியெடுத்துப் பாடிய ஔவை மட்டும் இன்று இருந்தால் இத்திருக் கோவிலின் பெரியவைகளுக்குப் பெரிய பட்டியலே போட்டிருப்பார். அந்த அளவிற்கு **எல்லாம் பெரியவைகள்.**

### பெரியவை

இராமபிரானே பெருமாள். அவரால் வழிப்படப்பெற்ற அரங்கன் ஆதலால் பெரிய பெருமாள். கோவில் பெரியது, ஆகையால் பெரிய கோயில். கோபுரம் பெரியது. இங்கு எழுந்தருளியுள்ள கருடனோ மிகப் பெரிய கருடன். இங்கிருந்த ஜீயர் பெரிய ஜீயர். இங்கிருந்த உரையாசிரியர் திருநாமமோ பெரியவாச்சான் பிள்ளை. திருமதில்களோ பெரிய திருமதில்கள். தாயாரோ பெரிய பிராட்டி. தளிகைகளோ பெரிய அவசரம் என்று பெயர் பெற்றவை. இங்குள்ள இசைக் கருவிக்குப் பெரிய மேளம் என்றும் பெயர். ஆண்டாளை மணமுடித்துக் கொடுத்த அரங்கனின் மாமனார் பெரியாழ்வார். காவிரியும், கொள்ளிடமும் தமிழ்நாட்டிலேயே பெரிய ஆறுகள். ஆழ்வார்களின் மங்களா சாசனங்களோ பெரிய மங்களாசாசனங்கள். எந்தத் திவ்ய தேசத்திற்கும் இல்லாச் சிறப்பு 11 ஆழ்வார்களால் 247 பாக்களால் பெரிய மங்களாசாசனம் பெற்றவர். இப்படிப் பெரிய செய்திகள் ஏராளம், ஏராளம். பட்டியல் இன்னும் நீளம் தான்.

* அன்றுச் சிறுவன் பிரகலாதனுக்குக் காட்சியளித்த நரசிங்கப் பெருமாள், பெரிய கவி கம்பர் கம்பராமாயணத்தை மண்டபத்தில் அரங்கேற்றியபோது, நேரில் வந்து காட்சி கொடுத்தவர் மேட்டழகிய சிங்கராகக் கம்பர் மண்டபத்தருகில் இன்றும் இருக்கிறார்.

* அரங்கருக்கு ஆண்டு முழுவதும் திருவிழா, விழாக் கோலம்தான். வருடத்தில் 322 நாள்கள் விழா நாட்கள்.

* கல்வெட்டுப் பூங்கா, கலைக்கூடம், சித்திரக் கூடம் என்று சிறப்பித்துக் கூறும் வண்ணம் கல்வெட்டுகள், கலைப்படைப்புகள், புடைப்புச் சிற்பத் தூண்கள் என்று ஏராளம்.

* சோழர், பாண்டியர், ஹொய்சாலர், விஜய நகர அரசர்கள், நாயக்கர்கள், ஆங்கிலேயர் என்று மட்டுமல்லாது பலரும் கொடை வழங்கிய திருக்கோயில் இது ஆகும்.

* திருவரங்கம் நவக்கிரகத் தலங்களில் ஒன்று. சுக்கிரன் வழிப்பட்ட திருத்தலம். அத்தோஷம் உள்ளவர் அரங்கத்து எம்மானை வழிபட்டால் சுக்கிரதோஷம் உடனே தீரும்.

* 'ஸ்வயம் வக்தம்' எனும் சுயம்புவாகத் தோன்றிய திருத்தலங்களில் முதலிடம் வகிக்கும் திருத்தலம். சைவத்திற்கு ராஜா நடராசப் பெருமான், வைணவத்திற்கு ராஜா அரங்கராசர்.

* நூற்றி எட்டுத் திவ்ய தேசங்களில் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றினும் சிறப்புற்று விளங்குவது திருவரங்கமாகும், திருமாலே, ஸ்ரீரங்கச் செல்வத்தை இடையூறின்றித் தினமும் வளரச் செய்' எனும் பாசுரம் 108 திவ்ய தேசங்களிலும் நித்ய ஆராதனையின் போது தவறாமல் இன்றும் ஓதப்படுவதால், அவற்றிற்கெல்லாம் தலைமையகம் திருவரங்கம்.

* அர்த்தசாமப் பூஜை முடிந்ததும் திவ்யதேச அனைத்துப் பெருமாள் அம்சங்களும் திருவரங்கத்தில் கூடிப் பெரிய பெருமாளை வழிபட்டுச் செல்வதாக ஐதீகம்.

* ஸ்ரீரங்கத்திற்குப் பன்னிரு ஆழ்வார்களுமே வந்து வாழ்த்தியிருக்கின்றனர். மதுரகவி ஆழ்வாரைத் தவிர ஏனைய ஆழ்வார்களும் 245 பாசுரங்களால் பெரிய பெருமாளை (அரங்கரை) மங்களா சாசனம் (மாடி) செய்திருக்கின்றனர்.

* திருவரங்கத்திலிருந்து, திருமால் திருத்தொண்டாற்றியவர்கள் ஸ்ரீமந் நாதமுனிகள் உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி ஆளவந்தார், திருவரங்கப் பெருமாளரையர், பெரிய நம்பிகள், எம்பெருமானார், முதலியாண்டான், கந்தாடையாண்டான், கூரத்தாழ்வான். திருக்குருகைப்பிரான், எம்பார், திருவரங்கத்து அமுதனார், பட்டர் நஞ்சீயர், நம்பிள்ளார், சிறியாயி, பெரியாயி பெரிய வாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள், வடக்கு திருவீதிப் பிள்ளை, பிள்ளை லோகாசாரியார், நிகமாந்த மகா தேசிகர், நைனாசார்யர், கூரகுலோத்தமதாசர், திருவாய் மொழிப் பிள்ளை, பெரிய ஜீயர்.

* இத்திருக்கோயில் திருமால் ஏழு செல்வ நாச்சியார்களுடன் விளங்குகிறார். அவர்கள் ஸ்ரீரங்க நாச்சியார், ஸ்ரீதேவி, பூதேவி, சோழவல்லி, சேரகுல வல்லி, ஆண்டாள், துலுக்கநாச்சியார்.

வால்மீகி, கம்பர் இராமாயணங்கள், ஸ்ரீபரமேதவாசம்ஷினி கோயிலொழுகு, குருபரம்பரா பிரபாவம். ஆறாயிரப்படி, திவ்ய சூரிசரிதம்,

பிரபன்னாமிர்தம், ஆசாரிய சூக்திமுக்தாவளி, லட்சுமி காளயம், திருமலை ஒழுகு, கண்ணன் திருமாளிகை ஒழுகு, பழநடைவிளக்கம், உபதேச ரத்தின மாலை, பெரிய திருமுடியடைவு, ஸ்ரீரங்கத் தலபுராணம் ஆகியன இத்திருத்தலப் பெருமை கூறுவன.

திருவரங்கனின் அருளாளர் தொகையோ ஏராளம். ஆதிசங்கரரின் ஸ்ரீரங்கநாதாஷ்டகம், இராமானுஜரின் ஸ்ரீரங்ககத்யம், பராசரபட்டரின் ஸ்ரீரங்க ராஜஸ்தவம், கூரத்தாழ்வானின் ஸ்ரீஸ்தவம், பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் திருவரங்கத்து அந்தாதி, மகாதேசிகனின் ஸ்ரீ பாதுகாசகஸ்ரம், ஆகியவையும் தவிர துளசிதாசர், புரந்தரதாசர், ஸ்ரீ பவநாசர், காளமேகம், பெருந்தேவனார், தியாகய்யர், முத்துச்சாமி தீட்சிதர் சியாமா சாஸ்திரி, அருணாசலக்கவிராயர், தண்டபாணி சுவாமிகள் இப்படித் திருவரங்கத்தானின் பெருமை பேசுவோர் ஏராளம்.

இயல் : மூன்று

# மரபுச் செய்திகள்

திருவரங்கத் திருத்தலம் பற்றி எண்ணற்ற புராணங்களும் வடமொழி நூல்களும் தமிழ் இலக்கியங்களும் ஏராளமான செய்திகளை அளிக்கின்றன.

வேதங்களைக் கவர்ந்து சென்ற மது, கைடபர் எனும் இரு அசுரர்களை அழித்து வேதத்தைக் கொண்டு வந்தார் பிரம்மா. பின்னர் எம்பெருமான் நாராயணனை நோக்கிப் பிரம்மா கடுந்தவம் இயற்றினார். அவருடைய கடுந்தவத்தால் திருப்பாற் கடலிலிருந்து அரங்க நாதராகத் திருமால் ஆதிசேடன் மீது பள்ளி கொண்டபடி கருடன் தாங்கி வர வந்தார். இந்திரன், சந்திரன், சூரியன் முதலாய தேவமாந்தர்களும் அதில் வீற்றிருந்தனர். நாரதரும், தும்புருவும் வீணை வாசித்தனர். பாற்கடலிலிருந்து ஒளிப் பிழம்பாய் வெள்ளமாய் வந்த ஸ்ரீ ரங்க விமானத்தைப் பிரம்மன் வணங்கித் தினமும் வழிபடும் பேறு வேண்டும் என வேண்டினார்.

பல்லாண்டுகள் ஸ்ரீரங்க விமானத்தைப் பிரம்மன் வழிபாடு நிகழ்த்தி வந்தார். பிறகு சூரியனும் சூரிய புத்திரன் வைவஸ்வத மனுவும், மனுவின் மகன் இட்சுவாகு என்பானும் வழிபட்டனர்.

அப்பெருமானை அயோத்திக்குக் கொணர்ந்து இட்சுவாகு வழிபட்டு வந்தார். இப்பெருமான் இவ்வாறு இட்சுவாகு குலத் தசரதன் முதல் இராமபிரான் வரையில் உள்ள சூரிய குல மன்னர் வழிபட்ட குலத் தெய்வமானான்.

இட்சுவாகு மன்னனால் விண்ணுலகில் இருந்து இங்குக் கொண்டு வரப்பட்டு அவன் குலத்தவர்களால் வழிபடப்பட்டு அனைவருக்கும் உரியவன் ஆதலால் இப்பெருமான் இட்சுவாகு குலதனம் எனப் பெயரும் கொண்டார்.

திரேதாயுகம் பிறந்தது. இராமனாய் அவதரித்த திருமால் இராவணனை அழித்து அயோத்தியில் முடி சூடிக் கொண்டார். இலங்கையிலிருந்து முடிசூட்டு விழாக்காண விபீடணன் வந்தார்.

விழா முடிந்து வீடணனுக்கு விடை கொடுத்து அனுப்புகையில் தம் முன்னோர்களால் பிரம்மனிடமிருந்து கொணரப்பட்ட திருவாராதன அரங்கத்து எம்மானை இராமர் அவருக்கு வழங்கினார். வால்மீகியின் இராமாயணம் விபீடணன் இப்பெருமானைப் பெற்றுத் திரும்பிச் சென்றதை யுத்த காண்டம் 128/90வது சர்க்கம் 87ஆவது சுலோகத்தில்

*விபீஷ்ணோபி தர்மாத்மா சஹைதர் நைர்ருதைர்ஷவை*
*லப்த்வா குலதனம் ராஜா லங்காம் ப்ராயாந் மஹாயசா:*

என்று கூறுகிறது.

மிக்க பயபக்தியுடன் 'ப்ரணவா க்ருதி' எனும் விமானத்துடன், பெருமாளை எழுந்தருளச் செய்து இலங்கைக்கு விபீடணன் கொண்டு வருங்கால் வழியில் காவிரியாற்றின் கரையை அடைந்த அவன் களைப்பின் மிகுதியால் காவிரியின் கரையில் விமானத்தை இறக்கிக் கீழே வைத்து விட்டுச் சிறிது நேரம் தங்கி இளைப்பாறினான்.

காவிரி, கொள்ளிட நதிகட்கிடையில் பள்ளி கொள்ளப் பரந்தாமன் பெருவிருப்புக் கொண்டார்.

பின்னர் மீண்டும் புறப்பட நினைத்து இறக்கி வைத்த விமானத்தை விபீடணன் எடுக்க முயன்றான். அவனால் பெயர்த்து எடுக்க இயலவில்லை. இறைவன் திருஉள்ளம்தான் இருப்பிடம் அது என்று முடிவு செய்து விட்டதே. அது அங்கேயே அழுந்திப்பதிந்து நிலை கொண்டு விட்டது. விபீடணன் கண்டுக் கலங்கிக் கவலை கொண்டு கண்ணீர் செறிந்து கதறியழுதான்.

அப்பகுதியை ஆண்டு வந்த சோழ மன்னன் தர்மவர்மன், வந்து பெருமாளைத் தொழுது, வீடணனுக்கு ஆறுதல் கூறினான். வீடணன் கனவில் வந்த பெருமாள் அங்கே தாம் பள்ளிக் கொள்ளத் திருவுள்ளம் பற்றியதை அறிவித்து, ஆண்டுக் கொருமுறை தன்னை வழிபட்டுச் செல்லலாம் என்று அருளினார்.

பின்னர் தர்மவர்மன் அவ்விமானத்தைச் சுற்றிக் கோயில் எழுப்பி, வழிபாடுகளுக்கு வகை செய்தான். தர்ம வர்மசோழன் எழுப்பிய திருக்கோயில் காவிரியின் வெள்ளப் பெருக்கினால் மண்ணில் மறைந்தது. அடந்து வளர்ந்த காடுகள் அதை மறைத்தன.

திருக்கோயில் மக்கள் நினைவினின்றும் மறைந்து போயிற்று. தர்மவர்மச் சோழன் வழிவந்த கிள்ளிவளவன் எனும் மன்னன் காட்டில் வேட்டைக்குச் சென்று, ஒரு மர நிழலில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தான்.

அப்போது ஒரு கிளி, வைகுந்தத்தினுள்ள திருமாலின் திருக்கோயிலாம் திருவரங்கம் இருந்த இடம் இதுவே, இதுவே என்று கூறிக் கொண்டிருந்தது. கிளி அதனை இவ்வாறு கூறியது என்பர்.

*காவேரீ விரஜா சேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்*
*பர வாசுதேவோ ரங்கேச: ப்ரத்யக்ஷம்ம் பரம்பதம்*
*விமானம் ப்ரணவாகாரரம் வேதச்ருங்கம் மகாத்புதம்*
*ஶ்ரீரங்கசாயீ, பகவாந் ப்ரணவார்த்த பிரவர்தக:*

ஶ்ரீரங்க நாதர் ஶ்ரீரங்கம் வர இரு காரணங்களைக் கூறுவர்.

அவற்றில் ஒன்று. தயரதன் புத்திரப் பேறு வேண்டிப் புத்திரகாமேஷ்டி வேள்வி நிகழ்த்திய போது சோழ மன்னன் தர்மவர்மன் அதில் கலந்து கொண்டான். அப்போது அவன் தசரதன் வழிபட்டு வரும் திருவரங்க விமானம் கண்டு இது தன் நாட்டில் இருந்தால் தன் நாடு செழித்தோங்கும் என்று ஆசை கொண்டான். அந்த ஆசையை நிறைவேற்றவே அரங்கன் காவிரிக்கரை எழுந்தருளினார் என்று கூறுவர்.

மற்றொன்று கங்கைக்கும், காவிரிக்கும் ஏற்பட்ட வாக்கு வாதத்தில் என் காலடியின் கங்கையை விடக் காவிரியைப் புனிதமாக்குவேன், கழுத்தில் மாலையாக அணிந்து கொள்வேன் என்று

கொடுத்த வாக்கை நிறைவேற்றவே காவிரிக் கரையில் பெருமாள் எழுந்தருளினார் என்பர்.

இந்த இரண்டு வாக்குறுதிகளையும் விபீடணன் வழி நிறைவேற்றிக் கொண்டார் என்று கூறுவர்.

### கிளைக் கதை

விபீடணன் காவிரி வந்த வரலாற்றில் விநாயகப் பெருமானுக்கும் ஒரு பங்கிருப்பதாகக் கிளைக் கதை ஒன்றும் உள்ளது.

விபீடணன் நித்தியக் கடன்களை முடிக்க ஸ்ரீரங்க விமானத்தைக் கீழே வைக்காமல் அங்கு நின்ற அந்தணச் சிறுவன் கையில் கொடுத்து, அதனைக் கடன்கள் முடித்துத் திரும்பி வரும் வரை கீழே வைக்க வேண்டாமென்று வேண்டியதாகவும், குறிப்பிட்ட நேரத்திற்குள் வராவிட்டால் கீழே வைத்து விடுவேன் என்று கூறிய சிறுவன், விபீடணன் குறிப்பிட்ட நேரத்தில் வராதபடியால், ஸ்ரீரங்க விமானத்தைக் கீழே வைத்துவிடக், கீழே வைத்த விமானத்தை எடுக்க முயன்று இயலாமல் போயிற்று. அச்சிறுவனைத் துரத்திச் சென்று தலையில் குட்டினான் விபீடணன். அச்சிறுவன் பிள்ளையாராக மாறி மலைக்கோட்டை உச்சியில் அமர்ந்தான். விபீடணன் குட்டியதால் வீங்கிய வீக்கம் இன்றும் உச்சிப்பிள்ளையார் தலையில் மேடாக உள்ளது என்பர்.

அப்போது வந்த தர்மவர்மன் விபீடணனுக்கு ஆறுதல் கூற விபீடணன் முன் தோன்றிய பெருமாள், தர்மவர்மனின் அவாவை நிறைவேற்றவும், காவிரிக்கு வழங்கிய வாக்கை நிறைவேற்றவும் அங்கு எழுந்தருளியதாகத் தெரிவித்ததுடன், அங்கிருந்த போதும், தென்புறமுள்ள இலங்கையை நோக்கிச் சயனிப்பதாகவும் கூறுவர்.

### மணல் மேடிட்டதேன்?

மண்டபங்கள், கோபுரங்கள் எழுப்பித் தர்ம வர்மன் ஆராதித்த பெருமாளின் திருக்கோயில் புதையுண்டது ஏன் என்பதற்கும் கீழ்க்கண்ட மரபுச் செய்தி வழங்கி வருகிறது.

சரமா முனிவர் என்பவர் நந்தவனம் அமைத்துத் திருச்சி மலைக் கோட்டைத் தாயுமானவருக்கு வழிபாடு நிகழ்த்தி வந்தார். வணிகன் ஒருவன் அவருடைய நந்தவன மலர்களைத் திருடி உறையூர்

அரண்மனை அரசிக்கு விற்று வந்தான். சரமா முனிவர் மன்னரிடம் முறையிட்டும் பலனின்றிப் போய்விடவே, தாயுமானப் பெருமானிடம் முறையிட்டார். தாயுமானவர் கோபமுற்றுக் கிழக்கு நோக்கித் திரும்பியவர் மேற்கு நோக்கித் திரும்பினார். உறையூரிலும், சுற்றுப்புறத்திலும் மண்மழை பொழிந்தது. பல ஊர்கள் மணலில் புதைந்தன. திருவரங்கத்துத் திருக்கோயிலை மண் மூடிற்று. உறையூர் வெக்காளி அம்மன் மக்களைத் தடுத்துக் காத்துக் கூரையின்றி வெயிலில் இருந்தாள். மணலில் புதையுண்ட திருக்கோயில் பல்லாண்டுகள் புதையுண்டு இருந்தது.

இந்த வேளையில்தான் தர்ம வர்மசோழன் கனவில் தோன்றிப் பெருமாள் தம் இருப்பிடம் அறிவித்தார். அரசன் மரத்தடியில் மணலை வாரச் செய்து அரங்கனின் திருக்கோயில் கண்டு வழிபாடு செய்தான். காவிரியைத் தென்னாறு, வடவாறு என இரு பிரிவாகப் பிரித்து வெட்டினான். அதுவே கொள்ளிடம், காவேரி. கிளியினால் திருவரங்கத்துப் பெருமாளைக் காணும் பேறு பெற்றதால் கிள்ளிவளவன் 'கிளிச் சோழன்' எனப் புகழ் பெற்றான்.

எனவே மரபுப்படி திருவரங்கத்திருக் கோயிலின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய தொடக்க கால நிகழ்வுகள் புராண, காப்பியங்களைத் தழுவித் திருப்பாற்கடலினின்று தோன்றியதாகக் கூறப்படும் இக்கோயில் இராம பிரானுக்கு உரியது.

## ஆய்வின்வழி

ஆற்று வெள்ளம், மணல் குன்றுகள், காடுகளால் மறைக்கப்பட்டிருந்தது என்பது வரலாற்றுண்மைக்குப் பொருத்தமாக அமையலாம். உண்மையாகவே இருக்கலாம். எனினும் கோயிலின் இன்றைய நிலையில் தொல் பொருள் சான்றுகள் ஏதுமில்லை.

இக்கதைகளில் கூறப்படும் சோழ மன்னர்கள் தர்மவர்மன், கிள்ளி வளவன் தொடர்புடையன கால முரண் உடையவை. தர்மவர்மன், கிள்ளி வளவன் பற்றி வரலாற்று நூல்களில் ஆதாரங்கள் இல. கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட கல்வெட்டுகள் மட்டுமே கோயில் திருச்சுவர்களில் கிடைக்கின்றன. சோழ மன்னர்கள் பழைய அடிப்படையில் இத்திருக்கோயிலை அமைத்திருக்கலாம்.

இயல் : நான்கு

# வரலாறு காட்டும் திருவரங்கம்

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல், கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரையில் தென்னிந்தியாவில் செழித்துச் சிறந்த வைணவத்தின் மிகப்பெரிய தலைமையிடமாகத் திருவரங்கம் திகழ்ந்தது.

இக்கோயிலின் தோற்றம் குறித்த புராணச் செய்திகளைக் கண்டோம். கி.பி. பத்தாம் நூற்றாண்டு வரையில் இலக்கியச் சான்றுகள் இக்கோயில் இருந்தமைக்குச் சான்று பகர்கின்றன. ஆனால் அவையும் கூட மிகக் குறைந்த தகவல்களே அளிக்கின்றன.

## சங்க இலக்கியத்தில்

சங்க இலக்கியம் தமிழகத்தில் திருமால் வழிபாடு குறித்த செய்திகளைத் தெளிவாகக் காட்டுவதுடன், பள்ளி கொண்ட பரம் பொருளைப் பற்றியும் கூறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

பாம்பணையிலே துயிலும் திருமாலைப் பற்றி முதன் முதல் கூறும் சங்க இலக்கியம் பெரும்பாணாற்றுப் படையாகும்.

*நீடுகுலைக்*
*காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்குப்*
*பாம்பணைப் பள்ளியமர்ந்தோன்*

**(பெரும்பாண் 371–373)**

செறிந்த நீண்ட பூங்கொத்துக் காந்தளையுடைய அழகிய பக்க மலையிலே யானை படுத்திருந்தாற்போலப் பாம்பணையாகிய படுக்கையில் அவன் துயில் கொண்டான். நான்முகனைப் பெற்ற நீல நிறத்தை அளந்தவன். திருவாகிய மறுவை அணிந்த மார்பினை உடையவன். கடல் போன்ற நிலத்தையுடையவன் என்று இன்னோரிடத்தில் அந்நூல் கூறுகின்றது.

சிலம்பில்,

*நீலமேகம் நெடும் பொற்குன்றத்துப்*
*பால் விரிந்து அகலாது படிந்ததுபோல*
*ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறந்*
*பாயற் பள்ளிப் பலர் தொழுது ஏத்த*
*விரிதிரைக் காவிரி வியன்பெருந்துருத்தித்*
*திருவமர் மார்பன் கிடந்த வண்ணம்*

என்று கூறுகிறது.

"விரிந்த அலைகளுடன் அமைந்த மிகப்பெரிய காவிரியாற்றின் இடைக்குறையில், திருமகள் விரும்பி உறையும் மார்பை உடையவரும், நீலவண்ணம் கொண்டவருமான திருமால், ஆயிரம் விரிந்த தலைகளையுடைய ஆதிசேடன் என்னும் சிறந்த பாம்பணையாகிய பள்ளியின் மீது அழகுறச் சாய்ந்து கொண்டிருக்கும் தன்மையினை, "நீல மேகம் நீண்ட பொன்குன்றின் பால் விரிந்து அகலாது படிந்தது போலத் திகழ்கின்றது" என்பது பாடல் விளக்கம்.

ஆதிசேடன் மீது அரங்கன் பள்ளி கொண்டதை அரங்கநாதர் என்று தென் மரபினரும், **சேஷசயன மூர்த்தி** அல்லது அனந்த சயன **விஷ்ணு** நாராயணர் என வட மரபினரும் குறிப்பிடுகின்றனர். திருவரங்கப் பெருமானின் திருஉரு பக்தி நெறிக்குரிய சிறப்பான திருஉருவாகும். இருக்கு வேதத்திலும் கூட இத்திருஉருவினைப் புகழ்ந்துரைத்துள்ளதைக் காணலாம்.

**மேயான் திரை** என்னும் அரங்கம், **தென்னரங்கம், தேனார் திருவரங்கம்** என்னும் **திருவரங்கம்** சுற்றிலும் புனல் சூழத் தென்னை மரங்களுடைய திருத்தலத்தில் அமைந்திருப்பதாகக் காணலாம்.

தொண்டரடிப் பொடி இத்திருவரங்கத்தை

'சிறப்புடைய மறையவர் வாழ் திருவரங்கம்'
'தேன் கொடுத்த மலர்ச்சோலை திருவரங்கம்'
'செழிப்புடை காவிரி வந்து அடிதொழும் சீர் அரங்கம்'
'நல்லார்கள் வாழும் நளிர் அரங்கம்
'பெரியகோயில் மதில் திருவரங்கம்'
'அஞ்சிறைய வண்டு வாழ் பொழில் சூழ் அரங்கம்'

என்றெல்லாம் சிறப்பிப்பார்.

'**ஆராமம் சூழ்ந்த அரங்கம்**' என்பார் திருமங்கை மன்னவர். '**நினைப்பரிய நீளரங்கத்தார்**' எனப் பூதத்தாழ்வாரும், '**கேட்பார்க்கு அரும்பொருளாய் நின்ற அரங்கனே**' எனத் திருமழிசையும் புகழ்வர்.

## திருமங்கையாழ்வார்

திருவரங்கத்துத் திருக்கோயிலின் திருமதிலைத் திருமங்கையாழ்வார் கட்டியதாகக் கோயில் ஒழுகு கூறுகின்றது. திருமங்கையாழ்வார் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். ஆனால் அவர் கட்டியதனை உறுதிப்படுத்தக் கூடிய சான்றுகள் எதுவும் இத்திருச் சுற்றுச் சுவர்களில் காணப் பெறவில்லை.

## சோழர்

சோழப் பெருவேந்தர்களின் காலத்திற்குப் பின் உள்ள கல்வெட்டுக்கள் ஏராளமாக உள்ளன.

இவற்றில் பழமையானதாகிய கல்வெட்டு **முதலாம் பராந்தகனின்** ஆட்சியாண்டுக்குரியது, அவ்வரசன் திருவரங்கத்துத் திருக்கோயிலுக்கு ஒரு வெள்ளிக் குத்து விளக்கு அளித்ததையும், அதற்குக் கற்பூரம், பருத்தித் திரிநூல் வாங்குவது உள்ளிட்ட செலவுக்காக 51 பொற்காசுகள் வழங்கியதையும், அவ்வரசன் அக்கோயிலில் மூன்று இரவுகள் வேதம் ஓதப்படுவதற்காகக் கொடை வழங்கியதையும் கூறுகிறது.

இரண்டாம் இராசேந்திர சோழனின் புதல்வர்களில் ஒருவனாகிய இராச மகேந்திர சோழன் முதல் திருச்சுற்றில் திருமதிலைக் கட்டியதாகக் கல்வெட்டு கூறுகின்றது. அதுவே இராச மகேந்திரன் திருவீதி என வழங்குகின்றது.

## உடையவர் திருப்பணிகள்

திருப்பெரும் புதூரில் பிறந்த உடையவர் இராமானுசர் திருவரங்கத்தில் வந்து தங்கித் திருக்கோயில் வழிபாட்டு நிருவாக முறைகளை ஒழுங்கு செய்தார். எதிராஜா என்று பெயர் பெற்ற உடையவர் இந்தியா முழுமையிலும் ஸ்ரீ வைணவத்தைப் பரப்பியவர். வேதாந்த தத்துவ ஞானத்தில் வல்லவராய், சிறந்த ஆச்சாரியர்களுள் ஒருவராய் இணையற்றுத் திகழ்ந்தவர் அவர். சமய வாதங்களில் தலைப்பட்ட துறவு நெறியாளர் அவர்.

இராமானுசர் வகுத்த நெறிமுறைகளே வைணவ ஆலய வழிபாட்டு முறைகளின் அடித்தளமாய் அமைந்தன. வைணவக் கோவில் வழிபாட்டு முறைகள் இரண்டு. ஒன்று வைகானசம். மற்றொன்று பாஞ்சராத்திரம். ஐந்து இரவுகள் பெருமாளே தம்மை வழிபட அருளிச் செய்த முறை இது என்பர். இராமானுஜர் 'தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தினார்' பாஞ்சராத்ர முறையை மீண்டும் ஏற்படுத்தினார். ஐந்துகொத்து என்றிருந்த ஆலய நிருவாகஸ்தர்களைப் பத்துக் கொத்தாகச் செய்தார். இராமானுஜருக்குப் பின் முதலியாண்டான் வசம் ஒப்படைத்து விட்டுச் சென்று முதுமையில் திருவரங்கம் திரும்பினார்.

## சாளுக்கியச் சோழர்

முதலாம் குலோத்துங்கன் முதலாய்த் தொடங்கிய சாளுக்கியச் சோழ மரபின் மூன்றாம் குலோத்துங்கன் இருபதாம் ஆட்சிக் கல்வெட்டு, திருவரங்கத் திருக்கோயில் நிருவாகம் பற்றி எடுத்துரைக்கிறது.

இக்கோயில் அலுவலர்களுக்கும், திருவானைக் கோவில் ஜம்புகேசுவரர் ஆலய சைவ நிருவாகத்தவர்களுக்கும் இடையில் இருந்த பூசலைத் தீர்த்து வைத்த செய்தி அறிகிறோம். ஆலயத் தலைமையைக் கந்தாடை இராமானுஜர் ஏற்ற காலம் இது.

### கங்கர்களும், பாண்டியர்களும்

திருவரங்கம் கோவிலைக் கி.பி. 1223–1225இல் தலைக்காட்டுக் கங்கர்கள் கவரவே, கோவில் நிர்வாகம் சீர்குலைந்தது. தென்பாண்டி மண்டலத்தில் அரசோச்சிய பிற்காலப் பாண்டிய மன்னவர் மாறவர்மன் சுந்தர பாண்டியன் கருநாடகத்தைக் கைப்பற்றித் திருவரங்கத்தையும் கங்கர்களிடமிருந்து மீட்டார்.

### ஒய்சாளர்

ஒய்சாள மன்னரான சோமேசுவரன் தன் 16ஆம் ஆட்சியாண்டில், கி.பி. 1240இல் இத்திருக்கோயிலுக்கு நந்தவனம் ஒன்று அமைத்து மூன்றாம் திருச்சுற்றில் சாலை ஒன்றும், ஏற்படுத்தியுள்ளார். ஒய்சாள அரசரின் படைத்தலைவர்களான உடன்பிறப்புக்கள் இருவர் பல்வகை அறக்கொடைகளை வழங்கியது குறிப்பிடத் தக்கது. 1234 முதல் 1262 வரை ஹொய்சாள சோமமேதவன் ஆலயத்தில் பல திருப்பணிகள் செய்தார். ஹொய்சாள மன்னர்களால் வழிபாடுகள் மீண்டும் தொடர்ந்தன.

ஹொய்சாளர் கலைப்பணி, கலையழகு கொஞ்சும் கண்ணபிரான் சிற்பங்கள், குழலூதும் பிள்ளையார் கண்ணன், திருச்சுவரில் இடம் பெற்றிருக்கக் காண்கிறோம். ஹொய்சாள இராமநாதர் பல திருப்பணிகளோடு ஸ்ரீ கோபால கிருஷ்ணர் சன்னதியைக் கட்டி முடித்தார்.

### முதலாம் சடாவர்மன் சுந்தர பாண்டியன்

பாண்டிய மன்னன் இத்திருக்கோயிலில் பலவகையான கொடைகள் வழங்கியும், திருக்கோயிலை அழகு செய்தும் அரும்பணி ஆற்றியதைப் 'பொன்மயமாக்கினான்' என்று கல்வெட்டு புகழும்.

திருவரங்கர் விசுவக்சேனர், திருமால் சந்நிதிகள், மூன்று விமானங்கள், திருமடைப்பள்ளி ஆகியன கட்டியதுடன், ஸ்ரீரங்க விமானத்திற்குப் பொன்வேய்ந்தும் பெருமை பெற்றான். ஆதிசேடனின் திருஉருவம், பொற்பிரபை, பொற்பீடம், பொன் மகர தோரணம், பொற் கருடவாகனம் ஆகியவற்றை வழங்கினான். கலிங்கத்துக் கட்டாக்

அரசரை வென்று கைக் கொண்ட பொருள் கொண்டு அரங்கத்துப் பெருமானுக்கு மரகதமாலை, பொற்கிரீடம், முத்துமாலை, முத்துவிதானம், பொன்னணி, பொன் ஆடை என்று பொன்னால் அழகுபடுத்திக் கண்டு வணங்கி மகிழ்ந்தான்.

காவிரி நதியில் தெப்பத் திருவிழா நடத்துவிக்கத் தங்கத்தினாலே படகு அமைத்தானாம். இரண்டு படகுகளைச் செய்து அதில் ஒன்றில் தம்முடைய பட்டத்து யானையை ஏற்றி அதன் மீது அமர்ந்த மன்னவர், மற்றொரு படகில் ஏராளமான அணிகலன்களையும், பொற்காசுகளையும் நிரப்பித் தம் படகின் நீர் மட்டத்திற்கு மற்றொரு படகு அடையும் வரையில் பொன்னைக் கொட்டி நிரப்பினான். பின்னர் அவற்றைத் திருக்கோயிலுக்கு வழங்கியிருக்கிறான். தன்னுடைய எடை அளவிற்குத் தங்கத்தினாலேயே திருவரங்க நாதரின் திருஉருவைச் செய்து அத்திரு உருவிற்குத் தன் பெயரை வழங்க வைத்தான். இச்செய்திகளைத் தல வரலாற்று நூலில் விரிவாகக் காண்கிறோம். பாண்டியனின் பரந்தாமன் பால்கொண்ட பக்தி, கொடை வளம் ஆகியன வெளிப்படுகின்றன.

## மாலிக்காபூரின் படையெடுப்பு

அலாவுத்தீன் கில்ஜியின் பொருட்டுப் படையெடுப்பு நிகழ்த்தியவன் அரவாணி மாலிக்காபூர். பாண்டிய உடன்பிறப்பு களிடையே ஏற்பட்ட பதவிப் போட்டியால் தமிழகம் நுழைந்தான். மாலிக்காபூரின் படையெடுப்பில் தமிழ் மண் சீர்குலைவு அடைந்தது. திருவரங்கத்துக் கோயிலின் கலைச் செல்வமும், பொருட்செல்வமும் கொள்ளை போயின. திருஉருவங்களைக் கவர்ந்து செல்லவே புதிய திருஉருக்களை வார்த்து வழிபாடு நடைபெற்ற செய்தியைத் திருக்கோயில் ஒழுகு எடுத்துக் கூறுகிறது. அழகிய மணவாளரை அரையர்கள் மீட்டு வந்த பிறகு அரங்கனைத் தேடித் திருவரங்கம் வந்து ஆவி துறந்தாள் சுல்தானின் மகள். அவரே துலுக்க நாச்சியார் ஆனார்.

## முகம்மது பின் துக்ளக்

டெல்லி அரசனான முகம்மது பின் துக்ளக்கின் படையெடுப்பின் போது திருவரங்கம் கோயில் படை வீடாயிற்று. நல்ல வேளையாக

அரங்கன் முதல் அணிகலன் வரை திருப்பதிக்கு இசுலாமியப் படை வரும் முன்னர் அனுப்பி வைத்தனர். இதில் பெரும் உதவி புரிந்த தேவதாசிப் பெண்ணின் துணிவு, பக்தியின் பயனாய் இந்த முன்னேற்பாடு சிறப்பாக நடந்தது.

அழகிய மணவாளனைக் காக்கும் பணியில் அழகி உயிர்த் தியாகம் செய்தார். ஆரிய பட்டாள் கோபுர வாசல் தீக்கிரையானது. கி.பி. 1323ல் முகமது பின் துக்ளக்கின் படையெடுப்பின் போது திருவரங்கத்தை விட்டு அகன்ற நம்பெருமாளும், உபய நாச்சியார்களும், விஜய நகர மன்னர்களான புக்கர், அவரின் மகன்கள் இரண்டாம் அரிகார், விருப்பண்ண உடையார், செஞ்சி கோபணார்யன், திருமணல் தூண் நம்பி முதலான பலருடைய உதவியால் கி.பி. 1371ஆம் ஆண்டு 48 ஆண்டுகளுக்குப் பின் திருவரங்கம் வந்தனர்.

ஸ்ரீரங்கம் கோயிலில் இராச மகேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் இந்நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் கல்வெட்டு உள்ளது. நம் பெருமாள் ஆஸ்தானம் திரும்பியது பரீதாபி ஆண்டு வைகாசி மாதம் 17ஆம் நாளாகும். பிள்ளை லோகாச்சாரியர் ஆஸ்தானம் சேரப் பாடுபட்டார். இராசமகேந்திரன் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் விஜய நகர கம்பணர் காலத்திய கி.பி. 1371 கல்வெட்டு பெருமாள் ஆஸ்தானம் திரும்பி வந்த வைபவத்தைத் தெரிவிக்கிறது.

கோபணார்யன் என்ற செஞ்சி மன்னன் தம் தலைநகரான, செஞ்சியிலிருந்து ஸ்ரீரங்கத்தில் பிரதிஷ்டை செய்தார் என்று உறுதியாகிறது. புகழ்நிறைந்த கோபணார்யன் கறுத்த கொடுமுடிகளின் ஒளியாலே உவகை ஈர்க்கும் திருமலையிலிருந்து ரங்கநாதனை எழுந்தருளப் பண்ணி வந்து, தம் தலைநகரான செஞ்சியில் சிறிது காலம் ஆராதித்து ஆயுதமேந்திய துலுக்கர்களை அழித்து, ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய உபயநாச்சியார்களோடு தம்முடைய திருவரங்கப் பெரு நகரில் பிரதிஷ்டை செய்து திருவாராதனங்களை மறுபடி தொடங்கினார்.

**விஜய நகரப் பேரரசு**

விஜயநகரப் பேரரசு இசுலாமிய ஆதிக்கத்தை வீழ்த்தியதால் திருவரங்கம் கோயிலும் விடுதலை பெற்றது. திருப்பதிக்கு உலாச்

சென்ற திருவரங்கப் பெருமாள் அரங்கநாதர் மீண்டும் திருவரங்கம் வந்தார். மன்னர்கள், அலுவலர் என்று பல்பிரிவினரும் கோயிலுக்கு நிலங்களும், ஊர்களும் வழங்கினர். திருக்கோயில் புதுப்பிக்கும், புனரமைக்கும் பணி தொடர்ந்து நடைபெற்றது.

1371ல் மீண்டும் ஒரு புதிய எழுச்சியின் தொடக்கமாக அமைந்தது. விருப்பண்ண உடையாருடன் வந்த குண்டு சாளுவையர் நம்பெருமாள் கொடியேற்றத்தின் போது எழுந்தருளிய மண்டபமாகிய வெண்கலத் திருக்கொடித்தட்டினைப் பண்ணுவித்தார். இப்போது மரத்திலான கொடுத் தட்டே உள்ளது. ஆயினும் இம்மண்டபத்திற்கு வெண்கலத் தேர் என்று வழங்குகிறது.

விமானத்தை மீண்டும் கட்டிப் பொன் வேய்ந்தனர். கருடாழ்வாரின் செப்புத் திருமேனி செய்யப் பெற்று கி.பி. 1415இல் பிரதிட்டை செய்தனர். புதிய சந்நிதிகள், புதிய திருச்சுற்றுகள், புதிய கோபுரங்கள், புதிய மண்டபங்கள், புதிய விழாக்கள் எழுந்தன. குலசேகரன், கொடிமரம் தங்கத் தகடு பெற்றது. 102 தங்கத் தகடுகள் பதித்த கொடிக் கம்பம் அமைத்தனர். புதிய அணிகலன்கள், புதிய பொற்பாத்திரங்கள் என ஆலயம் நிரம்பலாயிற்று. புதிய விழாக்கள் தொடங்கினர். அருச்சுண மண்டபம், கிளி மண்டபம் ஆகியன அவற்றில் சில. புதிய கட்டடங்களை எழுப்பினர். 1432இல் விஜய நகரப் படைத் தலைவன் கோனேரி நாயக்கரின் பேராசையால் ஆலய நிர்வாகம் சீரழிந்தது.

நிர்வாகத்தைப் படைத் தலைவர்கள் மேற்கொண்டு தங்கள் விருப்பம் போல் செயல்படத் தலைப்பட்டதால் நிருவாக அமைப்புச் சீர்குலைந்தது. இதனால் மனம் நொந்த ஜீயர், ஏகாங்கியர் பலர் கோபுரம் மேலிருந்து குதித்து மாய்ந்த கொடுமையும் நிகழ்ந்தது. கோயில் சொத்தைக் கையாடினர். நிருவாகத்தினரின் ஊழல் ஊற்றை அடைக்க அர்ச்சகர்கள் உயிர்த் தியாகம் செய்தனர். கோபுரத்தின் மீதிருந்து வீழ்ந்து உயிரைப் போக்கிக் கொண்டனர்.

திருச்சி ராச நாயக்கர், கோனேரி நாயக்கரின் அராஜகத்தை வீழ்த்தி ஆலய நிருவாகத்தைக் கந்தாடை மரபினரிடம் ஒப்படைத்தார். 1416இல் மல்லிகார்ச்சுணரால் திருவரங்கக் கோபுரப் புனரமைப்பு, குடமுழுக்கு ஆகியன நடைபெற்றன.

## நாயக்க மன்னர்கள்

விஜய நகரப் பேரரசு தலைக்கோட்டைப் போருக்குப் பின் தலை சாய்ந்து தரைமட்டமாக ஆயிற்று. திறையரசர்களாய் அடங்கி ஒடுங்கி ஆட்சியை மேற்கொண்டிருந்த நாயக்கர்களின் ஆதிக்கம் மதுரை, தஞ்சை, செஞ்சியில் உதயமாயிற்று. மதுரை, தஞ்சை நாயக்க மரபின் மன்னர் பெருமக்கள் ஆட்சியில் ஆலயச் சீரமைப்புப் பணிகள் தொடர்ந்தன. ஆலயம் கருவூலம், அரங்கனின் விழாக்கள் சிறப்புற நடைபெறலாயின. புது அறக்கட்டளைகளை உருவாக்கினர்.

தஞ்சையில் அச்சுதப்ப நாயக்கர் என்னும் தஞ்சை நாயக்க மன்னர், முடிதுறந்து ஆட்சிப் பொறுப்பை மகனிடம் ஒப்படைத்து விட்டுத் திருவரங்கம் வந்து தங்கினார் ஸ்ரீரங்கவிமானமான கோயில் விமானத்திற்கு மீண்டும் பொற்றகடு வேய்ந்ததுடன் மதில்கள், கோபுரங்கள், தூண்கள், மண்டபங்கள், நந்தவனங்கள் ஏற்படுத்தினார். ஸ்தலத்தார் என நான்கு நிருவாகப் பரம்பரை நியமனமாயிற்று.

விசுவநாத நாயக்கர் ஸ்ரீரங்கத்திருத்தலத்திற்கு மூன்று லட்சம் பொன்களைச் செலவு செய்து சாலைகள், விளை நிலங்கள், குடியிருப்புகளை ஏற்படுத்தினார். வடமொழியா, தென்மொழியா என்னும் சர்ச்சையின் விளைவால் வைணவத்தில் வடகலை, தென்கலை என இரு பிரிவுகள் உருவாயின.

மதுரை மன்னர் திருமலை (1623–1659) அரங்கனின் ஆலயத்திற்குத் திருப்பணிகள் பல செய்தார்.

மன்னர் திருமலை மீனாட்சித் தாயை வழிபட மதுரைக்குத் தலை நகரை மாற்றினார். சொக்கநாத நாயக்கர் மண்டபம் ஒன்றினை மூன்றாம் திருச்சுற்றில் கண்ணாடி அறையுடன் கட்டுவித்தார். முதல் திருச்சுற்றில் தம் திருஉருவ இல்லத்தவர் திரு உருவச் சிலைகளைப் பொன்னால் செய்து வைத்தார். மேல் கூரையில் புதிய ஓவியங்கள் வரைந்தனர். நாயக்க மன்னர்களின் திருப்பணியினால் தங்கள் உருவச் சிலைகளைத் தூண்களில் அமைத்தனர். 1605இல் சொக்கநாத நாயக்கர் அரங்கனுக்கு (மூலவர்) இன்றைய மதிப்பில் 20 இலட்சம் பெறும் முத்தங்கி சமர்ப்பித்தார். அழகிய மணவாளப் பெருமானுக்கு (உற்சவர்) ரத்ன அங்கி செய்து வழங்கிச் சிறப்பித்தார்.

நாயக்க மன்னர் விஜய ரங்க சொக்கநாதரின் மறைவு, இராணி மீனாட்சியின் தற்கொலை, கருநாடகப் போர்கள் ஆகியவை அடுத்தடுத்து நிகழ்ந்தன. விஜயரங்கச் சொக்கநாதர் அளித்த பொற்குடத்தைக் கள்வர்கள் கவர்ந்து சென்றனர். ரங்கப்ப உடையார் அதனை மீட்டார். பெருமாள் தினசரி பாலமுது செய்யும் தங்கவட்டில், தங்கத்தடி, 'தோளுக்கு இனியான்' என்ற தங்கப் பல்லக்கு, துவாதசியன்று சாற்றப்படும் பட்டாடைகள் 365, சகஸ்ர கலச அபிடேகத்திற்குச் செப்புக்குடங்கள் ஆயிரம் அளித்துப் பெருமை சேர்த்தவர் விஜய ரங்க சொக்கநாதன்.

மதுரை நாயக்கர் காலத்தில் கருட மண்டபத்தின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள தேவகோஷ்டங்கள், கும்ப பஞ்சரங்கள், உள் ஆண்டாள் சன்னதி ஆகியன கட்டி வைத்தனர்.

மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கர் இத்திருக்கோவிலுக்குத் திக்குகள் பலவற்றிலிருந்தும் சாலைகள் அமைத்தார். எதிரிகள் நுழையாது காக்க அரண் போன்றுக் கதவுகளை நுழைவாயிலில் பொருத்தினார்.

### நவாபுகளின் காலம் – ஆங்கிலேயர் – பிரெஞ்சுக்காரர்கள்

நாயக்க மன்னர்களுக்குப் பின் கருநாடக ஆட்சிப் பொறுப்பு நவாபுகளிடம் சென்றது. ஆங்கிலேயர் – பிரெஞ்சுக்காரர்கள் இடையே ஏற்பட்ட போரினால் திருவரங்கம் கோயிலுக்கும் பெரும் அச்சுறுத்தல் ஏற்பட்டது.

ஆற்காட்டு நவாபுக்கு எதிராகவும், ஆங்கிலேயருக்கு எதிராகவும் போரிடுகையில் திருவரங்கம் கோயிலுக்குள் புகுந்து நவாபு சந்தாசாகிபு ஒளிந்து கொண்டான். திருவரங்கத் தீவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களை ஆங்கிலேயர் முற்றுகையிட்டனர். ஆங்கிலேயரிடம் பிரெஞ்சுப் படையும், சந்தாசாகிபும் தோல்வியுற்றனர். எனினும், மைசூர்ப் படைகளின் உதவியுடன் இக்கோவிலில் தங்கினார். கி.பி. 1759இல் கிரில்லன் எனும் ஆங்கிலேயர் இதனைத் தாக்கினர். இச்செய்திகளை எல்லாம் கோயில் ஒழுகு விரிவாகக் கூறுகிறது. 1758 முதல் 1781 வரை நவாபுகளின் படை வீடாக விளங்கிய ஆலய வளாகம் தூய்மை இழந்து பூலோக நரகமாகியது.

## ஐதர் அலி, திப்புசுல்தான்

கி.பி. 1781இல் மராட்டியர், பிரெஞ்சுக்காரர்கள் உதவியுடன் ஐதர் அலி தாக்குதலை நிகழ்த்தினார். முற்றுகை ஆறு நாட்களே நீடித்தது. 1790இல் திப்பு சுல்தானின் படையெடுப்பு நிகழ்வுற்றது. ஆங்கிலேயப் படையின் முன்னேற்றத்தால் திப்பு வெளியேறினார். ஆயினும், இசுலாமிய ஆதிக்கம் இருந்து வந்திருக்கிறது. நூற்றாண்டின் முடிவில் நவாபிடமிருந்த ஆலய நிருவாக உரிமை ஆங்கிலேயர் வசமாயிற்று.

## தல வரலாறுகள்

பாளையக்காரர்களை வென்று 1801இல் ஆங்கிலேயர் தமிழகப் பகுதிகளைத் தங்கள் நேரடி ஆளுகையில் கீழ் மாவட்ட ஆட்சித் தலைவர்கள் நியமனம் வாயிலாகக் கொணர்ந்தனர். திருவரங்கம் கோயில் வாலசு – வேல்ஸ் எனும் மாவட்ட ஆட்சித் தலைவரின் வரம்பின் கீழ் வந்தது.

கி.பி. 1803ஆம் ஆண்டில் அவர் திருவரங்கம் நகரில் இருந்த தல வரலாறுகள் அனைத்தையும் சேர்த்துப் புத்தம் புதிய நூலாகத் தொகுத்து எழுதக் கட்டளையிட்டார். பின்னர் அந்நூலின் படி ஒன்றைக் கோயில் ஆட்சியாளர்கள் ஐவரின் முத்திரையுடன் கோயிலின் தென்பகுதியிலுள்ள ஒரு கருங்கல் கருங்கை அறையில் பாதுகாத்து வைக்க ஏற்பாடு செய்தார்.

ஸ்தலத்தாரின் உட்பூசல் நீதிமன்றம் வரை சென்று வேதவியாசபட்டர், வாதூலதேசிக ரங்காச்சாரியர், அண்ணங்காச்சார், பராசரபட்டர், உத்தம நம்பி, உறையூர் வியாசராதி, கிருஷ்ணாராவ், சந்திரசேகரப்பிள்ளை ஆகியோர் மாவட்ட ஆட்சியரின் மேற்பார்வையில் பரம்பரை அறங்காவலர் ஆயினர்.

## ஆங்கிலேயர் ஆட்சி

ஆங்கிலேயர் ஆட்சி நாட்டிற்குத் தீமை செய்த போதும், கோயில் நிருவாகம் நிலையாக நடைபெற்றது. இங்கிலாந்துப் பேரரசியின் அறிவிப்பால் ஆலயம் ஸ்தலத்தாரின் முழு நிருவாகத்திற்கு வந்தது. ஏழாம் எட்வர்டு மன்னர் வேல்ஸ் இளவரசர் 1875ல் தமது

தென்னிந்தியச் சுற்றுலாவின் போதுத் திருவரங்கத்திற்கு வருகை புரிந்தார். அவர் பொற்குவளை ஒன்றை ஆலயத்திற்கு வழங்கினார். இன்றும் கருவூலத்தில் அது உள்ளது. 1813இல் 40 சேர் தங்கம், 70 சேர் வெள்ளி சேர்த்து ஜார்ஜ் பிரான்சிஸ் டிராவர்ஸ் என்பவர் தோளுக்கினியான் பல்லக்கைப் புதுப்பித்தார்.

## விடுதலைக்குப் பின்

விடுதலைக்குப் பின் திருக்கோயில்களும், சமய நிறுவனங்களும் இந்து அறநிலையத்துறையின் கீழ் வந்தன. 1966இல் யுனெஸ்கோ நிறுவனம் இக்கோயிலுக்குத் தொழில் நுட்ப உதவியளிக்க நிபுணர்களை அனுப்பியது. மிஸ்ஜினைன் அவ்பாயர் எலிசபெத் வோல்ஹ் அம்மையார் 'Sri Ranganatha Swamy - A temple of Vishnu in Srirangam' எனும் நூலை எழுதினார்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாழிக்கேட்டார் வாயிலுக்குப் பக்தர்கள் செப்புத் தகடுகள் பதித்துப் பொன் முலாமிட்டனர். 1970இல் கருவறைப் பகுதியிலே தீ விபத்து ஏற்பட்டது. மூலவருக்கு எவ்விதப் பாதிப்புமில்லை. 1981இல் சீர்செய்யப்பெற்றுக் குடமுழுக்கு நடந்தது.

## புதிய கோபுரம்

இருபதாம் நூற்றாண்டில் புதிய கோபுரம் கட்டி முடிக்கப் பெற்றது. கிருஷ்ண தேவராயர் அவருடைய ஆட்சிக் காலத்தில் 96 திருக்கோவில்களில் கோபுரம் அமைக்கும் பணியை மேற்கொண்டார் என்று கண்டோம். தலைக்கோட்டைப் போரில் விஜய நகரப் பேரரசு தோல்வியடைந்ததால் நிறைவடையாமலே பல கோபுரங்கள் மொட்டைக் கோபுரம், இராயர் கோபுரம் என நின்றுவிட்டன.

அத்தகைய கோபுரங்களில் ஒன்றுதான் திருவரங்கம் அடைய வளைந்தான் திருச்சுற்றில் பாதியளவில் நின்று போயிருந்த இராயர் கோபுரம். இந்தக் கோபுர வாயிலுக்கு முனியப்பன் கோட்டை வாயில் என்று பெயர். இதைக் கட்டிமுடிக்க மொத்தச் செலவு ஒரு கோடியே 60 இலட்சம் ரூபாய்.

இந்த இராயர் கோபுரம் இப்போது கட்டப்பட்டுத் திருப்பொலிவோடு ஆசியாவிலேயே உயரமான கோபுரமாக நிற்கிறது.

இக்கோபுரத்திருப்பணியை நிறைவு செய்ய ஆந்திராவில் உள்ள ஸ்ரீ அஹோபில மடத்தின் 41வது பட்டம் ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஜீயர் சுவாமிகள், இங்கு வந்துத் தங்கிப் பெரிய கோபுரத்தைத் தமிழக அரசு, தாம், செல்வர்கள், அடியார்கள் அளித்த நிதிகொண்டு கட்டி முடித்தார்.

20.5.1979இல் தொடங்கிய இப்பணி 23.3.1987இல் நிறைவுற்றது. 1987இல் குடமுழுக்கு இத்திருக்கோபுரத்திற்கு நடைபெற்றது. அப்போதைய தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். கலந்து கொண்டார். இதன் உயரம் 236 அடி ஆகும். 150 அடி அகலம். 13 நிலைகளும், 13 கலசங்களும் கொண்டு விளங்குகிறது.

1998இல் ஆலயத் திருப்பணிகள் தொடங்கின. 15.3.2001இல் திருக்கோயில் குடமுழுக்கு விழாக்கள் சிறப்பாக நடந்தேறின. ஆலயம் புதியதோர் ஆலயம் போல் அழகும், எழிலும் விளங்க இன்றும் காட்சியளிக்கிறது. அரங்கனின் அருள் வெள்ளமெனப் பாய்கிறது.

## பதின்மூன்று நிலைகளின் உபயதாரர்கள்

முதல் நிலை அகோபிலமடம், 2. ஸ்ரீமத் ஆண்டவர் சுவாமிகள், 3. காஞ்சி காமகோடி பீடம், 4. ஆந்திர அரசு, 5. கர்நாடக அரசு, 6. இசை அமைப்பாளர் இளைய ராஜா, 7. திருச்சி, திருவரங்க மக்கள், 8. குடியரசுத் தலைவர் உதவி, 9. அகோபிலத் திருமடச்சீடர், 10. காமகோடிச் சீடர், 11. மகாலட்சுமி அறக்கட்டளை, 12. அகோபிலம் ஜீயர், 13. தமிழக அரசு. (எம்.ஜி.ஆர். ஆட்சி)

இயல் : ஐந்து

# திருக்கோயில் அமைப்பு

திருவரங்கம் திருக்கோவில் ஏழு திருச்சுற்றுகள் கொண்ட ஒரு மாபெரும் கோவில். இத்திருக்கோவிலுக்கு வரலாற்றுச் சிறப்பினைக் கொண்ட ஏழு மதில்கள் உள்ளன. ஏழு உலகங்களுக்கு உரிய திருப்பெயர்களையே ஏழு மதில்களுக்கும் வைத்துள்ளனர்.

பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மஹர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்ய லோகம் என்று ஏழு மதில்களுக்கும் பெயர்கள் உள்ளன. ஒவ்வோர் உலகாய்க் கடந்து சென்றால், ஏழாவது உலகமான பெருமாள் பள்ளி கொண்டுள்ள சத்திய லோகத்தை அடைகிறோம்.

இந்த ஏழு மதில்களையும் முதலில் கட்டியவர்களாகக் கூறப்படுகின்ற ஏழு பேர் கலியுகராமன், திருவிக்ரமன், கிளிச்சோழன், திருமங்கை மன்னர், குலசேகரன், இராஜ மகேந்திர சோழன், தர்மவர்ம சோழன் ஆவர்.

ஏழு திருச்சுற்றுக்களையும் சுற்றி வளைத்திருக்கும் திருவீதி அடைய வளைஞ்சான் வீதியாகும். கிழக்கு, மேற்கு, வடக்கு அடைய வளைஞ்சான் வீதிகள் உள்ளன. தெற்கு அடைய வளைஞ்சான் வீதியின் பெயர் மாற்றப்பெற்றுத் திருவள்ளுவர் வீதி, சாத்தார வீதி, பூ அங்காடி வீதி முதலிய பெயர்களுடன் திகழ்கிறது.

திருவரங்கத்துத் திரு வீதிகளின் அழகைப் பழம்பாடல் ஒன்று இவ்வாறு எடுத்துரைக்கிறது.

மாடமாளிகை சூழ்திருவீதியும் மன்னுசேர் திருவிக்ரமன்
வீதியும்
ஆடல் மாறனகளங்கன் வீதியும் ஆலிநாடனமர்ந்துறை
வீதியும்
கூடல் வாழ் குலசேகரன் வீதியும் குலவிராச மகேந்திரன்
வீதியும்
தேடரிய தர்மவர்மாவின் வீதியும் தென்னரங்கர்
திருபாபரணமே

## ஏழு திருச்சுற்றுகள்

இந்தியாவிலேயே ஏழு திருச்சுற்றுகள் இத்திருக் கோயில் மட்டுமே. கொண்டுள்ளது. ஒரு புனித அடையாளம் என்பர். இது யோக நெறியின் ஏழு ஆதாரங்களையும் மனித உடலுக்குக் காரணமான ஏழு தாதுக்களையும் குறிப்பதாக வைணவ அடியார் கொள்வர். உடலினுள் உயிர் ஒடுங்கியிருப்பது போல, இக்கோவிலினுள்ளே நடுவில் பரமாத்மா எழுந்தருளி இருக்கிறார்.

ஏழு திருச்சுற்றுகள் வாயிலிலிருந்து ஒன்று, இரண்டு என்றவாறு எண்ணப்படுவதில்லை. ஏழு திருச்சுற்றுகளையும் ரசம், ரத்தம், மாமிசம், மேதை நரம்பு, எலும்பு, ஸ்நூயு (நீர்), மஜ்ஜை என்பர்.

திருச்சுற்றுகள் கருவறையாகிய விமானத்திலிருந்து தொடங்கி வெளிப்புறமாக எண்ணப்படுகின்றன. விமானம் நான்கு பொன் கலசங்கள் கொண்ட பொன்மயமான வட்ட வடிவ விமானம் ஆகும். திருக்கோயிலின் பரப்பு 631,000 சதுர மீட்டர். இதன் சுற்றெல்லைப் பரப்பு 10710 சதுர அடி திருக்கோயில் $10^0$ $52^0$ வடக்கிலும் $78^0$ $42^0$ கிழக்கிலும் இந்திய நாட்டின் தென்பகுதியில் தமிழ்நாட்டின் மையத்தில் அமைந்துள்ளது.

சென்னையிலிருந்து செல்லும் புகை வண்டிகள் எல்லாம் திருவரங்கத்தில் நின்று செல்கின்றன. திருவரங்கத்திலேயே பயண முன்பதிவும் செய்யலாம். திருச்சி புகைவண்டி நிலையத்தை விட்டு வெளியே வந்தவுடனேயே திருவரங்கம் செல்லும் பேருந்தில் ஏறிக் கொள்ளலாம்.

ஐந்து நிமிட நடையில் பேருந்து நிலையத்தை அடைந்து விடலாம் திருவரங்கம் செல்லப் பேருந்து வசதியானது. ஒன்றன் பின் ஒன்றாகப் பேருந்துகள் வந்து கொண்டேயிருக்கும். மிகச் சிக்கனமாக அடையலாம். வசதி உள்ளவர்கள் வேண்டுமானால் ஆட்டோ, வாடகைக் கார் ஏற்பாடு செய்து கொள்ளலாம். பேருந்துகளும் புதிய பெரிய கோபுரம் வரை செல்கின்றன. அங்கிருந்து உள்ளே செல்ல வேண்டியதுதான்.

அங்கிருந்து ஒவ்வொரு திருச்சுற்றாகக் கடந்து சென்று கருவறை அடைவது சுகமான அனுபவம். திருச்சியில் பேருந்து நிலையத்தை ஒட்டிய விடுதிகளில் தங்கலாம். அல்லது திருச்சியில் தெப்பக் குளத்தை ஒட்டிய விடுதிகளில் தங்கலாம். நல்ல உணவு விடுதிகளுக்குப் பஞ்சமில்லை. காலையில் சாப்பாடு சாப்பிடுபவர்களுக்குச் சாப்பாடு வழங்கும் உணவு விடுதிகளும் உண்டு.

திருச்சி நகரிலிருந்து திருவரங்கத்தை இருபது நிமிடத்தில் அடைந்து விடலாம். எனவே திருச்சி நகரிலேயே தங்கிக் கொள்ளலாம்.

காவிரி, கொள்ளிடம் ஆகிய இரு நதிகளுக்கிடையில் திருவரங்கம் அமைந்துள்ளது. கொள்ளிடம் ஆண்டுதோறும் காவிரியில் பெருகும் வெள்ளத்தினின்று இத்திருக்கோயிலைக் காப்பதற்கென்றே உருவாகியது போலும். இலங்கைப் படையெடுப்பு மேற்கொண்ட முதலாம் இராசேந்திரன், இலங்கையினின்று சிறைப்பிடித்துக் கொணர்ந்த சிங்களவரைக் கொண்டு இப்பணியை நிறைவு செய்தான் என்பது செவி வழிச் செய்தி.

கருவறையைச் சுற்றி ஏழு திருச்சுற்றுகள் இத்திருச்சுற்றுகளின் நடுவில் கோபுரங்கள் என ஆலயம் அமைந்துள்ளது.

முதன்மையான வாயில் தெற்கு நோக்கியுள்ளது. வாயில் கிழக்குப்புறம் அமைய வேண்டும் என்பதற்கு இது விதிவிலக்காய் அமைந்திருக்கிறது. வாமனர் சன்னதி தெற்கு வாயில் அருகில் உள்ளது. குடையும் கமண்டலமும் கொண்டு வாமனர் தோன்றுகிறார். வாமனருக்குச் சன்னதிகள் அரிதே. இனி ஒவ்வொரு திருச் சுற்றாய்க் காண்போம்.

## ஏழாம் திருச்சுற்று

கோவிலைச் சுற்றிய திருச்சுற்றுகளில் இன்றைய நாளில் வீடுகள், கடைகள், விற்பனை நிலையங்கள் என்று அமைந்திருக்கின்றன. பெரிய கோபுரம் வழியாக உள்ளே புகும் நாம் முதலில் கடைகளையே காண்கிறோம்.

ஏழாவது திருமதிலான கலியுக ராமன் திருச்சுற்று **பூலோகம்** என்று பெயர் பெற்றது. இதற்கு **இராஜவீதி, மாட மாளிகை வீதி, சித்திரைத் திருவீதி** என்று பெயர். இந்தத் திருச்சுற்று ஒரு சிறிய நகரம் போலக் கடைகள், கட்டடங்கள் அலுவலகங்களுடன் விளங்குகிறது.

அடைய வளைந்தான் திருச்சுற்றில் இராயர் கோபுரத்தின் கீழ் சீனிவாசன் எழுந்தருளியிருக்கிறார். இந்த சீனிவாசனுக்கு நித்ய வழிபாடுகளும் உண்டு. இந்தக் கோபுர வாசலை முனியப்பன் கோட்டை வாசல் என்றும் அழைக்கின்றனர்.

இது நான்கு கோபுரங்கள் உடையது. அவைகள் ஒய்சாளர்கள், பாண்டியர்களால் கட்டப்பெற்றவை. கலியுகராமன் கோபுரம் அளவில் பெரியது. அது தனது ஒவ்வொரு முகத்திலும் 13ஆம் நூற்றாண்டுக்குரிய எழுத்துக்களால் செதுக்கப்பெற்ற கல்வெட்டுக் களைக் கொண்டதாகத் திகழ்கின்றது. இந்தத் திருச்சுற்றிலேதான் பெருமாள் எழுந்தருளி வலம் வரும் திருத்தேர்கள் உள்ளன.

இந்தத் திருச்சுற்றில் ஆர்ய வைஸ்யாள் தர்ம சாத்திரம், வரசித்தி ஆஞ்சனேயர், ஸ்ரீ ரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் ஆசிரமம், வேதாந்த தேசிகன் சன்னதி, ஸ்ரீ ரங்கநாத பாதுகா வித்யாலய வேத திவ்ய பிரபந்த பாடசாலை, ஜெகன்னாத மடம், கோரதம் ஸ்ரீ ரங்கநாத சங்கீத வித்யாசாலை, ஸ்ரீ ஆழ்வான் திருமாளிகை, சித்திரைத் தேர், முதலியாண்டான் திருமாளிகை, வானமாமலை 25வது பட்டம் சின்ன கலியன் சுவாமி நம்மாழ்வார் இராமானுஜ கூடம், முளுபாகல் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பாதராஜர் மடம், அபிராமி மண்டலி, சித்திரை வீதி இல்லங்கள் ஆகியன உள்ளன.

## ஆறாம் திருச்சுற்று

புவர்லோகம் என அழைக்கப்படும் இத்திருச்சுற்று **திருவிக்கிரமன் திருவீதி** என்று அழைக்கப்படும். இந்த வீதியில் பெருமாள் திருவாகனங்கள் உலாப் போவதால் இதனை **உள்திருவீதி** என்றும் **உத்திரவீதி** என்றும் அழைப்பார்கள். இத்திரு வீதியில் தான் உடையவர் இராமானுஜம் முனிவர் தங்கியிருந்து திருவரங்கத்து நிருவாகத்தைக் கவனித்த மடம் அமைந்துள்ளது. இதனை **ஸ்ரீரங்க நாராயண ஜீயர்களின் மடம்** என வழங்குகின்றனர். மணவாள மாமுனிகள் தமது அவதார ரகசியத்தை உத்தமநம்பி என்னும் சீடருக்கு இங்குத்தான் காட்டி அருளினார். இம்மடத்தின் தூண்களில் இதனைச் செதுக்கி வைத்துள்ளனர்.

அத்திருச்சுற்றில் உள்ள முதன்மையான இடங்கள் திருமாளிகைகள் பலவாகும். ஸ்ரீரங்கா! ஸ்ரீரங்கா! கோபுரம், தைத்தேர், பாங்கூர் தர்மசாலா, ரங்கா தங்கும் விடுதி, உத்தமநம்பி திருமாளிகை, ஸ்ரீரங்க நிவாஸ் இராமானுஜ கூடம், ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடம், ஸ்ரீவேத வியாச பட்டர் பெரிய திருமாளிகை, வேதபாடசாலை அகோபில மடம், லட்சுமி நரசிம்மர் ஸ்ரீஸ்ரீபாவபோத ஆஞ்சனேயர் கோயில் அண்ணன் திருமாளிகை, ஸ்ரீரங்க மந்திர் திருமாளிகை, கந்தாடை இராமானுஜ கூடம், உத்திரவீதி வீடுகள் ஆகியன அமைந்துள்ளன.

இந்தத் திருச்சுற்றிற்கு உள்ளே தான் கோயிலின் புனிதம் மிக்கப் பகுதிகள் தொடங்குகின்றன. இதுவரையில் காலில் காலணி அணிந்தோர் இதன் பிறகு உள்ள பகுதிகளுக்குச் செல்ல வெளியில் உள்ள காலணிகள் காக்கும் இடத்தில் காலணிகளை விட்டுவிட்டு முறையாக ஆலயத்தினுள் நுழைய வேண்டும். தமிழக அரசு இலவசமாகக் காலணிகளைப் பாதுகாக்கும் ஏற்பாட்டை 2004 முதல் செய்வதால் கோயிலே அப்பணியை மேற்கொண்டுள்ளது.

சித்திரை வீதிக்கு மாடமாளிகை சூழ் **திருவீதி** என்றே பெயர். ஜடாவர்மன் வீரபாண்டியனுக்குக் கலியுக ராமன், எம்மண்டலமும் **கொண்டருளிய பெருமாள்** என்னும் சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன. இவன் சித்திரைத் தேரைக் கட்டி வைத்துச் சித்திரைத்

திருநாள் நடத்தியதால் இந்த வீதி சித்திரை வீதியாயிற்று. உள்திரு வீதிகளில் உள்துறை கைங்கர்யம் செய்து வந்தவர்கள் குடியிருப்புகள் அமைந்துள்ளதாலேயே காலப்போக்கில் உள்துறை வீதியாகிப் பின் உத்தர வீதியாக மருவியது. இதுதான் 'திங்களும் விழாவறாத திருவீதி' எனக் கோயில் ஒழுகு குறிப்பட்டதாகும்.

## ஐந்தாம் திருச்சுற்று

ஐந்தாம் திருச்சுற்று சுவர்லோகம் என்று அழைக்கப்படுகிறது. இந்தத் திருச்சுற்றில் நுழையும் நுழைவாசலுக்கு நான்முகன் கோட்டை (நான்முகன் வாயில்) என்று பெயர். சோழமன்னன் அகளங்கன் என்பவன் கட்டியதால் அவன் பெயராலேயே அகளங்கன் திருச்சுற்று என்பர் அல்லது அகலங்கன் திருவீதி அல்லது கிளிச்சுற்று என்றும் கூறுவர்.

இந்தத் திருச்சுற்றில் நுழைந்தவுடன் கடைகள் தென்படும். நேரே இருப்பது திருவந்திக்காப்பு மண்டபம் என்பதாகும். திருவந்திக் காப்பு மண்டபம் விஜய ரங்க சொக்கநாத நாயக்கரால் தீர்மானிக்கப் பெற்றது. இத்திருச்சுற்றில் உள்ள ஒரு நாலு கால் மண்டபத்தில் பெருமான் உலா முடித்து வந்ததும் திருஷ்டி கழிக்கும் பழக்கம் உண்டு. திருஷ்டி கழிப்பது எவ்வாறு எனில் ஒரு சிறிய குடத்தின் மேல் ஒரு சிறு கிண்ணம் வைத்து அதில் கனமான திரியிட்டு ஏற்றிப் பெருமானுக்கு எதிரில் ஏற்றியிறக்கிச் சுற்றுவர். இதற்குத் திருவந்திக் காப்பு என்பர். இதனால் அம்மண்டபம் திருவந்திக் காப்பு மண்டபம் எனப்படும்.

திருவுந்திக் காப்பு மண்டபத்தில் திருவந்திக் காப்பு நடைபெற்ற பின் வாகன மண்டபம் சென்று படிகளைந்துறும் பெருமாள் திருவோலகத்தில் கார்த்திகை கோபுர வாசலில் திவ்யப்பிரபந்த சாற்று துறையாகும். அதன் பிறகு நம்மாழ்வார் சந்நிதியில் ஒவ்வொரு நாளும் இயல் சாற்று நடைபெறும். மணவாள மாமுனிகள் நியமித்தருளிய வழக்கப்படி திருவிழாக் காலங்களில் இயல்சாற்று நம்மாழ்வார் சந்நிதியில் நடைபெறுகிறது.

இத்திருச்சுற்றைச் சுற்றி அமைந்துள்ளவை இவை.

நாதமுனி ரங்கவிலாஸ் மண்டபம், தகவல்மையம், 21 கோபுரதரிசனம், உள்ஆண்டாள், மண்டப அழகுச் சிற்பங்கள், தூணில் பிள்ளையார், வேணுகோபாலன் கோயில், தூணில் துர்க்கை இராமானுஜரின் ஜெயஸ்தம்பம், பலிபீடம், கருடர், சக்கரத்தாழ்வார் சன்னதி, பெருமாள் வசந்த மண்டபம், 5 குழி 3 வாசல், தாயார் சன்னதி, தாயார் வசந்த மண்டபம், சேத்தி மண்டபம், வில்வமரம், கம்பராமாயண அரங்கேற்ற மண்டபம், தேசிகன் சன்னதி, மேட்டழகியசிங்கர், வாசுதேவப் பெருமாள், ஆயிரங்கால் மண்டபம், மணல் வெளி, மணல்வெளி மண்டபங்கள், சேஷராயர் மண்டபம், தசாவதாரக் காட்சிகள், இராமாயணக் காட்சிகள், அனுமார், தூணில் சிவபெருமான், பிள்ளை லோகாச்சாரியார், பார்த்தசாரதி இராமானுஜர் பூத உடல், கலைக்கூடம், திருக்கோயில் அலுவலகம், வீர ஆஞ்சனேயர், விட்டல் கிருஷ்ணன், தொண்டரடிப் பொடி ஆழ்வார், கூரத்தாழ்வார், பிரசாதக் கடைகள், வேறு கடைகள் என்று சுற்று முழுவதும் நிறைந்த காட்சிகள் காண்கிறோம். ஆண்டாள் திருச்சுற்றில் அமர்ந்த கோலத்தில் தலையில் கிரீடம் அணிந்து பட்டமகிஷியாகிவிட்டதைக் கூறுகிறார். கையில் வில்லை வைத்திருக்கிறாள். அரங்கர் யானை வாகனத்தில் வருகையில் மாலை மாற்றுகிறார். கார்த்திகைக் கோபுர அனுமார், அமிர்த கல ஆண்டாளுக்கு மட்டும் இச்சிறப்பு பிராட்டிக்குகூட மாலை அணியும் யோகம் இல்லை.

இந்தத் திருச்சுற்றில் ஒரு பகுதி வரையே இந்துச் சமயத்தவர் அல்லாதாருக்கு நுழைவு இசைவளிக்கப்படுகிறது. தாயார் சந்நிதி, சக்கரத்தாழ்வார் சந்நிதி முதலிய இடங்களுக்குச் செல்வதற்கு இசைவு இல்லை.

*சக்கரத்தாழ்வார் :* திருவரங்கத்துப் பெருமாளின் ஆயுதமான சக்கரம் அனைவரும் அறிந்ததே. சுதர்சனர் எனும் ஆழ்வார் மேல் வேதாந்த தேசிகர் தமிழில் ஒரு பாசுரம் பாடியுள்ளார். வடமொழியில் இவர் மேல் **சுதர்ஷன அஷ்டகம்** பாடியுள்ளார்.

கூரநாராயண ஜீயர் இந்தச் சக்கரத்தாழ்வார் மேல் நூறு சுலோகங்கள் பாடியுள்ளார். இந்தச் சுலோகங்களைப் பாடுவதால் பெரும் பயன் பெற்றோர் பலர். பண்டைய நாளில் இந்தச் சக்கரத்திலிருந்து

பெரும் வலிமை வெளிப்பட்டதால் மிகக்குறைந்தோரே அருகில் சென்றனர். எனவே, ஜீயர் சக்கரத்தாழ்வார் எதிரே அதனுடைய வலிமையைக் குறைக்கப் பார்த்தசாரதி சன்னதியை நிறுவினார்.

சக்கரத்தாழ்வார் சன்னதியிலிருந்து தாயார் சன்னதிக்கு வழி உள்ளது. ஆயினும் அது பூட்டப் பெற்றுள்ளது.

*கலைக் கருவூலம் :* தென் சிறகிலுள்ள வேணுகோபாலன் சந்நிதி கண்படைத்தோர் காணவேண்டிய அற்புதக் கலைப் படைப்பு. அத்திருச்சந்நிதியில் வெளிச்சுவர்கள் மிகவும் உயிர்த்துடிப்பான சிற்பங்களால் அழகு பெற்றுள்ளன. திருவரங்கம் செல்லும் பலரும் அரங்கனைக் கண்டோமா, தாயாரைக் கண்டோமா என்று திரும்பிவிடுவர்.

*கலைப் படைப்பு :* ஆனால், இத்திருச்சுவரில் உள்ள சிற்பக்கலையழகைக் கண்டதில்லை. திருவரங்கத்தில் வாழ்வோரில் பலருக்கும் இப்படி ஒரு கலைக் கருவூலம் உள்ளது என்பதனை அறியார்கள். ஆலிநாடன் திருச்சுற்றில் ஆர்யபடாள் வாசலுக்குக் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள ஹொய்சாள மன்னன் இரண்டாம் வீரநரசிம்மனின் கி.பி. 1232ஆம் ஆண்டு கல்வெட்டின்படி துவார சமுத்திர மன்னனான வீரவல்லப தேவனுடைய பட்ட மகிஷியான உமாதேவியால் திருக்குழலூதும் பிள்ளை சந்நிதி நிர்மாணிக்கப் பட்டதாக அறியப்படுகிறது. தயிர் வார்த்து உழக்கு நெய்யமுதும் சிறப்பமுதும் படைப்பதற்கான நிவந்தங்கள் விடப்பட்டதை இக்கல்வெட்டுகள் குறிக்கின்றன.

இச்சிற்பக் கருவூலத்தை வடித்து அளித்தவர்கள் ஹொய்சாளர்கள், கண்ணாடி ஏந்தும் காரிகை, கிளி ஏந்திய கிளி, நெற்றிக்குத் திலகமிடும் நேரிழையார் என உயிரோட்டம் மிக்கச் சிற்பங்கள். மிகச்சிறந்த கலை எழில் பொருந்திய கவின்மிகு சிற்பங்கள். திருவரங்கத் திருக்கோயிலில் மிக எடுப்பான அழகு வாய்ந்த சிற்பங்கள் இவைகளே. இந்த சந்நிதிதான் ரங்கவிலாச மண்டபத்தின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள கண்ணன் சந்நிதி.

இக்கோயிலில் அமைந்துள்ள மேல்தளப்படி வரிசையின் மீது ஏறினால், சிறந்த காட்சிகள் கிட்டும். கோயிலின் மேல்பரப்பு, விமானங்கள் எல்லாம் காணக் கண் குளிர்ச்சி பெரும்.

எரிகதிரோன் மண்டலத்தூரு ஏற்றி வைத்து, ஏணி வாங்கி அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்ளும் இப்பெருமான் திருக்கோயில் வழிபாட்டு முறைகள் இராமானுஜருக்கு முன்னர், வைகான சமாகவும், பின்னர் பாஞ்சராத்திரமாகவும் மாறியதாகக் கூறுவர்.

இப்பெருமான் 'காமங்கள் பல கொண்ட வேதங்கொண்டு கைத்தவமே செய்வோர்க்குக் காண்கில்லா பூமகள்கேள்வன்'. இராமானுஜர் பெருமானை வாழ்த்துகையில் தென்னரங்கம் செல்வமுற்றும் திருத்தி வைத்தான் வாழியே!

வான் திகழும் சோலை மதிலரங்கம் வண்புகழ் மேல் ஆன்றதமிழ் மறைகளாயிரர் என்று உரைத்தனர்.

இத்திருவீதியில் அருங்காட்சி ஒன்றும் உள்ளது. இந்தத் திருச்சுற்றின் கிழக்குத் திருச்சுற்றில் இந்துக்கள் அல்லாதார், பார்வையாளர் செல்லலாம். தெற்கில் சேஷராயர் மண்டபம், அதன் முகப்புத் தூண்கள் எட்டும், பாய்ந்து செல்லும் குதிரை மீது அமர்ந்த போர் வீரர்களுடைய சிற்பங்களும் காணத்தக்கன. அக்குதிரைகளின் காலடியில் விலங்குகளை வேட்டையாடும் வீரப் பெருமக்கள் சிற்பங்கள் காஞ்சிபுரம், வேலூர் முதலிய இடங்கள் போன்று இங்கும் காணப்படுகின்றன.

இதன் எதிரில் 953 கருங்கல் தூண்கள் மட்டுமே கொண்ட ஆயிரக்கால் மண்டபம் எனும் மண்டபம் உள்ளது. இத்திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் மிகப்பெரிய மண்டபத்தின் நடுவில் தேர் வடிவாய் அமைந்துள்ள ஒரு சிறிய மண்டபமான திருமாமணி மண்டபம் அமைந்துள்ளது.

ஆண்டுதோறும் வைகுண்ட ஏகாதசித் திருவிழாவின் போது பெருமாள், ஆச்சாரியர், ஆழ்வார்கள் இங்கு எழுந்தருளுவார். இந்தத் திருமுற்றத்தில் ஆயிரக்கால் மண்டபத்தினை ஒட்டி மிகப்பெரிய பந்தல் ஒன்று நாற்பத்தியேழு தென்னை மரங்களைக் கொண்டு அமைக்கப்படுகின்றது.

சோழர் பாண்டியர் காலக்கட்டடக் கலைக்கு இத்திருச்சுற்று சான்று பகர்கிறது. வடமேற்குத் திருமூலையில் நாச்சியார் சந்நிதி

அதன் பலவகை மண்டபங்கள் மாற்றங்கள் பெற்று அமைந்துள்ளன. 16–17ஆம் நூற்றாண்டுக் கால நாயக்க மன்னர் சிற்பங்களும் அழகிய சுவரோவியங்களும் தெலுங்கு மொழிக் கல்வெட்டுகளும் காண்கிறோம். இச்சந்நிதிக்கு வடக்கே வில்வ விருட்சம் உள்ளது. இம்முற்றத்தின் கிழக்குப் பகுதி தாழ்வாக அமைந்துள்ளது.

தொண்டரடிப் பொடி, திருப்பாணாழ்வார், கூரத்தாழ்வார், பிள்ளை லோகாச்சாரியர் முதலியோரின் சந்நிதிகள் இத்திருச்சுற்றில் அமைந்துள்ளன.

திவ்ய தேசங்களில் தமிழ்ப் பிரபந்தங்கள் இசையோடு முன்செல்ல, அதனைச் செவி மடுத்தவண்ணம் பெருமாள் பின்னே வர தமிழ் முன்வரத் திருமால் பின் வரச் சீர்திருத்தம் செய்தவர் இராமானுஜப் பிரான். அவர், இறுதியில் திருநாடு அலங்கரித்ததும், (மறைந்ததும்) அரங்கநாதப் பெருமாளே வசந்த மண்டபத்தில் அவரை வைக்குமாறு பணிக்க அவருடைய திருமேனியைத் தரிசிக்கும் சிறப்பு இத்திருச்சுற்றில் அடியவர்களுக்குக் கிடைக்கிறது. வேறு எந்தத் திவ்ய தேசத்திலும் அவ்வாய்ப்பு இல்லை. இராமானுசரின் உடலே பாதுகாக்கப்படுகிறது என்கின்றனர்.

### நான்காம் திருச்சுற்று

நான்காம் திருச்சுற்றுக்கு மஹர்லோகம் என்று பெயர். இதனைத் திருமங்கை மன்னன் சுற்று, ஆலிநாடன் வீதி என்பர். இதன் நுழைவாயிலுக்குக் கார்த்திகைக் கோபுரவாசல் என்று பெயர். இந்தத் திருச்சுற்றினைத் தெற்குமதிலின் நடுவேயுள்ள கார்த்திகைக் கோபுரத்தின் வழியே அடைகிறோம். முன்பு அடைக்கப் பெற்றிருந்த இக்கோபுரம் 15ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் திறக்கப் பெற்றது. நீண்டு செல்லும் மிகப்பெரிய கருட மண்டபம் உள்ளது.

கருடாழ்வார் சந்நிதியை வடக்குத் திசை வழியே அடையலாம். கருட மண்டபம் வரிசைக்குப் பதினாறு தூண்களாகப் பதினான்கு வரிசைகள் கொண்டது. நடுவிலுள்ள இரண்டு வரிசைகளில் மட்டும் பத்துத் தூண்கள் உள்ளன. ஆக மொத்தம் 212 தூண்கள் கொண்ட இக்கருட மண்டபம் இத்திருக்கோயிலின் அழகு வாய்ந்த மண்டபம் ஆகும்.

நடுப்பகுதியிலுள்ள தூண்களில் நாயக்க மன்னர்களின் உருவங்கள் கூப்பிய கைகளுடன் தொழுத வண்ணம் காணப்பெறுகின்றன. கருடாழ்வார் சந்நிதியின் வெளிச்சுவர்கள் 17ஆம் நூற்றாண்டின் மதுரை நாயக்க மன்னர் காலத்துப் பாணியில் அமைந்த தேவகோஷ்டங்களும், கும்ப பஞ்சரங்களும் கொண்டுள்ளன.

கருடாழ்வார் சன்னிதி எதிரில் உள்ள பரமன் மண்டபத்துச் சிற்பங்கள் கலை நுணுக்கம் வாய்ந்தவை.

கருவறை எதிரே மிகப்பெரிய உருவில் அமர்ந்த கோலத்தில் கருட ஆழ்வார் விளங்குகிறார். அவர் பெரிய தோற்றம் கொண்ட போதிலும் கருவறையில் உள்ள ஆதிசேஷருக்கு அடியிலேயே அமைந்துள்ளார். அவர் இறைவனின் அடிமை என்பதை ஒருபோதும் மறக்கவில்லை.

கருட தண்டகத்தில் தேசிக மகான் வருணித்தவாறே தோன்றுகிறார். திருவரங்கத்துப் பறவைகள் எல்லாம் கருடனைப் புகழ்ந்து பாடுவதாகப் பெரியாழ்வார் கூறுவார். பறவைகள் கூடப் பரமனைவிடப் பாகவதரை, இறைவனின் அடியவரைப் பணிந்து புகழ்வதே உயர்ந்தது என்று உணர்ந்துள்ளன என்பர்.

இத்திருச்சுற்றில் வேணுகோபாலன் பெரிய கருடன், அங்கதன். சுக்ரீவன், நம்மாழ்வார், மதுரகவி ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், கருடமண்டபம், ஆரியபட்டாள் வாசல், நெல் அளக்கும் திருக்கொட்டாரம், செங்கமல நாச்சியார், மேலப்பட்டாபிராமர், முதல் ஆழ்வார்கள் மூவர், வாசுதேவப்பெருமாள், தன்வந்திரி, சந்திரபுஷ்கரணி, சொர்க்கவாயில் வெளிப்புறம், கோதண்ட ராமர், பரமபத நாதர், போஜராமர், கீழ்ப்பட்டாபிராமர், சீனிவாசப் பெருமாள், திருமழிசை ஆழ்வார், சொன்ன வண்ணம் செய்த பெருமாள், சூரிய புஷ்கரணி, திருக்கச்சி நம்பி, தோன்றமல்லார் நாயுடுதம்பதிகள் காணலாம். இத்திருச்சுற்றில் வேறு எங்கும் காண்டற்கரிய மருத்துவப் பெருமாளாம் தன்வந்திரியின் சந்நிதி உள்ளது குறிப்பிடத்தக்கது.

*தன்வந்திரி :* புஷ்கரணிக்கு அருகே உயரமான மேடையில் தன்வந்திரி சன்னதி உள்ளது. ஒருமுறை அரங்கநாதருக்கே நலமில்லாமல் இருந்ததை இராமானுஜர் கண்டாராம். இதற்கான காரணத்தைக் கேட்டபோது பெரிய பெருமாள் யாரோ கொடுத்த

கருநெல்லியை, அடியவர் வழங்கினார் என ஏற்றதாகவும் அதனால் தொண்டை சீர்கெட்டது என்றும் கூறினாராம். புகழ்பெற்ற மருத்துவரை இராமானுஜர் மருந்து தயாரிக்கச் சொல்லிப் பெருமாளுக்கு அளித்தாராம். அதன்பின் பெருமாளுக்கு எப்போதும் பணி செய்ய மருத்துவர் தேவை என உணர்ந்து தன்வந்திரி சன்னதி அமைத்தாராம்.

சந்திரபுஷ்கரணியும், தீர்த்தக்கரை வாசுதேவரும் அரங்கநாதருக்கு முன்பே திருவரங்கத்தில் இருந்ததாகக் கூறுவர். சந்திர புஷ்கரணி அருகே உள்ள சன்னதி அரிய சன்னதியாகும். இது வியாசருக்கு உரியது ஆகும்.

வடக்குச் சிறகின் மேற்குப் பகுதியில் உள்ள வாசுதேவ விஷ்ணு, முதலாழ்வார்கள், தன்வந்திரி ஆகியோரின் சந்நிதிகள் எல்லாம் விஜயநகரப் பாணியில் அமைந்தவை. கிழக்குப் பகுதியிலுள்ள சூரிய புஷ்கரணிக்குப் படிவரிசை உள்ளது. இதனைப் பாதுகாப்புக் கருதி அடைத்துள்ளனர்.

இத்திருக்குளத்தைச் சுற்றியுள்ள கிருஷ்ணர், தொண்டர் அடிப்பொடி, அனந்த சயனர் சந்நிதிகள் சோழர் காலத்துப் பழைய பாணியில் அமைந்த தூண்களால் அழகு செய்யப் பெற்றுள்ளன.

இதன் கிழக்குப் பகுதியில் தனித்தனியே அமைந்த சந்நிதிகள் மண்டபங்கள் இருக்கின்றன.

தென் கோடியிலுள்ள சந்நிதி மட்டும் சோழர் காலத்துப் பாணிக் கற்றூண்கள் கொண்டது. தென் கிழக்கில் சூரிய புஷ்கரணித் திருக்குளம் அருகே பெருமாளின் ஊர்திகள் பல்லக்குகள் உடைய கொட்டகைகள் உள்ளன.

## மூன்றாம் திருச்சுற்று

சுவர்லோகம் எனப்படுவது இது.

கோபுர வாயில் வழியாகத் தாயார் சந்நிதியை அடையலாம். பெருமாளின் கருவறைக்கு வடக்கே தாயார் சந்நிதி உள்ளது. தாயார் என்று அன்னையை அன்போடு இதய சுத்தியோடு கருணைத் தெய்வமாதலால் விளிக்கின்றனர்.

கோபுர வாயிலைத் தாண்டித் தாயார் ஒருபோதும் வருவதில்லை. எனவேதான் தாயாருக்குப் படிதாண்டாப் பத்தினி என்று பெயர்.

பெருமாட்டியின் அழகும் கருணையும் அனைவரையும் அவள் திருமுன் கொண்டு நிறுத்துகிறது. அதனாலே தான் பெருமாளைக் காணுமுன் தாயாரைக் காணுகின்றனர். பெருமாள் கருணை காட்டுவதுடன், ஒருவனைத் திருத்தத் தண்டிக்கவும் கூடும். ஆனால் தாயாருக்குத் தெரிந்தது எல்லாம் தனிக்கருணை, தனிப் பாசம், தனி அன்புதான். தாயாரின் அரவணைப்பினை ஒருவன் பெற்று விட்டால்போதும் பெருமாள் அவருக்கு அடைக்கலம் அளிப்பார்.

தாயார் சன்னதியே ஒரு தனிக்கோயில் போலத்தான். அந்தத் திருச்சன்னதி உள்ளேயே தாயாரின் விழாக்கள், சடங்குகள், வழிபாடுகள் எல்லாம் நிகழ்வுற்றுவிடுகின்றன. தாயார் சன்னதியின் முன் பெரிய மண்டபம் உள்ளது. மண்டபத்தை அடுத்து மண்டபம் உள்ளது. இடதுபுறமாகச் சென்றால் சிறிது வெளி. பின்னர் சேர்த்தி மண்டபம் அதன் வழியே சுற்றி வந்தால் மறுபடியும் வெட்ட வெளி. தாயார் சன்னதியில் வில்வமரம் பல நூற்றாண்டுகளாக விளங்குகிறது.

தாயார் சந்நிதி எதிரே உள்ள நாலு கால் மண்டபத்தில் கம்பர் இராமாயணம் படைத்தார். இம்மண்டபத்துத் தூணில் யானைக்கு மோட்சம் வழங்குகிறார் நாராயணர். முதலையின் வாயிலிருந்து காப்பாற்றப் பெற்ற ஆனையின் காலுக்கு ஆறுதல் அளிக்கிறார்.

இதன் வலப்புறம் மேட்டு அழகிய சிங்கர் கம்பராமாயணத்தை ஏற்றதைக் காட்டுகின்ற வகையில் உறுமித் தன் கைகளை வெளிப்படுத்தினார் என்பர்.

தாயார் சன்னதி எதிரே வேதாந்த தேசிகரின் சந்நிதி உள்ளது. சுதர்சன பட்டரின் மகன்களும், தேசிகரின் அடியவர்களும், இதனைக் கட்டினார்கள்.

பண்டையக் கோயில்களில் சரசுவதிக்கும் அயக்கிரீவருக்கும் சன்னதிகள் அபூர்வமே. ஆனால், திருவரங்கத்தில் மூன்றாம் திருச்சுற்றில் சந்நிதிகள் உள்ளன. இந்தச் சந்நிதிகளின் எதிரில் பெரிய கிளிக்கூண்டு 6 அடி 5 அடி 7 அடியில் அமைந்துள்ளது. இந்தக்

கிளிக்கூண்டு முழுமையாகக் கல்லால் கட்டப் பெற்றது. அதில் மெலிதாகச் செதுக்கல் பெற்ற மெல்லிய கற்கம்பிகள் உள்ளன. காண்பதற்கு இரும்புக் கம்பிகள் போல் அவற்றைச் செதுக்கியுள்ளார் சிற்பி. சிற்பியின் கை வண்ணம் காண வேண்டிய ஒன்று. கல்லில் கிளிக் கூண்டு இரும்புக் கூண்டு போல் தோன்றும் சிறப்புக் காண வேண்டும். கலை, தொழில் நுட்ப அழகைக் கண்டு போற்றவேண்டும். இந்தத் திருச்சுற்றில் துர்க்கை அல்லது காளியின் திருஉருவம் அமைந்துள்ளது போலவே விநாயகரின் திருஉருவையும் காண்கிறோம்.

இந்தத்திருச்சுற்றில் ஒரு குறிப்பிட்ட முனையில் விரஜா நதி பூமிக்கடியில் பாய்வதாக நம்பப்படுகிறது. சுவர்க்க வாசல் கதவுகளுக்கு அருகில் உள்ள தூண் ஒன்று குறிப்பிடத்தக்கது. அத்தூண்களில் ஒன்றில் விபீடணன். ஸ்ரீரங்க விமானத்தைச் சுமந்து செல்வதைச் சிற்பி வடித்துக் காட்டி வழி வழி வந்த வரலாற்றுக்கு வடிவம் அளித்திருக்கிறான்.

இங்கு வராகர் சந்நிதி உள்ளது. எப்படி சைவக் கோயில்களில் சித்திர புத்திரர் சந்நிதியில் கையைத் தட்டித் தம் வருகையை இறைவன் அடியார்கள் பதிந்து வைப்பார்களோ, அது போலவே இத்திருக்கோவிலில் உள்ள வராகர் சந்நிதியில் கையைத் தட்டித் தம் வருகையைப் பதிவு செய்ய வேண்டுகிறார்கள். வராக மூர்த்தியே பிரளய வெள்ளத்தில் மூழ்காமல் உலகைச் சுமந்து காத்தவர். இல்லையென்றால் நாம் வாழ ஓர் உலகம் இல்லாமல் போயிருக்கும் என்பர்.

லோகம் என்பது இத்திருச்சுற்றின் பெயர். இதற்கு ஆர்ய படாள் வாசல் என்று பெயர். ஆரியர் என்னும் வடபுலத்து அந்தணன் காவல் புரிந்து வந்ததால் இப்பெயர் ஏற்பட்டது. இதற்குக் குலசேகரன் திருச்சுற்று எனவும் பெயர் இந்தச் சுற்றில்தான் தங்க முலாம் பூசப்பட்ட கொடிமரம் உள்ளது. இது 102 தங்கத் தகடுகள் பதிக்கப்பட்டது. கொடிமரத்தின் உச்சியில் கருடாழ்வார் திருஉருவம் அமைந்துள்ளது.

இந்த ஆரியபடாள் வாசல் இசுலாமியப் படையெடுப்பினால் எரித்து அழிக்கப் பெற்றதால், 15ஆம் நூற்றாண்டில் சோழர் காலத்துப் பாணியில் மீண்டும் புதிதாக அமைத்தனர்.

இத்திருக்கோயில் கொடிமரம் சுந்தர பாண்டியனால் நிறுவப் பெற்று, அதுவும் இசுலாமியர் படையெடுப்பினால் அழிந்துவிட கி.பி. 1461ஆம் ஆண்டில், மல்லிகார்ச்சுனராயரால் செம்பில் வடித்துத் தங்கத் தகடு வேய்ந்த கொடிக்கம்பமாயிற்று.

இத்திருச்சுற்றின் பகுதி பொன்முலாம் பூசப்பெற்ற செப்புத் தகட்டு ஓடுகளால் வேயப்பட்டுத் தங்க முலாம் பூசப்பெற்றது. இத்திருச்சுற்று மிகவும் குறுகலான ஒன்று. இப்பகுதி அரை வெளிச்சமாகவே உள்ளது. கருவறையைச் சுற்றியுள்ள இரண்டாம் திருச்சுற்றின் வெளிப்புறச் சுவர்களில் சில தூண்களில் நாயக்க மன்னர்களின் உருவங்கள் புடைப்புச் சிற்பமாக இயற்கையளவில் செதுக்கப்பட்டுள்ளன. தென்புறத்தில் சரசுவதி, அயக்கிரீவர், விஷ்ணுதசமூர்த்தி ஆகியோரின் சந்நிதிகள் அமைந்துள்ளன.

இத்திரு வீதியின் மேல்புறம் நீள வாட்டத்தில் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. உட்புறச் சுவரை ஒட்டியுள்ள பகுதி உயர்ந்த மேடையாக அமைந்து ஒரு பொதுத் தாழ்வாரத்தில் தொடர் வரிசையாக அமைந்துள்ள அறைகள் பலவற்றைக் கொண்டுள்ளது. அம்மேடையின் கீழ் பாண்டியர் காலத்துப் பாணியில் அமைந்த இருவரிசைத் தூண்களுடன் ஒரு குறுகலான இடைவெளி உள்ளது. இவ்விடைவெளி வழி ஒரு பெரிய மண்டபத்தை நோக்கிச் செல்கின்றது. உயரமாகச் சதுரவடிவில் எழுப்பப்பெற்ற மேடையின் மீது அமைந்துள்ளது. அதில் ஒன்றினுள் ஒன்றாக அமைந்து இரண்டு விதானங்கள் இருக்கின்றன. இந்தக் கட்டிடத்தினுள் துறைமண்டபம் என்று பெயர் கொண்டுள்ளது. இத்திருவீதியின் வடமேற்கு மூலையில் அமைந்துள்ள உள்கோடை என்னும் மண்டபத்தை அடுத்து அணித்தாகவுள்ளது. வடகிழக்கு மூலையை நோக்கிப் பெருமாளின் திருமடைப் பள்ளிகள் உள்ளன.

இத்திருவீதியின் கிழக்குச் சிறகிலேயே இத்தகு பல கட்டடங்கள், பழைய சோழர் காலப் பாணியில் நிறுவப் பெற்ற தூண்களுடன் கட்டப் பெற்றுள்ளன. இச்சுவர்கள் மகர வடிவில் அமைந்த வளைவுகளைக் கொண்ட பல சிறு சிறு மாடங்களால் அழகுபடுத்தப் பெற்றுள்ளன.

## இரண்டாம் திருச்சுற்று

இத்திருச்சுற்றுக்கு இராஜமகேந்திரத் திருவீதி, தவோலோகம் என்னும் பெயர்கள் உள்ளன. இராஜமகேந்திர சோழனால் கட்டப்பட்டது. இதன் நுழைவாயிலுக்கு நாழி கேட்டான் வாசல் என்பது பெயர். இவ்வாசலுக்குப் பெருமாள் வந்ததும் நாழிகை என்ன எனக் கேட்கும் வழக்கம் இருந்ததால் நாழிகேட்டான் வாசல் என்று பெயர் என்பர். இத்திருச்சுற்று கருவறைப் புறச்சுற்று ஆகும்.

இரண்டாவது திருச்சுற்றில் யக்ஞ சாலை, விஷ்வக் சேனர், விபீடணர், ஆஞ்சனேயருக்குச் சன்னதியும் திருவரங்கத்துப் பெருமாளின் திருப்பாதங்களும் உள்ளன. இந்தத் திருச்சுற்றினை ஒட்டியுள்ளதுதான் கிளி மண்டபம் ஆகும்.

சுல்தானின் மகளான, பெருமாளின் அடியவளான துலுக்க நாச்சியாருக்கும் ஒரு சன்னதி உள்ளது.

விமானத்தில் உள்ள பரவாசு தேவருக்கு விமானத்தில் தனி இடம் உள்ளது. இந்தத் திருச்சுற்றின் முனையில் கண்ணனின் சந்நிதி உள்ளது. கண்ணனின் தந்தை வாசுதேவரின், தாயார் தேவகியின் திரு உருவங்களும் உள்ளன. கண்ணபிரான் கிருஷ்ண ஜயந்தியில் உலா வருவது இங்கிருந்துதான்.

இரண்டாம் திருச்சுற்றின் மேற்கு, கிழக்குப் பகுதிகளில் படிக்கட்டுகள் உள்ளன. கருவறைக்குச் செல்லும் மண்டபத்தின் உள்ளே செல்ல இந்தப் படிக்கட்டுகள் உதவினாலும் கிழக்குப் புறப் படிக்கட்டுகளே தரிசனத்திற்குச் செல்லத் திறந்து விடப்படுகின்றன.

மேற்குப் புற வாயில் வழியாகவே பெருமாள் திருஉலா வருவார். இந்த மேற்குப் புறப்படிக்கட்டுகளிலேதான் கற்பூரப் படியேற்ற சேவை கார்த்திகை மாதத்தில் நடைபெறும்.

இம்மண்டபத்தின் ஒருபுறம் உள்ளது சந்தனு மண்டபம். நம் பெருமாளின் திருமஞ்சனம் பெரிதும் இங்கே நடைபெறும். இம்மண்டபத்தின் ஒருமுனையில் கண்ணாடி அறை உள்ளது. நுழைவாயிலில் ஜெய, விஜயர் உள்ளனர்.

அதனுள்ளே உள்ள கூடத்திற்குக் காயத்ரி மண்டபம் என்று பெயர். அங்கு உள்ள 24 தூண்களும் காயத்ரி மந்திரத்தின் 24 எழுத்துக்களைக் கொண்டுள்ள முதல் திருச்சுற்றின் நுழைவு இந்த மண்டபத்தின் வழியே தான் உள்ளது. கருவறையைச் சுற்றிப் பெரியவர்கள் பலர் முழங்காலிட்டுச் சுற்றி வருவர். இந்த அடியில் சாளக்கிராமம் உள்ளதால் அவ்வாறு முழங்காலிட்டுச் செல்வர். எனினும் மக்கள் அங்குச் செல்வதில்லை.

கருவறை முன் உள்ள இரு தூண்கள் திருமணல்தூண்கள். அவற்றை யார் ஒருவர் கட்டிப்பிடிக்கிறாரோ அவர் முக்தி அடைவதாக ஐதீகம்.

திருவரங்கம் தசாவதார க்ஷேத்திரம் எனப்படுகிறது. திருமங்கை ஆழ்வார் இத்திருச்சுற்றில் கையில் வாளுடன் அவர் எவ்வாறு அஷ்டாச்சர மந்திரத்தைக் கொண்டார் என்று காட்ட உள்ளார். அது கோயிலின் முதன்மை வடக்கு வாசலில் அகோபில மடத்தின் கட்டுப்பாட்டில் உள்ளது.

இதற்கும் தெற்குப் பகுதி வாயிலின் வழியே செல்லும் பாதை ஒன்றே ஒன்று மட்டும்தான் உள்ளது. நாழிகேட்டான் வாயில் கோபுரம் கருவறையின் நேர் செங்கோட்டிற்குக் கிழக்கே சற்றுத் தள்ளி அமைந்துள்ளது. வாயிலின் வெளிப்புற முகப்பின் இருபுறமும் உள்ள மாடங்களில் பத்திரர், சுபத்திரர் எனும் இருதுவார பாலகர்கள் உள்ளனர்.

உட்புற முகப்பில் சங்கு வடிவத்திலும், தாமரை மலர் வடிவத்திலும் உள்ள சங்கநிதி, பதுமநிதி ஆகியோரின் திரு உருவங்கள் இருபக்கங்களிலும் உள்ளன. இத்திருச்சுற்று முழுவதும் பெரும்பாலும் மேலே மூடப்பட்டுள்ளது. மேலும் அதன் கூரை மிகவும் தாழ்வாக உள்ளது.

இங்கு ஏனையத் திருச்சுற்றுகளைவிட இருள் கவிந்து இருப்பதைக் காணலாம். இத்திருவீதியின் தெற்கிலும் மேற்கிலும் சுவரை ஒட்டி அறைகள் உள்ளன. சுவாமி புறப்பாட்டின் போது திருஉருவின் முழு அழகைக் காண மிகப் பெரிய நிலைக் கண்ணாடிகள் இடம் பெற்றுள்ள.

இந்த விஜயரங்க சொக்கநாதர் தெலுங்கு மொழியில் ஸ்ரீரங்க மகாத்மியம், துலாகாவேரி மகாத்மியம் ஆகிய இரு நூல்களை இயற்றியுள்ளார்.

மேற்குப் பக்கத்து மேடையில் ஒரு கண்ணாடிப் பேழையில் விஜயரங்க சொக்கநாதர் நாயக்கர், மனைவி, மகன், மகள் ஆகியோர் உருவங்கள் தந்தத்தில் இயற்கை அளவில் செய்து வண்ணந்தீட்டி வைக்கப் பெற்றுள்ளன. விஜயரங்க சொக்கநாதர் இங்கு இடம் பெற்ற வரலாற்றைத் தனியே காண்போம்.

மேடைகளின் முன்னேயுள்ள நடைபாதையில் ஒவ்வொன்றிலும் 20 தூண்களாக இரு வரிசைகள் உள்ளன. தெற்கில் மூலைத் தூண்களில் ஒவ்வொன்றிலும் நாயக்க மன்னர்களுடைய தொழும் அமைப்பிலான சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

தென்மேற்கு மூலையில் பெருமாள் புறப்பாட்டின் போது பயன்பெறும் அணிகலன்கள், கொடிகள் தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன. புறப்பாட்டின்போது அணியப் பெறுவன அவை.

இத்திருச்சுற்றின் வடமேற்கு மூலையில் யாக சாலையும் தொண்டைமான் மண்டபமும் உள்ளன. அவற்றின் கூரைகளில் வண்ண ஓவியங்கள் அழகு சேர்க்கின்றன. இச்சந்நதியை ஜடாவர்மன் முதலாம் சுந்தர பாண்டியன் அமைத்ததாகத் தல வரலாறு கூறுகிறது.

இத்திருச்சுற்றின் கிழக்கில் வடக்கும் தெற்குமாக அமைந்துள்ள இரு மண்டபங்களை உட்கொண்டுள்ளது. வடக்கில் இருப்பது அருச்சுன மண்டபம். இது உயரமானது. தெற்குப் பகுதியில் உள்ள மண்டபம் கிளி மண்டபமாகும். இம்மண்டபத்தில் செப்புத் தகடு பதிக்கப்பெற்ற இடத்தில் நின்று பொன் விமானத்தையும், விமான அரங்க நாதரையும் காணலாம். இம்மண்டபத்தில் கிளியினால் இக்கோயில் கண்டுபிடிக்கப் பெற்ற வரலாறும், கிளிக் கூண்டும் உள்ளன. இந்த இரு மண்டபங்களையும் கட்டியவர் மல்லிகார்ச்சுனர் காலத்தில் வாழ்ந்த உத்தம நம்பி என்பவர்.

ஸ்ரீசைலேச தனியனைப் பெருமாள் குழந்தை வடிவில் பொதியப் பெற்றது இந்தத் திருச்சுற்றில்தான். இதில் உள்ள கிளிமண்டபத்தை அமைத்தவர் திருமங்கையாழ்வார் என்பர்.

சந்திரன் சுக்கிரன் ஆகியோர் பாவத்தைக் கிடந்த கோலத்தையுடைய அரங்கர் தீர்த்திருக்கிறார். அக்கினி, பிரகஸ்பதி, இந்திரன், ஜனகர் முதலியோர் பூஜித்த மூர்த்தி நம் அரங்கர்.

## முதல் திருச்சுற்று

சத்தியலோகம் எனப்படும் இந்த முதல் சுற்றை உருவாக்கியவன் தர்மவர்மன் எனும் சோழ மன்னன் என்பர். இதன் நுழைவாயிலுக்குத் **திருஅணுக்கன் திருவாசல்** என்பது பெயர். இந்தத் திருச்சுற்றிலேதான் கருவறை அமைந்துள்ளது. பேரழகுடன் பெருமாள் சயனத் திருக்கோலம் காட்டுவது இத்திருச்சுற்றில்தான்.

கருவறை முன் உள்ள மண்டபம் ரங்க மண்டபம். இதனைக் காயத்ரி மண்டபம் என்பர்.

இத்திருச்சுற்றில் அரங்கநாதப் பெருமான், ஆதிசேடன், அழகிய மணவாளர், ஸ்ரீதேவி, பூதேவி, நித்யபேரர், பலிபேரர், சயனப் பேரர், தீர்த்தப் பேரர், யாகப் பேரர், தும்பிக்கை ஆழ்வார், விஷ்ணு துர்க்கை. காயத்ரி மண்டபம், சந்தன மண்டபம், துவார பாலகர்கள் இடம் பெற்றிருப்பதைக் காண்கிறோம்.

ஆதிசேடனாகிய அரவணையின் மீது வலப்புறம் சாய்ந்து கொண்டு அரங்கத்துப் பெருமான் அருள் பாலிக்கிறார். இத்திருவும் குழைகாரையில் (Stucco) உருவானதாகையால் புணுகு சட்டம் எனும் தைலக் காப்பிடப் பெற்று மெருகு பெற்றுள்ளது. இத்திரு உருவத்தின் நீளம் 6.40 மீட்டர் (21 அடி) ஆகும். திருவரங்கரின் திருவடிகள் செந்தாமரை மலரின் மீது வைக்கப்பெற்றுள்ளன. அத்திருப்பாதங்கள் அருகேயே அமரும் பேறு பெற்றிருப்பவர் விபீடணர்.

அவருடைய அருகில் இசுலாமியப் படையெடுப்பின் போது மூலப் படிமம் கிடைக்காத போது வழிபடப் பெற்ற **யோக பேரர்** எனும் **திருவரங்க மாளிகையர்** உருவ நேர் படிமம் உள்ளது. அரங்கநாதரின் முன்னர் உற்சவர் **அழகிய மணவாளர்** என்னும் நம்பெருமாள் இருக்கிறார். பெருமாளின் இருபுறமும் ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய இருவரும் உள்ளனர்.

கருவறையின் முன் இரண்டு தூண்கள் உள்ளன. அவற்றை மணத்தூண் (மணல் + தூண் = மணத்தூண்) என்பர். மணலில் அமைந்த தூண்கள் அவை என்பது தான் அவற்றின் சிறப்பு. பரவாசு தேவனின் பிம்பத்தைக் கொண்ட ஸ்ரீரங்க விமானத்தை, ஸ்ரீரங்கப் பேராளன் 'சைத்யகூட' காயத்ரி மண்டபம் தாங்குகிறது. 30 அடி நீளக் கருவறையினுள் 21 அடி நீளத்தில் பெரிய பெருமாள் அருள் பாலிக்கிறார்.

கருவறையின் மேலே பொன்மய விமானம் உள்ளது. தாமரையின் இதழ்களிலிருந்து வெளிவரும் நிலையிலுள்ள நான்கு பொற்கலசங்கள் சூட்டப்பெற்றுள்ளன. விமானத்தின் ஒவ்வொரு புறமும் மகரவடிவில் உள்ல பலகணியில் தெற்கில் பரவாசுதேவரும், மேற்கில் அச்சுதரும் வடக்கில் அனந்தரும், கிழக்கில் வேணுகோபாலர் அல்லது கிருஷ்ண கோவிந்தரும் காட்சி தருகின்றனர். நூற்றி எட்டு மூலிகைப் பொருட்களுடன், வைரப் பொடியும் கலந்து உருவான மூலவரின் பாதங்களுக்குத்தான் தினமும் திருமஞ்சனம்.

காலச் சுவடுகளால் மறைந்து போகாமல், இன்னும் காலம் காலமாக நிலைத்து நிற்கத்தக்க திருக்கோயில் இது. கோயில் திருப்பணிகள் எல்லா சமூகத்தினருக்கும் அவரவர் தகுதிக்கேற்ப ஏற்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. இராமானுசர் தம் காலத்தில் இருந்த ஐந்து பிராமணர் கொத்துக்களின் கைங்கர்யங்களைப் பிரித்துப் பத்துப் பிராமணக் கொத்துக்களையும் ஏற்படுத்தி, அவர்களுக்கெனச் சிறப்பு மரியாதைகளையும் ஏற்படுத்தினார். காலத்தின் கோலம் அவை அதற்கு உரிமை படைத்தோரால் நடைபெறவில்லை.

இயல் : ஆறு

# திருக்கோவில் நிருவாகம்

சிறந்த நிருவாகக் கட்டமைப்புடன் அன்று முதல் இன்றுவரை மாற்றாமல் இருந்து வருவதுதான் குறிப்பிடத்தக்கது.

கோயிலின் நிருவாகம் பலவகைப்பட்ட அமைப்புகளையுடைய ஓர் பேரவையினரிடம் ஒப்படைக்கப்பெற்றுள்ளது. அதன் உறுப்பினர்களில் சிலர் மதிப்பியற் பதவிகளுக்கும், சிலர் பரம்பரை அலுவலர்களுக்கும் நியமிக்கப் பெற்றிருந்தனர். சிலர் கிராம சபையாலும் வணிகக் குழுவாலும், கோவில் அர்ச்சகர்களாலும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இப்பணிகளுக்கு ஊதியம் இல்லை. கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?

இப்பேரவையில் செயலியல் அடிப்படை முதன்மையுடையதாக அமைந்து இருந்தது. பணியாளர்களின் பலவகைப்பட்ட படி நிலையில் உள்ளவர்களின் ஊதியங்களை ஆய்ந்து முடிவு செய்தனர். பணியாளர் குழு பெரியது.

முதலாவதாகக் கருவூலர்களையும் கணக்கர்களையும் உள் அடக்கிய ஆட்சியாளர்கள் இருந்தனர். கருவூலர்கள் கோயில் கருவூலத்தை மேற்பார்த்தனர்.

கணக்குகளைச் சரிவர வைத்துக் கொள்வதற்குப் பொறுப்பாளர்கள் கணக்கர்கள் ஆவர். உரிய வரிகளைப் பெறுதல், பணியாளர் ஊதியங்களை வழங்குதல் ஆகியவற்றைச் செய்தனர். இக்கணக்கர்கள் கிராம சபைகளால் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பணியாளர் தொகுதியில் பிராமண குலத்தவர்களும் உதவியாளர்கள் இருந்தனர். சுவாமிக்கு உரிய நிவேதனத்தைச் செய்யும் திருமடைப் பள்ளியாளர்களும் இவ்வுதவியாளர் பட்டியலில் இருந்தனர். நித்திய நைமித்திக பூசைகளில் கலந்து கொள்பவர்கள் இசைவாணர்கள், கூத்தர்கள், நடனப் பெண்டிர் ஆகியோரும் இடம்பெற்றனர். வடமொழி வேதங்களை ஓதுபவர்களும், செந்தமிழ் மாலைகளைப் பாடுபவர்களும் பலவகை இசைக்கருவிகளை வாசிப்பவர்களும் இடம் பெற்றிருந்தனர்.

கோயிலுக்கு ஊழியம் செய்யும் கைவினைஞர்களும், கோயில் வழிபாட்டில் தொடர்புடைய வேறு சிலரும் இருந்தனர். அவ்வாறு இருந்தவர்களில் நாள்தோறும் பிரசாதம் செய்யும் மடப்பள்ளியில் பயன்படுத்தப் பெறும் மட்பாண்டம் செய்வோர், செப்புப்பாத்திரம் செய்வோர், கடவுளரின் ஆடைகளைத் துவைத்துத் தூய்மை செய்வோர், நாவிதர்கள், தையற்காரர், பொற்கொல்லர், தச்சர் ஆகியோர் இருந்தனர்.

கோவிலைக் காவல்புரியும் சேவகர்கள், பாதுகாவலர்கள், திருஉலாவின் போது நீர் தெளிப்போர், மாலைகள் தொடுப்போர், கோயிலைச் சார்ந்த ஆசிரியர்கள் ஆகியவர்களும் இருந்தனர். கோயிலைச் சார்ந்த ஒரு மருத்துவப் பணியமைப்பு, மருத்துவர், அறுவையர், உதவியாளர், செவிலியர்களைக் கொண்டிருந்தது.

இப்பதவிகளில் பெரும்பாலானவை மரபு வழிப்பட்டவை. சில பணிகளுக்குத் தனிச் சிறப்புத் திறமையும், பயிற்சியும் தேவைப்படாமையால் அப்பணி தவிர்த்தவர்களுக்கு உரிய திறனும் பயிற்சியும் இன்றியமையாததாயிற்று. அத்தகைய பயிற்சி பெற்ற கிரியைகள் மேற்கொள்வோர் நம்பிகள் ஆவர்.

1803 வரை நடந்த நிகழ்ச்சிகள் கோயில் ஒழுகின் வழி ஏடு படுத்தப்பட்டுள்ளன. கி.பி. 1803ஆம் ஆண்டுக்குப் பின் கோயில் ஒழுகு எழுதப் பெறவில்லை.

ஒவ்வொருவருக்கும் ஊதியம் வழங்கப் பெற்றது. கோயிலுக்கு வாழ்நாள் முழுவதும் நிலையான சேவை செய்யத் தம்மை

ஒப்புவித்தவர்களுக்கு மிகுதியான ஊதியம் வழங்கப்பெற்றது. திருமடைப் பள்ளியர், காவலர், வேறு சிலர் குறிப்பிட்ட அளவு சோறு, காய்கறிகள், வெண்ணெய் பெற்றனர்.

ஊதியம் என்பது ஆண்டுக்கு ஒருமுறை, பணி ஒப்பந்தத்தின்போது வரையறுக்கப் பெற்றபடி தானியங்களாகவோ அல்லது அறுவடையின் நிலையின் அளவுக்கு ஏற்றபடியோ வழங்கப்படும். கோயில் பணியாளர்கள் வீட்டுவசதியும் பெற்றனர். பணியாளர்களுக்குப் பஞ்சகாலத்திலும் அல்லது ஏதேனும் எதிர்பாராத இடுக்கண் ஏற்பட்டபோதும், மிகவும் தேவை ஏற்பட்ட போதும் உதவிகள் வழங்கினர்.

இராமானுஜர் காலத்திற்கு முன்னர் ஐவகைப் பதவிகளே (கொத்துக்கள்) இருந்தன. இராமானுஜர் அவற்றைப் பத்தாக உயர்த்தினார். கோயில் ஒழுகு என்னும் தலவரலாற்று நூல் அவற்றைக் குறித்து விரிவாகக் கூறுகிறது.

*திருப்பதியார்* : முதல் வகையினர் திருப்பதியார்கள். மூலத்தான ஊழியத்திற்குப் பொறுப்புடையவர்கள் இவர்கள். இவர்களின் தலைவர் தண்டு என்னும் முத்திரைக்கோல் ஏந்திச் செல்வார். இவர்கள் கோயில் கருவறைக் கதவு திறந்த உடனேயே முகப்பு மண்டபம், திருவாயில், சுற்றிவரும் திருச்சுற்று ஆகியவற்றைத் திருஅலகிட்டுத் தூய்மை செய்வர். வழிபாட்டில் பயன்படும் திருவிளக்குகள் அனைத்தையும் நெய்யிட்டுத் திரி ஏற்றிப் பராமரிப்பர். வழிபாட்டுக் காலங்களில் இவர்கள் திருவிளக்குகளை ஏற்றி வழிபாடு நிகழ்த்தும் அருச்சகர்களிடம் முறையே எடுத்துக் கொடுப்பர். விளக்குகள் ஏந்துதல், தூபங்கள் இடுதல், பிரசாதங்களை அடியவர்க்கு வழங்குதல் முதலிய பணிகளைச் செய்தனர். பிற்காலத்தில் வேதம் ஓதுதல், பிரபந்தம் பாடுதலையும் செய்தனர்.

*திருப்பணி செய்வார்* : இரண்டாம் வகையினர். திருமஞ்சனத்திற்கு நீர் கொண்டு வரும் தூய பணியாளர். இவர்கள் எண்ணிக்கையில் ஐவர் மட்டுமே. புனித இடங்களில் நீர் தெளிப்பது, திருவிழாக்கள், ஊர்வலங்களில் இறைவனுக்குக் குடைபிடிக்கப்படும் போது நீர் இடுவது, வாசனைப் பொருளிட்ட பரிமள நீரைச் சிதறுவிப்பது

இவர்களின் பணி ஆகும். திருவீதிகளில் நீர் தெளிக்கப்படுவதை மேற்பார்ப்பதும் இவர்களின் கடமையாகும்.

வேதம், பிரபந்தம் ஓதுபவர்களுக்கு முன்னர் குடைபிடித்தலும், ஊர்வலத்தினை முன்னின்று நடத்துதலும், பக்தர் காணிக்கைப் பொருட்களைப் பெறுதல், அவற்றைக் கோயில் அலுவலர்க்கு வழங்குதலும் இவர்களின் சிறப்புரிமைகளாகும்.

இராமானுஜர் காலத்தில் வீதிகளை மேற்பார்வையிட இவர்கள் யானைகள் மீது அமர்ந்து சென்றனர். இவ்வுரிமைகளைப் பின்னர் பிராமணர்களுக்கு விட்டுக் கொடுத்து விட்டனர்.

*நம்பிகள் :* இராமானுசர் இவர்களைச் சுவாமி கைங்கர்யம், வழிபாட்டிற்கு, திருச்சுற்றில் உள்ள சிறுசிறு சந்நிதிகளிலுள்ள சுவாமிகளைப் பூசிக்க நியமித்தார். கருவறையில் வழிபாட்டின்போது தூப தீபங்களை ஏந்துவர். கருவறையில் ஆடை அணிகலன்களைக் கழற்றியும், மாற்றியும் அணி செய்வர். சுவாமிக்குக் கொணரும் வழிபாட்டுப் பொருள்களை ஏற்பர். திருமஞ்சனம், விசேடத் திருமஞ்சனம் ஆகியவற்றிற்கு வேண்டிய பொருள்களை இவர்கள் எடுத்துக் கொடுப்பர். சுவாமி தந்த சுத்தியின் போது கண்ணாடி எடுத்துக் கொடுத்தல் செய்வர். கொடிக் கம்பத்தில் 'துவஜாரோகணம்' எனப்படும் கொடியேற்றுதல் நடைபெறுகையில் விருதுக்கொடி, சங்கு, சக்கரம், கதாயுதம் ஆகியவற்றைப் பாதுகாத்து அளிப்பர். சுவாமியை வாகனங்களில் ஏற்றி அமர்த்துதல், பூமாலைகள் சாத்துதல், களைந்த மாலையைச் சூட்டுதல், சுவாமிக்குக் குடை பிடித்தல் முதலிய உரிமைகளையும் இவர்கள் பெற்றிருந்தனர்.

சுவாமிக்கு உரிய அணிகலப் பேழைகளைப் பொறுப்பாக வாங்கி அவற்றின் பொறுப்புடைய அலுவலர் பால் ஒப்படைப்பர். சுவாமி புறப்பாட்டின் போது வேதப் பகுதிகளை ஒப்புவித்தல், சுவாமி பற்றிய பொருள் பொதித்த பாடல்களைப் பாடவும் இவர்கள் உரிமை உடையவர்கள்.

இரவில் பூட்டி முத்திரையிட்ட பொற்கதவு வாயில் காப்பாளர்களாகவும் விளங்கியுள்ளனர்.

*உள்ளூரார்* : இவர்கள் இராமானுஜரின் சீடர்களாக விளங்கியவர்கள். இவர்கள் மூலவருக்கும், உற்சவருக்கும் திருப்பணி செய்வோர் ஆவார். சுவாமி பூசைப் பொருட்கள், ஆடை, அணிகலன்கள், விசிறி, குடை அணிகலன்கள், பஞ்சணைகள், வெற்றிலைப் பேழை, முதலியவற்றைப் பாதுகாத்து, எடுத்துப் பயன்படுத்துவதும் இவர்களின் பொறுப்பாகும்.

எல்லாச் சடங்குகளின் போதும், திருவீதி உலாவின்போதும் பெருமாளுக்குச் சந்தனம், சுவைமிக்க பிரசாதம், திருஅமுதுகள் அளிப்பர். திருமஞ்சன நீரில் நறுமணச் சாந்து கலத்தல், ஆலவட்டம் வீசுதல், சுவாமிகளின் திருவடிகளில் நீர் சொரிதல், சுவாமிக்குத் தாம்பூலம் வழங்குதல், புத்தாடை, துளசி மாலை, சந்தனக் கலவை வழங்குதல் செய்வர். வேதமும், திவ்வியப் பிரபந்தமும் ஓதுபவர்களின் முன் தேங்காய்ப்பால் வைப்பர். புனித விளக்குகளை மாற்றி வைப்பர்.

உறையூரில் சுவாமியும், தாயாரும் சேர்ந்திருக்கும் போதும், சேர்த்தியின் (வைகாசி விசாகத்தன்று வருடத்தில் ஒருநாள் தாயாரும், எம்பெருமாளும் சேவை சாதிக்கும் நாள்) போதும், அணியாக நின்று வணங்கி ஆலவட்டப் பணிபுரிவர். கோவிலின் தலைமை நிருவாகியைச் சிறப்பித்தல், அவர் பொருட்டு அர்ச்சனை செய்தல், சந்தனம், தாம்பூலம் முதலிய பிரசாதங்களை அளித்தல் செய்வர்.

உள்ளூரார் பிற்காலத்தில் தம் பணிகளை மற்றவர்களிடம் ஒப்படைத்துவிட்டு அவற்றைக் கண்காணிக்கும் பொறுப்பையும் கௌரவப் பணிகளையும் தாமே மேற்கொண்டு விட்டனர்.

*விண்ணப்பம் செய்வோர் - இசைவாணர்கள்* : இசை வாணர்களும் திருப்பதிகம் பாடுவோரும் விண்ணப்பம் செய்வோர் எனப்பட்டனர். சிறிய வீணை வாசித்தல், வேதம் ஓதுதல், பிரபந்தப் பாராயணம் செய்தல், இசைபாடுதல் ஆகியவற்றை இறைவனின் முன்பு இவர்கள் மேற்கொண்டனர். இவர்களின் பாடலும், இசையும் இறைபணிக்கே உரியன. இசைக்கலையில் தேர்ச்சியும் சாத்திரங்களில் பயிற்சியும் பெற்றிருந்தனர். ஆதலால் கோயில் பணிகளில் மிகச்சிறப்பான உயர்விடத்தை இவர்கள் பெற்றிருந்தனர். கோயிலின் தனிச் சிறப்புப் பெற உரியவர்கள் இவர்கள். விறலியர் நடனமாடுகையில் பாடியதும் உண்டு.

*திருக்கரகக்கையார் :* (சுவாமி பூசையில் நேரடியாகவும் நிலையாகவும் பங்கு பெறுவோர்) கரகம் என்றால் குடம். இறைவனுக்கு நீர் கொண்டு வரும் குடம் ஏந்தி வந்தவர்கள் ஆதலால் திருக்கரகக்கையார் என்று பெயர் பெற்றனர். விடிகாலையில் தீர்த்தக் குடங்களை எடுத்துக் கொண்டு சென்று இரண்டு நாள்களுக்குத் தேவையான தீர்த்தங்களைக் காவிரி ஆற்றிலிருந்து அவற்றில் எடுத்துக் கொண்டு யானையின் மீது வைத்துக் கோயிலுக்குக் கொண்டு வரும் கடமையை இவர்கள் மேற்கொண்டனர்.

பின்னர் நாள் முழுவதும் செய்யப்பெறும் அனைத்து வழிபாடுகளிலும் பயன்படுத்தப்பெறும் ஐந்து பாத்திரங்களில் நீர் நிரப்பி வைத்தல் வேண்டும்.

ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் சுவாமி முகங்கழுவிப் பல்துலக்கும் சடங்கின்(தந்த சுத்தி) போதும், பிறகு அவருக்குத் தாம்பூலம் வழங்கும் போதும், பாதபூஜையின் போதும் தீர்த்தப் பாத்திரங்களை இவர்கள் ஏந்துவர். திருவிழாக்களுக்கு மலர் மாலைகள் தொடுத்து அளிக்கும் பொறுப்புள்ள அலுவலரின் கைகளுக்குத் தண்ணீர் வார்ப்பதும் சுவாமிக்கு மலர் மாலைகள் தொடுப்பது, ஆரங்கள் அமைப்பதும் இவர்களின் கடமைகளாக இருந்து வந்தன. இப்பணிகளை மட்டும் பின்னர் பிராமணர் அல்லாதவர்கள் மேற்கொள்ளலாயினர்.

*ஸ்தானத்தார் :* (பல்லக்குடன் செல்வோர், குடைபிடிப்போர், பிரசாதம் வழங்குவோர்) பெருமாளின் பூஜையோடு தொடர்புடைய எல்லாவற்றையும் கவனித்துக் கொள்வது இவர்களின் கடமை. சுவாமி ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எழுந்தருளுகையில் அவருடைய பல்லக்கைச் சுமத்தல், வாகனங்களைத் தாங்குதல், திருவீதி உலாக்களின்போது தீர்த்தக் கலசங்களுக்குக் குடைபிடித்தல், சுவாமியுடன் செல்லுதல், பால், தயிர், வழங்குதல், உயர் அலுவலர்களுக்குப் பிரசாதங்களை அளித்தல், கோயில் தலைமை ஆட்சியருக்குப் பூமாலைகள் சூட்டுதல், சுவாமியின் விலைமதிப்புடைய அணிகலன் பாதுகாப்பு அறைக்குக் கருட முத்திரை இடல், இவர்களின் சிறப்புரிமைகளாகும். பிற்காலத்தில் நம்பிகளுக்குத் தம் உரிமைகளில்

சிலவற்றை விட்டுக் கொடுத்தனர். கருட முத்திரை பதிக்கும் உரிமை நாச்சியார் சந்நிதியை நிருவகித்த அலுவலரிடம் இறுதியாக மாறியது.

*பட்டர்கள் :* (தினசரி பூஜை செய்வோர்) நாள்தோறும் கருவறையில் வேதமந்திரங்கள் ஓதும் கடமையும் பொறுப்புமுடையவர்கள் இவர்கள், நித்தியப்படி பூஜை, சிறப்பான விழாக்கள் ஆகியவற்றில் உடனிருந்து கலந்து கொள்வர். சுவாமிகளின் பிரசாதங்களைப் பெறுவர். ஸ்ரீ இராமானுஜருக்குப் பின் திருக்கோயிலின் தலைமை அர்ச்சகராகிய நம்பிகள் ஒருவரே. ஆற்றிய பணிகள் பின் ஒவ்வொருவருக்கும் பிரித்தளித்து ஒப்படைக்கப்பட்டது.

*ஆரியபட்டர்கள் :* (கோயில், சுவாமி பாதுகாவலர்) கோயிலையும் சுவாமியையும் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்தல் இவர்களின் பணி. முதல் இரண்டு திருச்சுற்றுகளில் உள்ளே வருதல், வெளிச் செல்லுதலைக் கவனிப்பர். பல்லக்கின் பின் தண்டுகளை இவர்கள் சுமப்பர். சுவாமியை வைகறை விடியலில் வழிபட வரும் திருப்பதியாருக்கும், பக்தர்களுக்கும் கோயிற்கதவுகளைத் திறந்து விடுவர். அக்காலத்தில் அரச முத்திரை இவர்களிடம் இருந்தது.

*தசநம்பிகள் :* (மாலை, தொடுத்தல், விளக்கு ஏற்றுவோர்) இவர்கள் கோயிலுக்குப் பூமாலை தொடுத்து வழங்கி வந்த மரபினர். இவர்கள் சுவாமிக்காகத் திருநந்தவனங்கள் அமைப்பர். கருவறையின் உள்ளும் புறமும் ஒளிவிளக்கு ஏந்துவர். ஏழு திருச்சுற்றுகளிலும் சுவாமி திருவுலா எழுந்தருளும் சிவிகையைப் பூமாலைகளால் அழகுபடுத்திடுவர். இவர்கள் ஆழ்வார்கள், உடையவர் சந்நிதிகளிலும் பணிபுரிவர்.

*ஏகாங்கிகள் :* (நான்குபேர்) வகையான கோயிற் பணியாளர்களாகிய அந்தணர் குழுவினருடன் ஏகாங்கிகள் என்னும் நான்கு உதவியாளர்களையும் இராமானுசர் சேர்த்தருளினார். இவர்கள் சந்நிதியின் வாயிலிருந்தும், விசேட காலங்களிலும், பக்தர்கள் காணாதபடி மறைக்கும் திரைச் சீலையின் அருகில் இருந்தும் கருவறையைப் பாதுகாக்க நியமனம் பெற்றனர். இசைவு பெறாதவர்களைச் சந்நிதியின் உட்புகாதபடி தடுத்து நிறுத்துவது,

இவர்களின் கடமை. நிவேதனப் பொருட்கள், நறுமணப் பொருட்களை இவர்கள் பாதுகாத்தனர்.

*சாத்தாதமுதலிகள் :* (எட்டு வைணவத் துறவிகள்)

எட்டு வைணவத் துறவிகளை இராமானுஜர் நியமித்தார். இவர்களின் பணி சுவாமிக்குக் கொடி பிடித்தல், பொன் வெள்ளி விளக்குகள் ஏற்றல், அர்ச்சகர்களுக்குக் காவல் ஆகியன ஆகும். கந்தாடை ராமானுஜ முனிகளுக்கு ஏற்பட்ட சில கைங்கர்யங்களை மட்டும் சாத்தாத வைணவர்கள் செய்து வருகின்றனர். தட்டி கொண்டுவருதல், இயற்பாவினை சேவிப்பது முதலிய அமுதனார்க்கு உரிய கைங்கர்யங்களை அமுதனார் மரபினர் அல்லாதவர்கள் மேற்கொள்ளுகின்றனர். ரக்ஷாபந்தனம் ஆயனார் மரபினர் இல்லாததால் நடைபெறவில்லை.

*க்ஷேத்திரபாணிகள் :* கோயிலுக்கு வெளியே இருந்து பணிக்கு எடுத்துச் சேர்க்கப் பெற்றவராவர். சுவாமி புறப்பாடு ஆகி, உலா முடித்துத் திரும்பும் வரை ஒழுங்கு, அமைதி நிலவும்படி பார்த்துக் கொள்வர். சுவாமி திருவீதி உலா புறப்படுகையில் வாழ்த்தியல் பாராட்டு ஒலிகள் எழுப்புவர்.

கீழ்கண்ட குழுவினரையும் இராமானுஜர் நியமித்தார். அவர்கள் வேளாளர்கள், சிறுசிறு பதவியினர், தேவதாசிகள், கட்டிடக் காவலர், கொடிகளுக்கு வண்ணம் தீட்டுவோர், பொற்கொல்லர், கள்ளர்கள், தையற்காரர், தச்சர்கள், சலவைத் தொழிலாளர், குயவர்கள், படகோட்டிகள், நடன ஆசிரியர்கள்.

*வேளாளர் :* உழுதொழில் புரியும் வேளாளர்களை இராமானுஜர் நியமித்தார். கோயிலின் நித்தியப் படித் தானியங்களை அளப்பவர் முதலாமவர். கருவூலப் பதவிக்குள் பதவியாளர்களிடையே அடிக்கடி மோதல் ஏற்படவே அப்பதவி பார்ப்பனரல்லாத ஒரு கருவூலரால் வகிக்கப் பெறுவதாயிற்று.

தேவதாசிகள் கோயில் பணியாளர் இடம் பெற்றனர். தச்சர், நெசவாளர், தையற்காரர், சலவையாளர், குயவர்கள், படகோட்டிகள், இசைவாணர், நடன ஆசிரியர்கள் என்று பலரும் பணியாளர் பட்டியலில் இருந்தனர்.

*தலைமை ஆட்சியர் :* கோயிலின் நிருவாகம் குழுவின் கீழ் இராமல் ஒரு பெரும் ஆட்சித் தலைவரின் கீழ் இருந்தது. கோயில் பணியாளர்கள் அனைவரும் அடங்கிய கூட்டத்திற்குத் தலைமை தாங்கி அவர்களின் கடமைகளைக் கண்காணித்து அறிவுரைகளையும், கருத்துக்களையும் கூறுவார்.

சுவாமிக்கு நண்பகல் நிவேதனம் ஆனபின் அவர் தம் இல்லம் சென்று பிற்பகலில் திரும்பி வந்து சடங்குகள் விழாக்களைக் கண்காணித்து நடத்துவார். நம்பிகள், பிராமணர்கள் நீங்கலாக இத்துறையில் மற்ற எல்லோரையும் கண்காணித்து ஏவல் கொள்வதற்கு இவருக்கு உரிமை உண்டு. கருவூலத்தில் வைக்கப்பெறும் எல்லாப் பொருள்களின் மீதும் முத்திரை இடுதல் இவருடைய கடமையாகும்.

கோயிலின் உள்துறை ஊழியத் தலைவர்கள் அனைவரும் இவருடைய ஆணைக்குட்பட்டவராவர். இவருக்கு நெருக்கமாக இருந்து பணியாற்ற ஏகாங்கி ஒருவர் இருப்பார். பல்வேறு திறப்பட்ட அனைவரையும் ஒருங்கு இசைவித்து, ஒழுங்கு பெறச் செலுத்தியவர் இவர். தலைமையாட்சியருக்குத் துணையாக நான்கு அலுவலர்கள் இருந்தனர். அவர்கள் கோயிலின் ஆட்சிக்கும் புறம்பேயுள்ள கட்டடங்களுக்கும் பொறுப்புடையவர்கள் ஆவர்.

சரக்கறையின் தலைவர், கோயில்கள் கண்காணிப்பாளர், கோயில் நிலங்களின் கண்காணிப்பாளர் முதலிய அலுவலர்கள் இருந்துள்ளனர்.

நவாபுகள், ஆங்கிலேயர் காலங்களில் மாற்றங்கள் பல ஏற்பட்டுள்ளன. சேனாபத்துரந்தர் எனப்படும் மணியகாரருடைய கங்கர்யம் முதலியாண்டார் திருவம்சத்தினருக்கு என ஏற்பட்டது.

கி.பி. 1750ஆம் ஆண்டிற்குப் பின் இந்தக் கைங்கர்யமானது ஏலமிடப்பட்டு தற்போது அதிகத் தொகைக்கு ஏலம் எடுத்தோரே மணியகாரர் பொறுப்பினை வகிக்கின்றனர். இதுபோல அமுதனார், ஆயனார், ஜோஸ்யர், திருத்தாழ்வரை தாசர், கோயில் கணக்குப் பிள்ளை மரபினர் இப்போது இல்லாமையால் அவர்களுடைய பணிகள் சிலவற்றை ஆலய நிருவாகத்தார் ஆட்களை நியமித்துச் செய்து வருகின்றனர்.

*சரக்கறையின் தலைவர் :* இவர் ஒவ்வொரு நாளும் திருமடைப்பள்ளிக்குச் சென்று பார்வையிடுவார். சுவாமி நிவேதனப் பொருட்களைக் குறித்த அளவின்படி கொடுக்குமாறு கவனித்து ஆவன செய்வார். சரக்கறைத் தலைவர் திருவீதி உலாவரும் வாகனங்கள் ஏற்பாடு, குடைகள், குடைகளைத் தூக்கிச் செல்லும் ஆயிரம் கூலியாட்களை நியமித்தல் முதலிய பணிகளையும் கவனித்தார். திருவிழாக் கால வாணவேடிக்கைகளை ஏற்பாடு செய்வார். கோவில் பசுக்களைப் பால் கறத்தல், கறந்த பாலை அதற்குரியவரிடம் ஒப்படைத்தல், அதனை மேற்பார்வையிடுதல் ஆகியனவும் இவருடைய கடமையாகும்.

*கோயில் கண்காணிப்பாளர் :* கோயில் திருமதில்களின் மீதும் கோபுரங்களின் மீதும் வளர்கின்ற செடி கொடிகளை அகற்ற ஏவலாளரை ஏவுதல், கட்டடங்களைப் பழுது பார்த்தல், புதியதாகக் கட்டுதலை நெறிப்படுத்தல் இவருடைய பணிகள். இவருக்குத் துணையாக இரு ஏகாங்கிகள் இருந்தனர்.

*கோயில் நிலங்களின் கண்காணிப்பாளர் :* அந்தந்தப் பருவ காலத்திற்குரியபடி விதை விதைத்துப் பயிர் செய்தல், விளைந்தவற்றைத் திரட்டிச் சேர்க்குமிடத்தில் சேர்த்தல், கோயில் கிராம ஊழியர்களை நியமித்தல் முதலியன இவருடைய பணிகள். கோயிலில் உள்ள மருத்துவமனை நிருவாகமும் இவர் பொறுப்பாகும்.

விஜய நகர அரசர்கள் காலத்திற்குப் பின் ஆங்கிலேய ஆட்சி ஏற்படும் வரை இக்கோயிலின் நிருவாகம் இசுலாமிய ஆளுநர்களின் ஆணைக்கு அடங்கி உட்பட்டு நடைபெற்றது. இதனால் வெவ்வேறு மாறுதல்கள் ஏற்பட்டதைக் கோயிலொழுகு விவரித்துள்ளது.

1801இல் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் தென்னகம் வந்தது. 1840இல் வணிகக் குழுவின் இயக்குனர் குழு கோயில்களின் மீதுள்ள அரசின் கட்டுப்பாடுகளை விட்டுவிடுதல் வேண்டுமென ஆணை பிறப்பித்ததால் 1842 முதல் திருவரங்கநாத சுவாமி கோயில், பழைய காலம் முதல் கோயிலை நிருவகித்த ஸ்தானத்தார் எனும் அந்தணர் குழுவினரால் நிருவகிக்கப் பெற்றது.

1858ல் கிழக்கிந்திய வணிகக் குழுவின் ஆட்சி இங்கிலாந்து மன்னரின் நேரடி ஆட்சியில் கீழ் வந்தபோது, கோயில்களுக்குப்

பொறுப்புள்ள அதிகாரக் குழுவின் மாற்றம் தவிர வேறு மாற்றம் எதுவும் நேரவில்லை.

1863ஆம் ஆண்டில் இந்துச் சமய அறக்கட்டளைச் சட்டத்தின் 20ஆம் பிரிவு இக்கோயிலுக்குத் தனி நிருவாகக் குழுவினை நிறுவியது.

1864இல் கோயிலின் ஆட்சியாளர் இடையே கருத் தொற்றுமையின்மை ஏற்பட்டது. சென்னை உயர்நீதிமன்றம் உருவான பின் பலமுறை கோயில் வழங்குகள் தோன்றின.

1927ஆம் ஆண்டு கோயிலின் ஆட்சிப் பொறுப்பு சென்னை இந்துசமய அறநிலையக் குழுவிடம் வந்தது. 1942இல் உறுதி செய்யப் பெற்ற இந்த ஏற்பாடு இன்றும் நடைமுறையில் உள்ளது. 1972ஆம் ஆண்டில் கோயில் நிருவாகத்தினரிடையே ஓர் ஒப்பந்தம் உருவாகியது.

கோயிலின் உண்மையான நிருவாகம் ஒருதலைவரைக் கொண்ட ஐந்து அறங்காவலரிடம் உள்ளது.

*அறங்காவலர்கள்* : 1927, 1942ஆம் ஆண்டுச் சீர்திருத்தங்களின் பின் அறங்காவலர் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையினால் நியமனம் பெறுகின்றனர்.

அவர்களில் ஒருவர் மட்டும் 1801ஆம் ஆண்டில் ஜான் வாலசு செய்த சீர்திருத்தக் காலம் முதலாகப் பரம்பரையாகக் கோயிலில் பணியாற்றி வந்த ஐந்து பிராமணக் குடும்ப உறுப்பினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்று ஓராண்டுக்கு மட்டும் அறங்காவலர் என நியமனம் பெறுவார். அவர் ஐந்தாண்டுகள் மீண்டும் நியமனம் பெற உரிமையில்லை. மீதம் உள்ள நால்வரில் ஒருவர் சைவ சமயப் பிரிவைச் சேர்ந்தவராக இருப்பார். மூன்று உறுப்பினர் வைணவ சமயத்தவராய் இருப்பர்.

*கோயில் நிலங்கள்* : அரசர்கள் ஏராளமான நிலங்களையும், கிராமங்களையும் கோயிலுக்கு அளித்தனர். அவற்றிலிருந்து கிடைத்த வருவாய் கோயில் நிருவாகச் செலவிற்குப் பயன்பட்டது. அவற்றில் ஒரு பகுதியைக் கிழக்கிந்திய வணிகக்குழு எடுத்துக் கொண்டது. அதற்குப் பதிலாக உதவித் தொகை வழங்கியது. இசுலாமியர், மராட்டிய ஆளுநர்கள் நிலங்கள் பலவற்றைக் கைக் கொண்டனர். சிலவற்றிற்கு இழப்பீடு வழங்கினர். கிழக்கிந்திய வணிகக் குழுவிற்குக்

கைமாறியவை, ஆங்கிலேய அரசுக்கு மாறி, ஆங்கிலேய அரசு உதவித் தொகை வழங்கியது. 1842ல் அதுவும் குறையலாயற்று.

இந்திய அரசு ஏற்பட்டதும் இன்னும் குறைந்தது. கிராமங்களின் பால் கோயிலுக்கு இருந்த உரிமை இப்போது ஒரு சம்பிரதாயச் சடங்காகிவிட்டது.

திருவரங்கநாதர் தான் நிலங்களுக்கும், கிராமங்களுக்கும் இன்றும் இனி என்றும் உண்மையான உரிமையாளர் என்று காட்டும் சடங்கு இது.

தமிழ் ஆண்டுப் பிறப்பின் முதல் நாளன்று பரம்பரை முறையில் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு பொருளாளர், அவ்விழா நாளில் தனி அலங்காரம் செய்து வைக்கப்பெற்ற பெருமாள் திருமுன்னிலையில் பெருமாளுக்குரிய நிலங்களையும், கிராமங்களையும் ஒரு கற்பனைக் குத்தகைக்குரிய குத்தகைதாரருக்கு விடுவது போன்ற சடங்கில் கலந்து கொள்ளும் சடங்கு மட்டுமே இப்போது நடைபெறுகிறது.

கோயிலின் வருவாய், கோயிலுக்குச் சொந்தமான நிலங்கள், கட்டடங்கள், விளைபொருள்கள், ஆடுமாடுகள் உண்டியல் ஆகியவற்றிலிருந்து கிடைக்கின்றன. திருவரங்கம் கோயிலின் வருவாயாக, இத்திருக்கோயில் நிருவாகத்திலுள்ள பிற கோயில்கள் வருவாயிலிருந்தும் கிடைக்கின்றது.

இக்கோயிலின் நிருவாகத்தின் கீழ் எட்டுத் திருக்கோயில்கள் உள்ளன. அவை

அருள்மிகு புண்டரீகாட்சப் பெருமாள் கோயில், திருவெள்ளறை,
அருள்மிகு வடஜம்புநாதர் கோயில், திருவெள்ளறை,
அருள்மிகு மாரியம்மன் கோயில், அன்பில்
அருள்மிகு சுந்தரராஜப் பெருமாள் கோயில், அன்பில்,
அருள்மிகு கமலவல்லி நாச்சியார் கோயில், உறையூர்,
அருள்மிகு முனீசுவரர் கோயில்,
அருள்மிகு காட்டழகிய சிங்கர் கோயில், திருவரங்கம்.

1984 வரை இத்திருக்கோயிலின் நிருவாகத்தின் கீழிருந்த சமயபுரம் திருக்கோவில் தனி நிருவாகமாயிற்று.

இயல் : ஏழு

# திருவரங்கத்துத் திருவிழாக்கள்

திருவிழாக்கள் நிறைந்த திருவரங்கம் என்றும் சொல்லலாம் ஒரு வருடத்தில் 365 நாள்களில் 322 நாள்கள் திருவிழாக்கள் நடைபெறுகின்றன. நாம் செல்லும் நாளெல்லாம் பள்ளி கொண்ட அந்தப் பரமனுக்கு ஏதேனும் விழா நடைபெறுவதைக் காண்கிறோம். கோவில் வலம் வருவோருக்குப் பள்ளி கொண்டே அருள்பாலிக்கும் அப்பிரான் உலாவந்து உள்ளே காண இயலாதவர் கண்களைக் குளிர்விக்கிறான். திருவீதி உலாக்கள், தேர்த்திருவிழாக்கள், தெப்ப விழாக்கள் என்று தினமும் விழாக்கள் தான்.

இந்தத் திருவிழாக்கள் பற்றியே ஓர் அழகிய நூல் எழுதலாம். ஒவ்வொன்றிலும் ஒரு சிறப்பு, ஒரு வேடிக்கை அனுபவம், ஒரு மகிழ்வூட்டும், மனதை நிறைக்கும் திருச்செயல், மறக்க வொண்ணா நிகழ்வு என்று தலை நீட்டுவதை உணரலாம்.

படுத்துக் கொண்டே சுறுசுறுப்புடன் இயங்கும் பெருமாள் என்றால் நம் பெரிய பெருமாள்தான் என்று கூறலாம். 'நித்யோத்சவ சமாயுக்தர்' என்று பெயர் பெற்றவர் இப் பெருமாள்.

*மாத விழாக்கள் :* இத்திருக்கோயிலாம் திவ்ய தேசத்தில் சித்திரை மாதத்தில் விருப்பண திருநாள், கோடைத் திருநாள், வைகாசியில் வசந்தத் திருநாள் ஆனியில் ஜயேஷ்டாபிஷேகம், அல்லது பதினெட்டாம் ஆடி இருபத்தெட்டாம் பெருக்கு, ஆவணியில் பவித்ரோத்சவம், புரட்டாசியில் தாயார் நவராத்திரி உற்சவம், ஐப்பசியில்

டோலோத்சவம், கார்த்திகையில் கைசிக ஏகாதசி உற்சவம், திருக்கார்த்திகை சொக்கப்பனை உற்சவம், மார்கழியில் பெரிய திருநாளான அத்யயன உற்சவம், தையில் பூபதித் திருநாள், மாசியில் தெப்பத் திருநாள் பங்குனியில் ஆதிபிரம்மோத்சவம் ஆகியன சிறப்புத் திருநாட்கள் ஆகும்.

*விருப்பண் :* விருப்பண்ண உடையார் 52 கிராமங்களைத் திருவிடையாட்டமாகத் தந்தார். விருப்பண் திருவிழா 1383இல் ஏற்படுத்தப்பட்டது. விருப்பண்ண உடையார் 1377இல் துலாபாரம் ஏறித்தந்த பதினேழாயிரம் பொற்காசுகளைக் கொண்டு கோயில் மண்டபங்கள் சீரமைக்கப் பெற்றன.

விருப்பண் திருவிழா என்னும் திருவிழா பதினோரு நாட்கள் நடைபெறும். திருவிழாவாகும். விஜயநகர சங்கம மரபின் அரசர் இரண்டாம் அரிகாரின் உடன்பிறப்பு விருப்பண்ண உடையார் எனும் விஜயநகர அரசரின் சகோதரர் ஏற்படுத்தி வைத்த விழாவாதலால் இப்பெயர் என்பர்.

*சித்திரை மாத விழாக்கள் :* சித்திரை மாதத் திருவிழாவினை விருப்பண் திருநாள் (சித்திரைத் தேர்த் திருவிழா) என்று சிறப்புடன் வழங்கு முதல் பகுதித் திருவிழா எனவும், சித்திரை மாத வெளிக் கோடைத் திருவிழா, சித்திரை மாத உள்கோடைத் திருவிழா எனவும் மூன்று பிரிவாகப் பகுக்கலம். விருப்பண திருநாளன்று கோயில் கணக்குகளிலும் பஞ்சாங்கங்களிலும் காணலாம். சித்திரை, தை பிரம்மோதி சுவர்கள் இடையே சில தொடர்புகள் அமைந்தன.

திருவரங்கத்தைப் பொருத்த வரையில் திருவிழாக்கள் குறிப்பிட்ட காலத்தில் தொடங்கிக் குறிப்பிட்ட காலத்தில் முடிவடையும். யாருக்காகவும், எவருக்காகவும் மன்னரேயானாலும் காத்திருப்பதில்லை. மன்னவர் அரங்கராஜன் அனைவருக்கும் மன்னவரானதால் குறித்த காலத்தில் தொடங்கி முடித்து விடுவது இன்றும் தொடர்கிறது. எனினும் கால நிர்ணயங்கள் மாறுதலுக்கு உட்பட்டவை உற்சவங்கள், திருநாட்கள் விவர நாட்காட்டியில் குறிப்பிட்டு விடுகின்றனர்.

சித்திரை மாத நாள்களில் ஆங்கில மாத நாள்கள் மாறுபடுவது உண்டு. அதேபோல் வைகுண்ட ஏகாதசி முதலியன மார்கழி மாதத்தில் மற்றைய வைணவத் தலங்களில் நடைபெறும் நாள்களில் நடைபெறாது கார்த்திகை மாதத்தில் நடைபெற்று விடுதலும் உண்டு. 2003ல் அது போன்று மார்கழி பிறவா முன்னரே வைகுண்ட ஏகாதசித் திருநாள் நடைபெற்றது என்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்விழாவில் கொடியேற்றத் திருநாளில் கோயில் கணக்குப் பிள்ளை நம்பெருமாள் திருவானைப்படி அழகிய மணவாளன் எனும் கிராமத்தைக் குத்தகைக்கு விடுவதாகப் பட்டயம் எழுதுதல் முக்கியமான நிகழ்ச்சியாகும். நம்பெருமாள் உபய நாச்சியார்களுடன் ஆஸ்தானம் திரும்புமுன் அழகிய மணவாணவாளன் ஊரில் சில நாள்கள் தங்கினார். அந்த ஊர்மக்கள் அந்த ஊரை நம்பெருமாளுக்குப் பட்டயமாக அளித்தல், அந்தக் கிராமத்தைக் குத்தகைக்கு விடும் நிகழ்ச்சி சித்திரை பிரம்மோத்சவத்தில் சுட்டிக் காட்டப் பெறும். விருப்பண்ண உடையார் 52 கிராமங்களைத் திருவிடையாட்டமாகத் தந்தார்.

விருப்பண் திருவிழா என்னும் திருவிழா பதினொரு நாட்கள் நடைபெறும் திருவிழாவாகும். விஜயநகர சங்கம மரபின் அரசர் இரண்டாம் அரிகரரின் உடன்பிறப்பு விஜயநகர அரசரின் சகோதரர் விருப்பண்ண உடையார் ஏற்படுத்தி வைத்த திருவிழாவாதலால் இப்பெயர் என்பர்.

## முதல் திருநாள் – கண்ணாடி அறை சேவை

வைணவ பரிபாஷையில் சேவை என்றால் தரிசனம் என்று பொருள். திருமஞ்சனம் என்பது திருமுழுக்கு

### (கருவறை)

| | |
|---|---|
| பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து புறப்பாடு | அதிகாலை 3.00 மணி |
| கொடியேற்று மண்டபம் சேருதல் | அதிகாலை 3.30 மணி |
| கொடியேற்றம் | காலை 4.45 மணிமுதல் 5.30 மணி வரை |
| கொடியேற்ற மண்டபத்திலிருந்து புறப்பாடு | காலை 6.15 மணி |
| கண்ணாடி அறை சேருதல் | காலை 6.30 மணி |

| | |
|---|---|
| கோயில் மிராஸ், அர்ச்சகர்கள் பேரிதாடனம் (பேரிகை முழக்கம்) | மாலை 4.15 மணிமுதல் 5.30 மணிவரை |
| நம்பெருமாள் உபய நாச்சியார்களிடம் திருச்சிவிகையில் புறப்பாடு | மாலை 6.30 மணி |
| சித்திரை வீதி வலம் சந்தனு மண்டபம் சேர்தல் | இரவு 8.30 மணி |
| சந்தனு மண்டபத்திலிருந்து யாக சாலைக்குப் புறப்பாடு | இரவு 9.00 மணி |
| திருமஞ்சனம் கண்டருளியாக சாலையிலிருந்து புறப்பட்டு கண்ணாடி அறை சேர்தல் | இரவு 12.00 மணி |
| கண்ணாடி அறை சேவை (கட்டண சேவை) | காலை 7.00 மணிமுதல் பகல் 12.00 மணி முடிய |

## கருவறை தரிசனம்

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 7.00 மணி முதல் பகல் 12.00 மணி வரை |
| இலவச சேவை | மாலை 3.00 மணிமுதல் மாலை 3.30 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 3.30 மணி முதல் மாலை 5.30 மணி வரை |
| மற்ற காலங்கள் வழக்கம் போல் | இரவு 8.30 மணிக்கு மேல் கருவறை சேவை இராது. |

## இரண்டாம் திருநாள் – பல்லக்கு, கற்பக விருட்சம்

| | |
|---|---|
| கண்ணாடி அறையிலிருந்து பல்லக்கில் புறப்பாடு | காலை 6.30 மணி |
| சித்திரை வீதி வலம் – கொடியாலம் சேஷாத்ரி ஐயங்கார் மண்டபம் (தேவி திரையரங்கு அருகில்) | காலை 9.30 மணி |
| மாலை கற்பக விருட்சத்தில் புறப்பாடு | மாலை 6.30 மணி |

| | |
|---|---|
| சித்திரை வீதி வலம் வந்து வாகன மண்டபம் சேருதல் | இரவு 8.45 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து புறப்பட்டுக் கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.15 மணி |

### கருவறை தரிசனம்

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 7.00 மணி முதல் பகல் 12.00 மணி வரை |
| இலவச சேவை | பகல் 12.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |

மற்ற காலங்கள் வழக்கம் போல்

### மூன்றாம் திருநாள் – சிம்ம வாகனம், யாளி வாகனம்

| | |
|---|---|
| நம் பெருமாள் கண்ணாடி அறையிலிருந்து புறப்பாடு | காலை 4.00 மணி |
| வாகன மண்டபம் சேருதல் | காலை 4.15 மணி |
| சிம்ம வாகனத்தில் புறப்பாடு | காலை 5.15 மணி |
| சித்திரை வீதி வலம் வாகன மண்டபம் சேருதல் | காலை 6.15 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து புறப்பாடு | காலை 8.00 மணி |
| ஆழ்வான் திருச்சுற்று வழியாக சௌகார் ஆஸ்தான மண்டபம் சேர்தல் (வடக்கு வாசல்) | காலை 9.00 மணி |
| மாலை யாளி வாகனத்தில் புறப்பாடு | மாலை 6.30 மணி |
| சித்திரை வீதிவலம் – வாகன மண்டபம் சேருதல் | இரவு 8.00 மணி |
| கண்ணாடி அறை சேருதல் மூலஸ்தான சேவை | இரவு 9.00 மணி |
| கட்டண சேவை | காலை 7.00 மணிமுதல் பகல் 12.00 மணி முடிய |
| இலவச சேவை | பகல் 12.00 மணி முதல் பகல் 1.00 மணி முடிய |

மற்ற காலங்கள் வழக்கம்போல்

## நான்காம் திருநாள் – கருட சேவை

| | |
|---|---|
| கண்ணாடி அறையிலிருந்து புறப்பாடு | காலை 4.00 மணி |
| வாகன மண்டபம் சேருதல் | காலை 4.15 மணி |
| இரட்டைப் பிரபையில் புறப்பாடு | காலை 5.15 மணி |
| சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் | காலை 6.15 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து பல்லக்கில் புறப்பட்டு ஆரிய வைஸ்யாள் ஆஸ்தான மண்டபம் சேருதல் | பகல் 11.00 மணி |
| கருட வாகனத்தில் புறப்பாடு | மாலை 6.00 மணி |
| சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் சேருதல் | இரவு 8.45 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து புறப்பட்டுக் கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.30 மணி |

## கருவறை சேவை விவரம்

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 6.15 மணி முதல் பகல் 12.00 மணி வரை |
| தர்ம சேவை | பகல் 12.00 மணி முதல் பகல் 1.00 முடிய |

மற்ற காலங்கள் வழக்கம் போல்

ஆஸ்தான மண்டபம் செல்லும் பாதை சரியாக இருந்தால் அங்கு எழுந்தருளுவதும். இல்லையெனில் ஸ்ரீரங்க விலாச மண்டபத்தில் எழுந்தருளுவதும் உண்டு.

## ஐந்தாம் திருநாள் – சேஷ வாகனம், ஹனுமந்த வாகனம்

| | |
|---|---|
| நம் பெருமாள் கண்ணாடி அறையிலிருந்து புறப்பாடு | காலை 4.00 மணி |
| வாகன மண்டபம் அடைதல் | காலை 4.15 மணி |
| சேஷ வாகனத்தில் புறப்பாடு | காலை 5.15 மணி |
| சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் சேருதல் | காலை 6.15 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து பல்லக்கில் புறப்பாடு | காலை 8.00 மணி |
| சௌராட்டிரர்கள் மண்டபம் நூல்காரர் ஆஸ்தான மண்டபம் சேருதல் | காலை 10.00 மணி |
| மாலை அனுமந்த வாகனத்தில் புறப்பாடு | மாலை 6.00 மணி |
| சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் சேருதல் | இரவு 8.45 மணி |
| கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.30 மணி |

## கருவறை சேவை

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 7.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| தர்ம சேவை | பகல் 1.00 மணி முதல் மாலை 3.30 மணி வரை |

மற்ற காலங்கள் வழக்கம் போல்

## ஆறாம் திருநாள் – ஹம்சம், யானை

| | |
|---|---|
| பெருமாள் கண்ணாடி அறையிலிருந்து புறப்பாடு | காலை 4.00 மணி |
| வாகன மண்டபம் சேருதல் | காலை 4.15 மணி |

| | |
|---|---|
| தங்க அன்ன வாகனத்தில் புறப்பாடு | காலை 5.15 மணி |
| சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் சேருதல் | காலை 6.15 மணி |
| பல்லக்கில் புறப்பாடு | காலை 7.15 மணி |
| நாகப்பிள்ளை ஆஸ்தான மண்டம் (தேவி திரையரங்கு மண்டபம்) | காலை 11.00 மணி |
| மாலை தோளுக்கிளியான் பல்லக்கில் புறப்பாடு | மாலை 6.00 மணி |
| யானை வாகன மண்டபம் சேருதல் | மாலை 6.45 மணி |
| யானை வாகனத்தில் புறப்பாடு | இரவு 7.45 மணி |
| யானை வாகன மண்டபம் சேருதல் | இரவு 8.45 மணி |
| உள் ஆண்டாள் சந்நதியில் மாலை மாற்றிக் கொண்டு கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.45 மணி |
| அர்ச்சகர்களுக்கு யானை ஏற்ற மரியாதை | இரவு 10.00 மணி |

## கருவறை சேவை

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 7.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| தர்ம சேவை | பகல் 1.00 மணி முதல் 3.30 மணி வரை |

மற்ற காலங்கள் வழக்கம் போல்

ஆறாம் திருநாளில் நம் பெருமாள் ஆண்டாளுக்கெதிரில் நிற்க ஆண்டாளுடைய மாயையைக் களைந்து முதலில் நம் பெருமாளுக்குச் சாற்றப் பெற்று அதன் பிறகு நம் பெருமானுடைய மாலையை, கஸ்தூரித் திருமண காப்பு, சந்தனம் ஆகியவற்றை ஆண்டாளுக்குச் சாற்றுவது ஆண்டாள் சூடிக் கொடுத்த நாச்சியாராகையால் அவள் சூடிக் கொடுப்பதையும் பெருமாள் சாற்றிக் கொண்டு பிறகு தம் மாலையை அவருக்குச் சாற்றுகிறார். ஆண்டாள் தவிர நாச்சியார் மாலைகளைப்

பெருமாள் அணிவதில்லை. உறையூர் நாச்சியார்களுக்கு மாலை சாற்றுவார். அவர்களுடைய மாலையை சாற்றிக் கொள்ளமாட்டார்.

## ஏழாம் திருநாள் ~ பூந்தேர்

ஏழாம் திருநாளான நெல்லளவின் போது கோயில் முறைகாரர் (காரளப்பான்) **திருவரங்கம் ஒன்று, பெரிய கோயில் இரண்டு, மூன்று** என்று சொல்லி தங்க மாக்காலால் நெல்லை அளப்பார்.

கண்ணாடி அறை சேவை (கட்டண சேவை) சந்தனு மண்டபத்தில் சூர்ணாபிஷேகம், தீர்த்தகோஷ்டி காலை 6.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை

பெருமாள் உபய நாச்சியார்களுடன் மாலை திருச்சிவிகையில் புறப்பாடு மாலை 6.30 மணி

நெல்லளவு கண்டருளி சித்திரைப் பூந்தேரில் சித்திரை வீதிகள் வலம் வந்து தாயார் சந்நிதி சேருதல் இரவு 8.30 மணி

திருமஞ்சனம் – கண்ணாடி அறை சேருதல். தேவி வியாச பட்டர் திருமஞ்சன கட்டியம் சேவித்தல். 81 கலச திருமஞ்சனம் இரவு 12.00 மணி

## கருவறை சேவை

கண்ணாடி அறை, மூலவர் சேவை

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 6.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| புறப்பாடு | பகல் 1.00 மணி முதல் மாலை 3.30 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 3.30 மணி முதல் மாலை 5.30 மணி வரை |

மற்ற காலங்கள் வழக்கம் போல்

## எட்டாம் திருநாள் – வெள்ளி, தங்கக் குதிரைகள் வையாளி

| | |
|---|---|
| அதிக திரு வாபரணகளுடன் கண்ணாடி அறையிலிருந்து வெள்ளிக் குதிரை | காலை 7.00 மணி |
| மாலை வண்டியூர் சப்பரம் ரெங்க விலாச மண்டபம் சேருதல் | காலை 8.30 மணி |
| தங்கக் குதிரை வாகனத்தில் புறப்பாடு | மாலை 6.30 மணி |
| கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.00 மணி |
| சின்னப் பெருமாள் சயனம் | இரவு 9.30 மணி |

வாகன மண்டபம் அருகில் வீர வண்டி சேவித்ததற்காக மேளக்காரருக்கு மரியாதை. இந்தத் திருவிழா தியாகப் பிரும்மம் மிகவும் ஈடுபட்ட விழா.

## கருவறை சேவை

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 7.00 மணி முதல் மாலை 5.30 மணி வரை |

மற்றக் காலங்கள் வழக்கம் போல்

## ஒன்பதாம் திருநாள்

## சித்திரைத் திருத்தேர்த் திருவிழா

| | |
|---|---|
| கண்ணாடி அறையிலிருந்து திருத்தேருக்குப் புறப்பாடு | அதிகாலை 3.45 மணி |
| சித்திரைத் தேர் மண்டபம் அடைதல் | அதிகாலை 4.00 மணி |
| திருத்தேரில் எழுந்தருளல் | அதிகாலை 4.30 மணி |
| தேர் நிலை சேர்தல் | காலை 10.00 மணி |
| தேரிலிருந்து புறப்பாடு | மாலை 3.15 மணி |
| ரேவதி மண்டபம் சேருதல் அறையர் திருமாலைச் சேவித்தல் | மாலை 4.15 மணி |

| | |
|---|---|
| திருமஞ்சனம் கண்டருளிக் கண்ணாடி அறை சேருதல் | இரவு 9.30 மணி |

பெருமாள் ரேவதி மண்டபம் சேர்ந்ததிலிருந்து கருவறை சேவை உண்டு.

திருத்தேரிலிருந்து ஆஸ்தானம் எழுந்தருளுகையில் தச்சர், மராமத்து மேஸ்திரி ஆகியோருக்குச் சிறப்புச் செய்யப்படும்.

## பத்தாம் திருநாள்
## சப்தாவரணம் (சத்தாவரணம்)

| | |
|---|---|
| கண்ணாடி அறையிலிருந்து புறப்பாடு | காலை 6.30 மணி |
| சந்தனு மண்டபம் சேருதல் | காலை 7.00 மணி |
| திருமஞ்சனம் கண்டருளுதல் உடையவர் சந்நிதியில் இளநீர் அமுது படிப்பு தீர்த்தம் சாதித்தல் | காலை 11.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| புறப்பாடு உபய நாச்சியார்களுடன் சித்திரை வீதிகள் வலம் | மாலை 6.00 மணி |
| வந்து கருவறை சேருதல் கொறட்டு மணியகார சிறப்புச் செய்தல் | இரவு 8.45 மணி |
| கொடி இறக்கம் சன்னதிகளுடன் திருமஞ்சனம் காப்புக்கட்டு நீக்குதல் | இரவு 9.00 மணி |
| அர்ச்சகர்கள் மரியாதை | இரவு 10.15 மணி |

## கருவறையிலிருந்து புறப்பாடு

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 6.45 மணி முதல் பகல் 12.00 மணி வரை |
| இலவச சேவை | பகல் 12.00 மணி முதல் 1.00 மணி வரை |

மற்ற காலங்கள் வழக்கம் போல் இரவு 8.30 மணிக்கு மேல்

கருவறை சேவை கிடையாது.

## பதினோராம் திருநாள் – கருட மண்டபம்

### ஆறாம் பல்லக்கு

| | |
|---|---|
| கருவறையிலிருந்து புறப்பாடு | மாலை 2.55 மணி |
| கருட மண்டபம் சேருதல் | மாலை 3.30 மணி |
| மண்டபத்திலிருந்து புறப்பாடு | இரவு 7.00 மணி |
| வாகன மண்டபம் சேருதல் | இரவு 7.30 மணி |
| இரவு ஆறாம் பல்லக்கில் புறப்பாடு | இரவு 8.00 மணி |
| வாகன மண்டபம் சேருதல் 81 கலச திருமஞ்சனம் | இரவு 9.00 மணி |
| வாகன மண்டபத்திலிருந்து புறப்பாடு | இரவு 9.30 மணி |
| கருவறை சேருதல் | இரவு 9.45 மணி |

### கருவறை சேவை

| | |
|---|---|
| | விசுவரூப தரிசனம் வழக்கம் போல் |
| கட்டண சேவை | காலை 9.00 மணி முதல் 12.30 மணி வரை |
| பூஜா காலம் புறப்பாடு | பகல் 12.30 மணி முதல் மாலை 3.00 மணி வரை |
| தர்ம சேவை | மாலை 3.00 மணி முதல் 4.00 மணி முடிய |
| கட்டண சேவை | மாலை 4.00 மணி முதல் மாலை 6.00 மணி முடிய |
| | மற்றக் காலங்கள் வழக்கம்போல் |

இத்திருவிழாக்களில் ஆனை வாகனம், திருத்தேர் தவிர்த்து வைணவ பிராமணர்களான ஸ்ரீபாதம் தாங்கிகளே பெருமாளை எழுந்தருளச் செய்கின்றனர். இது வேறு எந்த திவ்ய தேசத்திலும் கிடையாது. மோகினி அலங்காரம் தவிரப் பெருமாள் வேறு

எந்தத் திரு அவதாரமும், திருக்கோலமும் கொள்வது கிடையாது.

## கோடை உற்சவம்

பெருமாளுக்கு நடைபெறும் கோடை உற்சவம் என்னும் பத்து நாள் கோடைத் திருவிழா இம்மாதம் ஐந்து நாள் வெளி கோடையும், ஐந்து நாள் உள் கோடையும் நடைபெறும்.

வெளிக் கோடையில் பெருமாள் கருவறையிலிருந்து மாலை 6.00 மணியளவில் புறப்பட்டு, 7.00 மணி அளவில் கோடை நாலு கால் மண்டபம் சேருவார். அங்கு மலர் சாத்துப்படி கண்டு அருளி நாலு கால் மண்டபத்திலிருந்து புறப்பாடு இரவு 8.30 மணிக்கு ஆன பின்னர் இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார்.

ஆறாம் திருநாள் அருச்சுண மண்டபத்திற்கு எழுந்தருளித் திருமஞ்சனம் கண்டு வெளிக் கோடை நாலு கால் மண்டபம் சேர்ந்து அங்கிருந்து புறப்பட்டு உள்கோடை மண்டத்திற்கு இரவு எட்டு மணிக்கு வந்து சேருபவர் வீணை இசையுடன் கருவறை சேர இரவு பத்து மணிக்கு மேலாகிவிடும்.

ஏழாம் நாள் திருவிழாவில் சந்தனு மண்டபத்தில் திருமஞ்சனம் கண்டு வெளிக் கோடை நாலு கால் மண்டபம் மாலையில் சேர்ந்து அதிலிருந்து புறப்பட்டு உள்கோடை மண்டபம் அடைந்து வீணை வாத்தியத்துடன் கருவறை சேர்வது போல் மீதியுள்ள நாட்களும் அதாவது எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்றாம் நாள் நடைபெறுகிறது.

## பெருமாளுக்குக் காலணி

பேளூரில் பெருமாளுக்குப் பெரிய செருப்புக்கள் வழங்குவது போல் செருப்புத் தைப்போர் இந்தச் சித்திரை விழாவின் போது செருப்புகள் வழங்குவது உண்மையான பக்திக்கும், பெருமாள் வேற்றுமையில்லாது தன் அடியவரை ஏற்பவர் என்பதைக் காட்டும்.

வெவ்வெறு பகுதிகளில் வசிக்கும் செருப்புத் தைப்பவர்களில் ஒருவர் பெரிய பெருமாளுக்கு வலது கால் செருப்பையும், மற்றொருவர் இடது கால் செருப்பையும் எட்டாம் திருநாள் மாலையில் கோயில் கொட்டாரத்தில் கொண்டு வந்து சேர்ப்பர். வலது காலணியைக்

கொண்டு வருபவருக்கும், இடது காலணியைக் கொண்டு வருபவருக்கும் எவ்விதத் தொடர்பும் இராது. அவரவர்களுக்குப் பெரிய பெருமாள் காட்டிக் கொடுத்த அளவில் காலணிகளை வலது இடது காலுக்குக் கொண்டு வந்து காணிக்கையாகக் கொடுப்பார்கள்.

அவ்வாறு அவர்கள் இருவரும் கொண்டு வரும் காலணிகள் பொருத்தமாக அமைகிறது என்பது ஒரு பக்தி அனுபவமாகும்.

எட்டாம் நாள் திருவிழாவில் மற்றொரு கூறு தேங்காய்களைத் தலையில் உடைத்துக் கொள்வது, பெருமாள் குடும்பத்திலுள்ளார் மேல் வந்து ஆவேசம் கொள்ளுதல் ஆகியன நடைபெறுகின்றன.

## *சித்திரை முழு நிலவு நாள் (பௌர்ணமி)*

சித்ரா பௌர்ணமி எனும் சித்திரை முழு நிலவு நாளில் நம் பெருமாள் கஜேந்திர மோட்சம் கண்டருளுவார். காலை ஏழு மணிக்குப் புறப்பட்ட உற்சவர் பத்து மணி அளவில் அம்மா மண்டபம் அடைந்ததும் திருமஞ்சனம் காண்பார். பின்னர் மாலை 6.00 மணிக்குக் கஜேந்திர மோட்சம் புறப்பாடு அதன் பின் 6.15 மணிக்குக் கஜேந்திர மோட்சம் கண்டருளிய பின் திருவூரல் ஆஸ்தான மண்டபத்தை 6.45 மணிக்கு அடைவார். பின் அங்கிருந்து புறப்பட்டுக் கருவறை சேரும்போது மணி பத்தாகி விடும். அரையர் இசையுடன் பெருமாள் எழுந்தருளுவார். இந்த நாளில் கருவறை சேவையில் விசுவரூப தரிசனம் ஏதும் கிடையாது. கருவறை சேவை காலை 7.15 மணி முதல் மாலை 5.45 மணி வரை கட்டண சேவையாகும்.

## கஜேந்திர மோட்சம்

முதலை வாயிலிருந்து கஜேந்திரனைப் பெருமாள் காத்தருளிய திருவிழாதான் கஜேந்திர மோட்சத் திருவிழா. சித்திரை முழு நாளன்று அரங்கர் யானையுடன் காவிரி ஆற்றில் கஜேந்திரனுக்கு முக்தி அளிப்பார். மதுரையில் சித்திரை முழு நாளில் அழகர் மண்டூக மகரிஷிக்கு மோட்சமளிப்பது போல் இங்கே கஜேந்திரனுக்கு மோட்சம்.

அம்மாமண்டபத்தில் காவிரியாற்றின் மணலில் மக்கள் சுற்றுலா போல் வந்து கூடுவர். யானை ஒரு குறிப்பிட்ட தூரம் வரை சென்று தன்

துதிக்கையைத் தூக்கி மூன்று முறை பிளிறும். இது பரந்தாமா என்று அந்நாளில் அழைத்தது போல் இன்று 'ரங்கா, ரங்கா, ரங்கா' என்றழைப்பது போலிருக்கும்.

## சித்திரைத் திருவிழாச் சிறப்பு

சித்திரை மாதம் நடைபெறும் விழாவினைத் தரிசித்துப் பேறு பெறுவோர் பாக்கியவான்கள் எனலாம். ஏனென்றால் திருவரங்கமே கலகலவென்று இருக்கும். கோடை காலமாதலால் குழந்தைகள் முதல் பெரியவர் வரை பெருமாளில் திருஉலாக்காண மீண்டும் மீண்டும் ஆவல் கொள்வர் என்பது ஒரு தனிச்சிறப்பு.

உற்சவ காலங்களில் நம் பெருமாள் விடியற் பொழுதில் அன்றைய வாகனத்தில் திருவீதிப் புறப்பாடு கண்டருளிக் கதிரவன் உதயத்திற்கு முன்னதாகக் கோயில் வாகன மண்டபத்தில் எழுந்தருளுவார்.

அதேபோல மாலைப் புறப்பாடு சூரிய மறைவிற்குப் பிறகே நடைபெறும். பல்லக்கில் எழுந்தருளும் போது வெயில் படாவண்ணம் வெளியாடை பிடித்துச் செல்லப்படும். தோளுக்கினியானில் புறப்பாடு கண்டளும்போது வெயில் படாவண்ணம் ஏற்பாடுகள் மேற்கொள்வர்.

## திருவீதி உலா

மாலை வேளைகளில் சித்திரை வீதியில் நம் பெருமாள் உலா வருவதால் வீதியில் குடியிருப்போர் வாசல், வீதி பெருக்கி, நீர் தெளித்து நடுவிலும் வீட்டின் முன்னும் கோலங்கள் இட்டு அரங்கனை வரவேற்பர். அரங்கனைச் சேவிக்க முன்னும் பின்னும் ஓடி ஓடி மகிழ்வர். மீண்டும், மீண்டும் சேவிப்பர்.

## யானை வாகனம்

யானை வாகனம் மிக்பெரிய வெள்ளி யானையாகும். அவ்வாகனம் மிகவும் கனமானது. அவ்வாகனத்தைச் சுமந்து செல்பவர்கள், அதைத் தூக்கிக் கொண்டு ஓடுவது காண்பதற்கு அற்புதமாக இருக்கும்.

**வையாளி**

கோரத மூலையில் குதிரை வாகனத்தில் அரங்கர் பவனி வருகையில் காண்பதற்குத் தனி எழில் தோற்றமாக அமையும். எட்டாம் திருநாளன்று மட்டும் பெருமாள் காலையில் வெள்ளிக் குதிரை வாகனத்திலும், மாலையில் தங்கக் குதிரையிலும் எழுந்தருளுகிறார்.

குதிரை வாகனத்தினைச் சுமந்தபடி ஒய்யார நடை, இராஜ நடை, இசைக்கேற்ப நடப்பர். பிறகு "கோண வையாளி"யென்று சுற்றி வளைந்து ஓடுவர். காண்பதற்கு மகிழ்ச்சியான காட்சி இது.

அரங்கநாதன் குதிரை மீதேறி வருவதே ஒரு தனி அழகு. குதிரையின் நடை அழகும், கடிவாளத்தைப் பிடித்து அமர்ந்து இருக்கும் ஒய்யாரம், புன் சிரிப்புடன் மக்களை நலம் விசாரிக்கும் முறையில் திருக்கையின் அழகு ஆகிய இவையாவும் அயோத்தியில் சக்கரவர்த்தித் திருமகன் குதிரை மீதேறி அரச வீதி உலா வருவது போலத் தோன்றும் என்று பாடுகிறார் புலவர். இராஜவீதி என்று சித்திரை வீதிக்குப் பெயர்.

வையாளி நடையும் ஒய்யாரக் கொண்டையும்
ஒய்யாரமாகவே ஐயன் வருகிற
உல்லாச சேவை என் சொல்வேனடி

என்பது பழம் பாடல்.

ஒவ்வொரு நாளும் வாகனத்தில் எழுந்தருளித் திருவீதி வலம் வந்த பின் பிறகு நான்கு கால் கோபுர வாயிலில் வாகனத்திற்கு அமுது படைக்கப்படும். வாகனத்திற்கு ஏற்ப அமுது படிகள் வேறுபடும்.

கருடனுக்கு அமிர்த கலசமும், குதிரைக்குக் கொள்ளுச் சுண்டலும் சமர்ப்பிப்பர். இந்த வாகனங்கள் ஜீவப் பிரதிஷ்டை செய்யப் பட்டவை என்பவர். அதாவது உயிருள்ளவை போல் கருதப்படுபவை.

**சித்திரைத் தேர்**

சித்திரைத் தேர் காணக்கூடும் கூட்டம் ஒரு தனிக் கூட்டம் சித்திரைத் தேர் காண என்றே உள்ளூரிலிருந்தும், வெளியூர்

களிலிருந்தும் ஏழை எளியோர், கிராமப் புற மக்கள் என்று ஆயிரக்கணக்கில் கூடுவர். கிராம மக்களின் கூட்டுறவால் தேர் விரைவில் நிலைக்கு வரும். சித்திரைத் தேரின் போது உபய நாச்சியார்கள் இல்லாமல் நம் பெருமாள் மட்டுமே வலம் வருவார்.

## ஆறாம் பல்லக்கு

ஆறாம் பல்லக்கு என்பது மலர்ப் பல்லக்கு மட்டுமல்ல, மணமிக்கப் பல்லக்கு. மலர்களால் அழகு செய்யப் பெற்ற பல்லக்கின் மல்லிகை மணமும், மல்லிகைப் பூ அலங்காரமும் கண்ணைக் கவர்வன. மல்லிகைப் பூப்பல்லக்குக் காட்சி காண்பது, அரங்கர் அப்பல்லக்கில் அமர்ந்து அருள் பாலிப்பது அழகு மட்டுமல்ல, கொள்ளை அழகு.

## கண்ணாடி அறைச் சேவை

உறையூர் நாச்சியார், அரங்கநாதர் பற்றி எழுதிய காவியத்திலும், உத்தம நம்பி திருமலாச்சாரியார் எழுதிய காவியத்திலும் பெருமாள் கண்ணாடி அறையில் எழுந்தருளியதாகச் சொல்லப்படாததால் பிற்காலத்தில் எழுப்பப் பெற்ற கட்டடம் இது என்பர். திருக்கோவிலினுள் கார்த்திகைப் படியேற்ற சேவைக்குத் தாமதமாக வந்து வரலாறு படைத்த விஜய ரங்க சொக்கநாதர் கட்டிய கட்டடமே கண்ணாடி அறை எனவும், இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல திருப்பணிகளைச் செய்தருளிய தேசிக வரதாசாரிய சுவாமி என்பவரால் இந்தக் கண்ணாடி அறை புதுப்பிக்கப் பட்டது எனவும் கூறுவர். கண்ணாடி அறையில் அரங்கரைக் கண்டு மகிழும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். அடித்துப் பிடித்து, இடித்துப் பிடித்து என்பார்களே அதுபோல் கண்ணாடி அறையில் அரங்கரின் திருக்கோலம் காண முண்டியடித்துச் செல்வர். வாகனத்தில் சென்று வந்ததற்காக நம் பெருமாளுக்குக் கண்ணாடி அறையில் அந்தந்த நாள்களில் ஏகாந்தத்திருமஞ்சனம் நடைபெறும்.

நம் பெருமாள் ரக்ஷாபந்தனம் செய்து கொண்ட பிறகு தீர்த்தவாரி வரையில் கண்ணாடி அறையிலேயே எழுந்தருளியிருப்பார். நித்திய திருவாராதனம் உண்டு. விழா முடியும் வரை திருவரங்க மாளிகையார் யாக சாலையில் எழுந்தருளியிருப்பார்.

## வெளிக்கோடை, உள்கோடை

வெளிக்கோடை, உள்கோடை பூச்சாத்துவிழா சிறப்பானவற்றுள் ஒன்று. தாமரை நங்கையை மணந்து கொண்ட மணாளன் அல்லவா. பத்து நாள்கள் மல்லிகை, முல்லை, செவந்தி, செவ்வரளி என மலர்களால் ஆன மலர்ப்போர்வையைப் பெருமானுக்கு அணிவிப்பர். வெறும் மலர்களின் மணத்தால் மட்டும் அரங்கத்து எம்மானைக் குளிர்வித்தல் செய்யாது பன்னீர், ஜவ்வாது முதலிய வாசனைத் திரவியங்களையும் தெளித்து மணம் சேர்ப்பர். வெயிலுக்கு இதமாயும் குளிர்ச்சியாயும், மணமாயும் சேர்க்கும் கோடைத் திருநாள் முடிந்து விருப்பண் திருநாளும், விருப்பன் திருநாள் முடிந்து கோடைத் திருநாளும், நட்சத்திர, திதி பலன்களுக்கு ஏற்ப நடைபெறுகின்றன.

## வசந்த விழா

விஜய நகர மண்டபத்தில் வைகாசியில் பிரம்மோத் சவற்வமாகக் கொண்டாடப்பட்ட விழா காலப்போக்கில் திரிபு பெற்று வசந்த விழாவாகியுள்ளது. சித்திரைக் கடைசியில் அல்லது வைகாசி முதல் வாரத்தில் வசந்த உற்சவம் நடைபெறும்.

ஏக வசந்தம் என்று இப்போது குறிப்பிடப் பெறுகிறது. வசந்த உற்சவம் என்பது பறவைகள், முதலிய வனத்தில் வாழும் ஜீவராசிகளுக்கு அருள்பாலிக்க ஏற்பட்ட திருவிழா என்பர். அருள்மிகு சக்கரத்தாழ்வார் சந்நிதியின் வடபுறம் உள்ள அழகிய தோட்டத்தில் நான்கு புறமும் அகழிபோல் உள்ள பள்ளத்தில் நீர் நிரப்பி அழகிய மண்டபத்தின் நடுவில் குளு குளுவென்ற குளிர்ச்சியான சூழலில் அரங்கர் வீற்றிருப்பார். அவரைக் காணக் காண அச்சூழலில் அன்பர்கள் உள்ளம் குளிரும். அரங்கனின் அருள் பார்வை கிட்டும்.

விஜய நகரப் பேரரசின் குறுநில மன்னர் அண்ணப்ப உடையார் காலத்தில் (கி.பி. 1444) இப்போதுள்ள வசந்த மண்டபம் அமைந்தது. இந்த வசந்த விழாவிற்குக் கேடாக்குழித் திருநாள் என்று பெயர் இவ்விழாவிற்கு மல்லிதேவன் புதூர் என்னும் ஊர் திருவிடையாட்டமாகத் தரப்பட்டது. உத்தம நம்பி இந்த விழாவை அண்ணப்ப உடையார் சார்பில் ஏற்படுத்தினார். இவரே ஆயிரங்கால்

மண்டபத்தைப் புதுப்பித்து ப்ரணவாகர விமானத்திற்கும் பொன் வேய்ந்தார்.

வைகாசி வசந்த விழா திதி அடிப்படையில் வைகாசி பௌர்ணமியன்று ஏகவசந்த விழாவாக நடைபெறுகிறது.

இந்த வசந்த விழாவின் கடைசி நாளில் நம் பெருமாள் தங்கக் குதிரையில் திருவீதி வலம் வந்து தாயார் சந்நிதியில் திருவந்திக் காப்புக்* கண்டருளி வசந்த மண்டபம் எழுந்தருளிய பிறகு திருமஞ்சனம் நடைபெறுகிறது. வசந்தோத்சவத்தின் எல்லா நாட்களிலும் தாயார் சந்நிதியில் திருவந்திக்காப்பு நடைபெறும். தீர்த்தவாரியன்று ஸ்நான பேரருக்குப் பதிலாக ஸ்ரீ சடாரி எழுந்தருளி தீர்த்தவாரியாகும்.

## மண்டபங்கள்

மண்டபங்களில் வந்து இறைவன் இப்படி வெளியே வந்து சேவை சாதிக்கும் ஏற்பாடு எதனால் ஏற்பட்டது என்பதற்கு, ஆலயம் செல்ல இயலாதவருக்கும் அவரவர் இருக்கும் இடத்திற்கு அருகில் ஒரு மண்டபத்தில் அமர்ந்து சேவை சாதித்தல் பொருட்டேயாகும்.

இந்த நோக்கத்தின் பொருட்டு இறையருள் உணர்ந்த அன்பர்கள், அற உணர்வுடையோர் இதற்காக மண்டபங்கள் கட்டி வைத்து விருப்பண் திருநாட்களில் அரங்கர் எழுந்தருளுமாறு செய்தனர்.

அவ்வாறு ஏற்பட்ட மண்டபங்கள் தாம் கொடியாலம் சேஷாத்திரி மண்டபம், சௌகார் ஆஸ்தான மண்டபம், ஆரிய வைசிய ஆஸ்தான மண்டபம், பட்டுநூல்காரர் ஆஸ்தான மண்டபம், நாகப்பிள்ளை ஆஸ்தான மண்டபம், அரங்க விலாச மண்டபம் முதலியனவாகும். மண்டபம் செல்லும் வழியிலும் பெருமாள் நின்று அருள் பாலிக்கிறார்.

## வைகாசித் திருவிழாக்கள்

அச்சுதப்ப நாயக்கர் உபயமாக வைகாசி பிரம்மோத்சவம் நடைபெற்றுள்ளது. இந்தப் பிரமோத்சவம் பற்றிய செய்திகளை

* இறைவனுக்குத் திருஷ்டி கழிப்பதற்குத் திருவந்திக் காப்பு என்று பெயர்

கி.பி. 1570ஆம் ஆண்டில் ஆட்சி செய்த விஜய நகர மன்னர் ஸ்ரீரங்கர் காலத்துக் கல்வெட்டு வாயிலாக அறிகிறோம். அச்சுதப்ப நாயக்கர் 25 கிராமங்களைப் பொலியூட்டாக வழங்கி அதன் வாயிலாகக் கிடைக்கும் 6200 பொன் கொண்டு பல்வேறு விழாக்களுக்கு ஏற்பாடு செய்துள்ளமை அறிகிறோம்.

1558ஆம் ஆண்டில் ஏற்படுத்தப் பெற்ற திருமலை தேவ மகாராஜா பெயரில் நடைபெற்ற பிரம்மோத்சவம் பற்றிய செய்திகள் கல்வெட்டு எண் 298/1950–51இல் கூறப்பட்டுள்ளன. இந்தப் பெருவிழாக் குறித்த செய்திகள் தாயார் சந்நிதியின் தெற்குப் பகுதிச் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ளன (350/1953–54).

மேலும் பங்குனி ஆதிபிரம்மோத்சவம், திருமொழி – திருவாய் மொழித் திருவிழாவான அத்யயன விழா, உறையூர் வல்லி நாச்சியார் விழா பற்றியும் அறிகிறோம்.

வைகாசி மாதத்தில் நடைபெற்ற பிரம்மோத்சவத்தின் போது திருக்கொடியாழ்வார்* ஏறி அருளும்போது அதற்கான செலவு, இரண்டாம் திருநாளன்று நரசிம்மன் தோப்பு மண்டபத்திற்கும், மூன்றாம் திருநாளன்று சூடிக்கொடுத்த நாச்சியார் கோயிலுக்கும், நாலாம் திருநாளில் வெங்களாச்சி அம்மன் மண்டபத்திற்கும், ஐந்தாம் திருநாளில் வீரப்பநாயக்கர் தோப்பிற்கும், ஆறாம் திருநாளில் செல்லப்ப நாயக்கர் தோப்பு மண்டபத்திலும், ஏழாம் திருநாள் அழகிய மணவாளன் திருமண்டபத்திலும் உபய நாச்சியார்களுடனே ஜலக்கிரீடை வசந்தன் கொண்டருளித் திருவீதியில் திருநடைப் பூந்தேரில் எழுந்தருளி ஸ்ரீரங்கநாச்சியார் கோயில் முன் மண்டபத்தில் ஏறியருளுவதற்கும், எட்டாம் திருநாள் எல்லைக் கரை மண்டபம் எழுந்தருளி, ஸ்ரீரங்க நாச்சியார் கோயிலில் அச்சுதப்ப தேவ மகாராயருடைய உபயமாய்க் கட்டின திருவூஞ்சல் மண்டபத்தில் ஸ்ரீரங்க நாச்சியாருடன் ஏகசிம்மாசனத்தில் எழுந்தருளித் திருமஞ்சனம் கொண்டருளுவதற்கும், ஒன்பதாம் திருநாள் திருத்தேரில் ஏறியருளிய கட்டளைக்கும், பத்தாம் திருநாள் விடாய் ஆற்றிற்கு நாச்சியார் கோயிலில் திருவூஞ்சல் ஏறியருளிய கட்டளைக்கு உட்பட விடையாற்றி

* கொடியையே திருக்கொடி ஆழ்வார் என்பர்

வரை பத்து நாள்களிலும் திருமுறை முதல் மண்டபக் கட்டளை, வாகனக் கட்டளை, யாக சாலைச் செலவு, திருப்பள்ளியறை திருமஞ்சனம், சந்தன கோலை, கஸ்தூரிக் காப்பு, மண்டபங்களை பராமரிக்கவும் பல திருப்பணிகளுக்கும் சீவிர உத்தாரணச் செய்வதற்கும் விடப்பட்ட நிலந்தங்கள் பற்றியும் அறிகிறோம்.

வைகாசி பிரம்மோத்சவம் பூச நட்சத்திரத்தில் கொடியேற்றம் ஆகி விசாக நட்சத்திரத்தில் திருத்தேர் உற்சவமாக நடைபெற்றுள்ளது.

அதற்கு முன் கி.பி. 1553இல் இராமராஜா மகாராஜாவின் புதல்வரான அரவீடு ராமராஜாவின் பெயரில் ரேவதியில் கொடியேற்றம் ஆகிப் பூசநட்சத்திரத்தில் தேரோட்டம் நடைபெற்று இருக்கிறது.

நான்காம் திருச்சுற்றின் தென் பகுதியில் அமைந்துள்ள கல்வெட்டில் ரேவதி நட்சத்திரத்தில் கொடியேற்றமாகிப் பூச நட்சத்திரத்தில் திருத்தேர் நடைபெறுவதற்குப் பாசாறு, செந்தலை, கயிற்றார், செம்பியனங்களார் ஆகிய ஊர்களில் நஞ்சை, புஞ்சை நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்ட செய்தி காணப்படுகிறது.

இந்தக் கல்வெட்டில் திருமுனையன்று கொடுக்கப்படும் தர்ப்பைப் புல் கொடுப்பவர், திருத்தேர் விதானத்தில் படம் எழுதுபவன், திருக்கொடிப் படத்திற்கு வண்ணம் தீட்டுபவன், கருட பிரதிட்டைக்கு வேண்டியவை, மண்டபங்களில் எழுந்தருளுகையில் ஆகும் செலவிற்கு, பரியட்டம் நாடகம் ஆடுவோர், உலாபடிப்போருக்குக் கூலி எவ்வளவு வழங்க வேண்டும் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளன.

வைகாசித் திருவிழாக்களில் நம்பெருமாளின் வசந்த விழா ஒன்பது நாள்களும், திருவரங்கத்து நாச்சியார் கோடைத் திருநாள் பத்து நாட்களும் திருவரங்க நாச்சியார் வசந்த விழா ஏழு நாட்களும் நடைபெறும்.

நம்பெருமாள் வசந்த விழாவின் முதல் ஆறு நாள்களும் எட்டாம் நாளும் கருவறையிலிருந்து புறப்பட்டு வசந்த மண்டபம் 6.30க்கு அடைந்து அங்கு அலங்காரம், அமுது செய்து, சூர்ணாபிஷேகம் முதலியன கண்டருளிய பின் இரவு 8.30 மணிக்குப் புறப்பட்டு 9.30

மணிக்குக் கருவறை சேருவார். ஏழாம் நாள் அதுபோல் புறப்படும் எம்பெருமான் நெல்லளவு கண்டருளி, அலங்காரம் அமுது செய்து, சூர்ணா பிஷேகம் முதலியன கண்டருளிக் கருவறை சேருவார். இதில் நெல்லளவு காணுதல் மட்டுமே மாறுபட்ட நிகழ்ச்சி. வசந்த விழாவின் கடைசி நாளாம் ஒன்பதாம் நாள் தங்கக் குதிரை வாகனத்தில் மாலை 5.30 மணிக்குப் புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து சந்திரபுஷ்கரணியில் இரவு 7.00 மணிக்குத் தீர்த்தவாரி கண்டு இரவு 7.45 மணிக்கு வசந்த மண்டபம் சேர்ந்து இரவு பத்து மணி வரை திருமஞ்சனம் கண்டருளிய பின் இரவு 10.45 மணிக்குப் புறப்பட்டு இரவு 11.15 மணிக்கே கருவறை சேருவார். ஒன்பதாம் நாளை ஏகவசந்தம் என்பர்.

வசந்த விழா நாட்களில் கருவறையில் முதல் நாள் பகல் 1.30 மணி முதல் மாலை 5.00 மணி வரை சேவை இராது. கட்டண சேவை மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரையும் அதன் பின் இரவு 9.00 மணி வரை தர்மசேவையும் நடைபெறும். இரண்டாம் நாள் முதல் ஆறாம் நாள் முடியவும், எட்டாம் நாளும் இதுபோன்ற சேவைதான். பகலில் 3.30 மணி முதல் 5.00 மணி வரை கருவறை சேவை கிடையாது. தாயார் உற்சவங்களைத் தனியே காண்போம்.

## ஆனி மாத விழாக்கள்

நாலாயிரத்தை இந்த மண்ணுக்குக் காட்டிய ஸ்ரீமந் நாதமுனிகள் அவதரித்தது ஆனி மாத அனுஷத்தில். தொண்டரடிப் பொடி சந்நிதிக்கு எதிரில் அகளங்கன் திருச்சுற்றில் நாதமுனிகளின் புராதன சந்நிதி உள்ளது. இந்தச் சந்நிதியில் நாதமுனிகள் உற்சவம் நடைபெறும்.

ஆயினும் சாது வைஷ்ணவர்கள் எனப்படும் நாலாயிரத்திவ்ய பிரபந்த சுவாமிகளின் கோஷ்டி இச்சந்நிதியில் நடைபெறுவதில்லை. எனவே பெரிய கோயில் மரியாதை எனப்படும் அலங்காரம் அனுப்பப் பெறுவதில்லை. நாலாயிரம் கிடைத்தது இராமானுஜர் முறைகள் வகுத்த காலத்திற்குப் பின், நாதமுனிகள் காலத்தில் என்பதாலும், கோயில் ஒழுகில் குறிப்பிடப்படவில்லை என்பதாலும் இவ்வாறு இருக்கலாம் என்று சமாதானம் கூறப்படுகிறது.

ஆனால் 1874ஆம் ஆண்டு வரை கோயில் அலங்காரத்தோடு அவருடைய திருநட்சத்திரமான அனுஷத்தில் விழா சிறப்புடன் நடைபெற்றுள்ளது என்று வரலாறு காட்டுகின்றது.

விஜய நகர மன்னவரான வேங்கடவன் (கி.பி. 1588) காலத்துக் கல்வெட்டு ஊஞ்சல் மண்டபத்தின் அருகில் உள்ளது. (337/1953–54) இக்கல்வெட்டில் அழகிய மணவாளனார் என்னும் அரையர், நாதமுனி ஆழ்வார்க்கு அவருடைய அவதார திருநட்சத்திரமான அனுஷத்தன்று ஆண்டிற்கு இருமுறை அவருடைய உபயமாகப் பெருமாளுக்கு ஒரு படி தோசை அமுது கண்டருளப் பண்ணி, நாதமுனி ஆழ்வார்க்கு அதை அமுது செய்வித்து ஸ்ரீ வைணவர்களுக்கு விநியோகம் செய்ய வேண்டும் என்னும் செய்தி உள்ளது.

நம்மாழ்வார் சந்நிதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாத முனிகளுக்கு மூன்று நாள் கோஷ்டி நடைபெறுகிறது என அறிகிறோம்.

மூலவருக்கு நடைபெறும் ஜ்யேஷ்டாபிஷேகம் இம்மாத்தில் நடைபெறுகின்றது. மூலவர் திருமேனிக்குத் தலைக் காப்பு சாற்றப்படுவதற்கும் உற்சவர் திருமேனியில் அமைந்துள்ள கலசங்களை கலைந்து அவற்றைச் சுத்தம் செய்து மறுபடியும் தகுந்த பாதுகாப்புடன் அவற்றைத் திருமேனியில் சாற்றுவதற்கு ஜ்யேஷ்டாபிஷேகம் என்று பெயர். அந்நாளில் பெருமாள் பொங்கல் தளிகை அமுது செய்தருளுவார். அதன் பிறகு விஜய ரங்க சொக்க நாத நாயக்கரால் 1743ல் சமர்ப்பிக்கப் பெற்ற தங்க, வெள்ளிக் குடங்களுடன் அம்மா மண்டபம் சென்றடையும். அங்கு ஸ்தலத்தார்க்குச் சந்தன கோஷ்டியாகி காவிரி நீர் குடங்களில் நிரப்பப்படும். அதன்பிறகு யானை மேல் 12515 வராகன் சொக்கத் தங்கத்தினால் ஆன தங்கக் குடம் ஏற்றப்படும்.

இதில் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ள வாசகங்களிருந்து இந்தக் குடமானது திருடர்களால் அபகரிக்கப்பட்டுப் பின்பு கிடைத்தாகவும் அது செப்பனிடப்பட்டதாகவும் அறியலாம்.

வெள்ளிக் குடத்தை யானை மேல் ஏற்றாமல் கைங்கர்யபரர்கள் சுமந்து வருவர். ஸ்தலத்தார் வழி நடத்தக் கோயில் மிராஸ் வேதபாராயண கோஷ்டியினர் வேதம் ஓதிடக் குடங்களைத் திருஉண்ணாழி சுற்றில் பெரிய பெருமாள் திருமுடிப் பக்கத்தில் மேற்குப் பகுதியில் வைப்பர்.

அதற்கு முன்னர் பொங்கல் தளிகை அமுது செய்த பின்னர் நம் பெருமாள் உபய நாச்சியார், திருவரங்க மாளிகையார், ஸ்நான, சயன, பலி, தீர்த்த பேரர்கள் திரு உண்ணாழிச் சுற்றின் கிழக்குப் பகுதியில் எழுந்தருளப் பண்ணப்படுவார்கள். அதன் பின்னர் கவசங்களைக் களைந்து வாதூல தேசிகர் (அறங்காவலர் தலைவர்) ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஆகியோரிடம் ஒப்படைப்பர். கோயில் பொற்கொல்லர் கவசங்களைத் தூய்மை செய்வார்.

திரு உண்ணாழியில் எழுந்தருளியிருக்கும் உற்சவ மூர்த்திகளுக்குத் திருமஞ்சனம் நடைபெறும். கனி வகைகள், பால், தயிர், வாசனைத் திரவியங்கள் கொண்ட திருமஞ்சனம் இது. 1000 கலசங்களில் காவிரியிலிருந்து கொண்டு வரப்பட்ட நீரினால் திருமஞ்சனம் நடைபெறுமாதலால், இதற்குச் சகஸ்ர கலசாபிடேகம் என்று பெயர்.

உற்சவர் திருமேனிகளில் சாற்றப் பெற்றிருந்த கற்பூர, குங்குமப் பூ உருண்டைகள் வாதூல தேசிகர், அர்ச்சகர்கள், அலுவலருக்கு வழங்குவர். பெருமாளின் சுத்திகரிக்கப்பட்ட கலசங்களை அர்ச்சகர்களிடம் ஒப்படைப்பர். கவசம் இல்லாது விளங்கும் திருமேனிக்கு அமுது படிகள் சமர்ப்பிப்பர்.

அதன்பின் மூலவர் திருமேனிக்குத் தைலக்காப்புச் சாற்றுவர். கருவறையைத் தூய்மை செய்து பச்சைக் கற்பூரப் பொடி தடவுவார்கள். பெரிய பெருமாளின் விதானத்திருத்திரைகளை மாற்றிப் புதியவை சமர்ப்பிப்பர். அன்று இரவில் உற்சவ மூர்த்திகள் கருவறை அடைந்த பின்பு மங்கள ஆரத்தி நடைபெறும்.

ஜ்யேஷ்டாபிஷேகத்தின் அடுத்த நாள் திருப்பாவாடையின் போது சந்தனு மண்டபத்தில் ஓலைப்பாயின் மீது வெறும் பிரசாதம் பரப்பி அதில் பழங்கள், தயிர், பால் சேர்ப்பர். ஆயிரம் படி அரிசி அமுது படைக்கப் பெற்றது முன்பு. இப்போது மிகக் குறைந்த அளவில் நடைபெறுகிறது. ஆண்டு முழுவதும் ஏற்படும் பிரசாதக் குறைவினை ஈடுசெய்யும் திருவிழாவே திருப்பாவாடை விழாவாகும்.

பெரிய பெருமாளுக்கு ஜ்யேஷ்டாபிஷேகமாம் தைலக் காப்பு நடந்தருளிய பிறகு திருவடிகளுக்குத் திரையிட்டிருப்பார்கள். ஆடி 28க்குப் பிறகுதான் பெருமாள் திருவடியைக் காண இயலும்.

தாயார் சந்நிதியிலும் கருவறைத் திருமேனிகளுக்குத் தைலக் காப்புச் சாற்றுவர். திருவிழாத் திருமேனியிலுள்ள அங்கி கழற்றப் பெற்றுத் தூய்மை செய்யப் பெறும் பிறகு அணிவிக்கப் பெறும். தாயார் சந்நிதியிலும் திருப்பாவாடை சமர்ப்பிக்கப்படும்.

ஆனி மாதம் நம்பெருமாள் (உற்சவர்) ஜ்யேஷ்டாபிஷேகம் கேட்டையில் நடைபெறும். அந்நாளில் காலை 6.00 மணிக்குக் கருட மண்டபத்திலிருந்து தங்கக் குடம் எடுத்துத் திருக்காவேரியிலிருந்து காலை 7.00 மணிக்குத் திருமஞ்சனத்திற்குப் புனித நீர் எடுத்துப் பெரிய சந்நிதியைக் காலை 8.30 மணிக்கு அடைதல். காலை 8.55 மணிக்கு அங்கில் தொண்டமான் மேடு சேருதல். பின் மாலை கவசம் சுத்தம் செய்து திரும்ப ஒப்படைத்த பின் இரவு பத்து மணிக்கு மங்கள ஆரத்தி. அந்நாள் முழுவதும் மூலவர் சேவை இராது. ஆனி மாதம் திருப்பாவாடை நடைபெறும். ஆனி மாதம் ஒரு தங்கக் குடத்திலும், 12 வெள்ளிக் குடத்திலும் திருமஞ்சன நீரால் அபிடேகம் நடைபெறும். அன்று ஒரு நாள் மட்டும் பெருமாளின் திருவாபரணங்கள் களையப்பட்டுப் பொதுமக்கள் பார்வைக்கு வைப்பர்.

## ஸ்ரீசைலேச தயாபாத்திரத் தனியன் அவதாரத் திருநாள்

ஸ்ரீசைலேச தயாபாத்திரத் தனியன் என்பது தென்கலையினரின் பாடல். அது ஸ்ரீசைல தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் எனத் தொடங்கும் பாடல் அவதரித்த வரலாறு சம்பிரதாய சந்திரிகை என்னும் பாடலில் அப்பிள்ளார் அருளிச் செய்ததில் இடம் பெற்றுள்ளது. அப்பாடல்

நல்லதோர் பரிதாபி வருடம் தண்ணில்
நலமான ஆவணியின் முப்பத்தொன்றில்
சொல்லரில் சோதியுடன் விளங்குவெள்ளித்
தொல்கிழமை வளர்பக்கம் நாலாம் நாளில்
செல்வம் மிகு பெரிய திருமண்டபத்தில்
செழுந்திருவாய் மொழிபொருளைச் செப்பும் என்று
வல்லியுறை மணவாளர் அரங்கர் தங்கள்
மணவாள மாமுனிக்கு வழங்கினாரே.

ஆனந்த வருடத்தின் கீழ்மை ஆண்டில்
அழகான ஆனிதனின் மூல நாளில்
பானுவாரம் கொண்ட பகலில் செய்ய
பௌரணையின் நாளிட்டுப் பொருத்தி வைத்தே
ஆனந்த மயமான மண்டபத்தில்
அழகாக மணவாளர் ஈடுசாத்தி
வானவரும் நீர் இட்ட வழக்கே என்ன
மணவாள மாமுனிகள் களித்திட்டாரே.

பரிதாபி ஆண்டு திருப்பவித்திரத் திருவிழா நடைபெற்று வந்தது. ஆண்டு முழுவதும் திருவாய்மொழிப் பாசுரங்களை மட்டும் செவி சாய்த்து ஏற்று மகிழும் அரங்கத்துப் பெருமாளுக்கு ஆழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிக்கு வியாக்யானங்களை, ஈட்டின் ஸ்ரீ சக்திகளைக் கேட்கவில்லை என்னும் குறை பெருமாளிடத்து இருந்தது.

ஆண்டுதோறும் திருவாய் மொழிப் பாசுரங்களை ஏற்று மகிழும் பெருமாள் அக்குறையைத் தீர்த்துக் கொள்ள பெரிய ஜீயரான மணவாள மாமுனிகள் பக்கத்தில் அர்த்தித்துப் பகவத் விஷயமாக ஈடு கேட்டருளத் திருவுள்ளம் கொண்டாராம்.

திருப்பவித்திர மண்டபத்தில் பாகவதப் பெருங்குழுவினர் சாற்று முறையின்போது எழுந்தருளியிருந்தார். அப்போது மணவாள மாமுனிகள் பெருமாளை மங்களா சாசனம் செய்ய அங்கு எழுந்தருளினார். பெருமாள் மாமுனிகளிடத்து "நாளை முதல் நம்முடைய பெரு திருமண்டபத்தில் பெரிய வண்குருகூர் நம்பியான ஆழ்வாருடைய திருவாய் மொழிப் பொருளை ஈடு முப்பதாயிரத்துடனே நடத்தும்" என்று உரைக்க மறுநாளே தொடங்குவதாகக் கூறி மடத்திற்கு எழுந்தருளினாராம்.

மறுநாள் பெருமாள் நாச்சிமார்களுடன் புறப்பட்டருளிப் பெரிய திருமண்டபத்தில் எழுந்தருளினார். அங்குத் திவ்ய கதங்கக் குடம் சூரிகளும், ஆழ்வார் பெருமக்களும், அடியார் திருக்கூட்டத்தவரும் எழுந்தருளியிருந்தனர். மணவாள மாமுனிகள் எழுந்தருளிக்

காலட்சேபம் சாதித்தருளத் தொடங்கினார். இவ்வாறு பேரோலக்கத்தில் இருந்து நம் பெருமாள் சுமார் ஓராண்டுக் காலம் திருவாய் மொழியின் ஆழ்ந்த பொருளை முனிகள் வாயிலாகக் கேட்டுவகை எய்தினார்.

திருவாய் மொழி விரிவுரை நிறைவு நாளில் பெருமாள் நாச்சியார்களுடன், நித்ய சூரிகள், ஆழ்வார்களுடன் கூடிப் பெரிய குழுவாக எழுந்தருளியிருக்கச் சாற்று முறை நடைபெற்றது.

நம்பெருமாள் ஜீயர் மணவாள மாமுனிகளைச் சிறப்பிக்கத் திருவுள்ளம் கொண்டபோது ஓர் ஆச்சரியமான நிகழ்ச்சி நடைபெற்றது. ஜீயருக்கு ஆச்சாரிய சம்பாவனையாகச் சில திரவியங்களும், ஏலம், லவங்கம், கற்பூரம் முதலியவைகளும், திருப்பரியட்டங்களும் தாம் பூலங்களும், பழங்களும் சமர்ப்பிக்க அழகிய மணவாள பட்டர் என்னும் திருநாமமுடைய அர்ச்சகரின் ஐந்து வயதுடைய ரங்கநாயகம் என்கிற திருநாமம் கொண்ட சிறுபிள்ளை சம்பாவனைத் தட்டுக்களுடன் நம் பெருமாளுக்கு நடுவே நின்றான்.

குழந்தை நடுவிலே நிற்கின்றதே என்று பெரியவர்கள் அப்பால் கொண்டு விட்டனர். அப்பால் கொண்டு விடவிட மறுபடியும் வந்து நின்றான் சிறுவன்.

கோஷ்டியினர் குழந்தையைப் பார்த்து அவ்வாறு நிற்கும் காரியம் என்ன? என்று கேட்கக் குழந்தை மாமுனிகள் பக்கமாகக் கைகளைக் கூப்பிக் கொண்டு பயமில்லாமல் 'ஸ்ரீ சைல தயா பாத்ரம்' என்று கூறினார். பின்னும் என்ன என்று கேட்க 'யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம்' என்று சொல்லி ஓடினான்.

பெரியவர்கள் இந்த சுலோகத்தைப் பட்டோலை கொண்டு மஞ்சள் காப்புச் சாற்றிப் பெரிய பெருமாள் திருவடிகளில் சேர்ப்பித்து ரங்கநாயகத்தைக் கொண்டாடி மகிழ்ந்தனர். அழகிய மணவாள பட்டரிடம் அவருடைய மகனைப் பற்றி வினவ, அவர் அன்று தன் மகன் சந்தனு மண்டபத்திற்கு வரவில்லை என்று பதில் கூறினார். குழந்தை வடிவில் வந்த சிறுவன் அரங்கத்துப் பெருமாளே என்று உறுதி பூண்டனர்.

பெரிய பெருமாளும் உகந்தருளி அவரைக் கிருபை செய்து, வரிசைகள் சாதித்து

ஸ்ரீசைலேச தயாபாத்ரம்
தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்திர ப்ரவணம் வந்தே
ரம்ய ஜாமாதாரம் முனிம்.

என்று அனுசந்தித்துத் தொடங்கிப் பிரபந்தம் சாத்தி, 'வாழி திருவாய் மொழிப் பிள்ளை' என்று தொடங்கி, 'மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று ஜீயருக்குச் சம்பாவனையும் செய்தருளி மடத்திற்கு அனுப்பினார் என்பர்.

570 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தத் தனியன் அவதார விழா திருவரங்கத்து மணவாள மாமுனிகள் சந்நிதியில் நடைபெறுகிறது. அன்றைய நாள் மதியம் பெரிய அவசரம் ஆன பிறகு அலங்காரம் (கோயில் மரியாதை) ஸ்ரீமணவாள முனிகள் சந்நிதிக்கு அனுப்பினர். இப்போது இவ்வழக்கம் இல்லை. அன்று மாலை மணவாள மாமுனிகள் சந்நிதியில் சந்நிதி ஆதினகர்த்தரால் அப்பிள்ளை அருளிச் செய் சம்பிரதாய சந்திரிகை, பரவாதி 6 ஆசிரியார் அருளிச் செய்த ஸ்ரீசைல வைபவம் ஆகியன சேவிப்பர்.

## ஆடி மாதத் திருவிழா

ஆடி பதினெட்டு அல்லது இருபத்தி எட்டில் திருக்காவிரிக்குத் தங்கத் தோளுக்கினியானில் நம்பெருமாள் எழுந்தருளுவதை நம் பெருமாளுக்குக் காணிக்கையாக வழங்கியவர் விஜயரங்க சொக்கநாதர். இதனைத் திருச்சி மாவட்ட ஆட்சியாளர் ஜார்ஜ் பிரான்சிஸ் ஷராவர்ஸ். 39.5 சேர் தங்கமும், 20.5 சேர் வெள்ளியும் கொண்டு புதுப்பித்துள்ளார்.

ஆடிமாதப் பதினெட்டாம் பெருக்கு என்னும் ஆடிப் பெருக்கு சிறப்பு மிக்கது. நம்பெருமாள் காலை ஆறு மணிக்குத் தங்கப் பல்லக்கில் புறப்பட்டுப் பகல் 11.30 மணிக்கு அம்மா மண்டபம் அடைவார். மாலை 4.00 மணிக்கு அலங்காரம் அமுது செய்தல், மாலை 4.45 மணிக்குக் காவேரித் தாயாருக்கு மாலை, பொட்டு, சமர்ப்பித்தல் நடைபெறும். இரவு 8.30 மணிக்கு அம்மா மண்டபத்திலிருந்து புறப்பட்டவர் இரவு 9.30 மணிக்கு வெளி ஆண்டாள் சந்நிதியில் மாலை

மாற்றிக் கொண்டு கருவறை சேருவார். சிற்சில ஆண்டுகளில் ஆடி பதினெட்டுக்குப் பதில் ஆடி இருபத்தி எட்டில் அம்மா மண்டபம் எழுந்தருளி அம்மா மண்டபம் விட்டு வருதலும் உண்டு.

## ஆவணி மாத விழாக்கள்

கிளி மண்டபத்தில் உள்ள கண்ணபிரான் நம்பெருமாளுடன் உறியடிக்கு எழுந்தருளுகிறார். மூல விக்ரகங்களாகக் கிளி மண்டபத்தில் உள்ள கண்ணபிரான் சந்நிதியில் எழுந்தருளி யுள்ளவர்கள் நந்தகோபன், யசோதை, ரோகிணி ஆவர். இப்போது கண்ணனின் விழாத்திரு உரு மட்டுமே நந்தகோபனுக்கு முன்பு அமைந்துள்ளது.

விழாத் திரு உருவின் திருப்பாதம் பத்ம பீடத்தில் காலை சிறிது வளைத்தும், இடது பாதம் தூக்கிய நிலையில் வலது முழங்காலுக்குச் சமமாகவும் உள்ளது. தலையில் கிரீடம் அணிந்து கையில் வெண்ணெயுடன் காட்சியளிக்கிறார். நந்தகோபரின் வலது கையில் பால் செம்பும், இடது கையில் சங்கும் உள்ளன.

கிருஷ்ண ஜெயந்தி நாளான ஆவணியில் அஷ்டமி திதியில் இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள கண்ணபிரானின் பிற சந்நிதிகளிலும் ஸ்ரீ ஜெயந்தி கொண்டாடப்படுகின்றது.

அவ்வாறு ஸ்ரீ ஜெயந்தி கொண்டாடப்படும் சந்நிதிகள், அகளங்கன் திருச்சுற்றில் உள்ள 1. பார்த்தசாரதி சந்நிதி, 2. விட்டல கிருஷ்ண சந்நிதி, 3. தொண்டரடிப் பொடியாழ்வார் சந்நிதியில் உள்ள அஷ்டபுஜ கோபால கிருஷ்ணன் (மதன கோபாலன்) 4. நாத முனிகள் சந்நிதியில் உள்ள பலராமரோடு கூடிய கோபாலகிருஷ்ணன், 5. வேணு கோபாலன் சந்நிதியில் உள்ள நான்கு திருக்கால்களுடன் கூடிய கிருஷ்ணன், 6. கார்த்திகை கோபுர வாசலின் வடக்குப் பகுதியில் உள்ள ருக்மணி, சத்யபாமா சமேத வேணு கோபாலன், 7. சந்திர புஷ்கரிணியின் வடமேற்கு மூலையில் அமைந்துள்ள வேணுகோபாலன்.

ஆவணி மாதத்தில் ஸ்ரீ ஜெயந்திக்காகக் காலை 9.15 மணிக்கு மூலஸ்தானத்திலிருந்து புறப்பட்ட பெருமாள் காலை 10.00 மணிக்கு ஸ்ரீ பண்டாரம் ஆஸ்தான மண்டபம் சேர்ந்து பகல் 11.00 மணிக்குத்

திருமஞ்சனம் கண்டருளி, பகல் 2 மணி முதல் 2.30 மணி வரை அலங்காரம் அமுது செய்து, பொது மக்கள் சேவையினை 5.00 மணி வரை சாதித்த பின் மாலை 6 மணிக்கு கருவறை சேருவார். ஆகையால் மாலை 5.30 மணிக்கு மேல் மூலவர் சேவை இராது.

அடுத்த நாள் காலை 7.15 மணிக்கு ஸ்ரீ கிருஷ்ணன் புறப்பட்டு, சித்திரை வீதிகளில் எண்ணெய் விளையாட்டுக் கண்டருளிக் காலை 9.00 மணிக்கு ஸ்ரீ கிருஷ்ணன் சந்நிதி வந்து சேருகிறார். அதன்பின் 3.00 மணிக்கு நம்பெருமாள் உபய நாச்சியார்களுடன் திருச்சிவிகையில், ஸ்ரீ கிருஷ்ணன் உள்படப் புறப்பட்டு மாலை 4.00 மணிக்கு யாதவ உறியடி ஆஸ்தான மண்டபம் சேர்ந்து 6.30 மணிக்குப் புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து 8.15 மணிக்கு உறியடிகள் கண்டருளி இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார். கிளி மாலை சேவை – சாத்தாத வைஷ்ணவன் யானை ஏற்றம் ஆகியன நடைபெறும்.

## பவித்ரோத்சவம்

### பவித்ரோத்சவம் – ஆவணி மாத விழா

திருப்பவித்ரோத்சவம் ஒன்பது நாள்கள் நடைபெறும் ஆவணியில் ஸ்ரீ ஜெயந்தி சிறப்புற நடைபெறும். ஆவணியில் முதல் நாள் நம் பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து புறப்பட்டு யாக சாலை அடைந்து திருமஞ்சனம், அலங்காரம் கண்டு கருவறை சேருவார்.

மறுநாள் யாக சாலை திருவாராதனம், கருவறை திருவாராதனம் தொடங்கும். இரவில் 8.00 மணிக்கு பெருமாள் கருவறையிலிருந்து புறப்பட்டுத் திருப்பவித்ரோத்சவ மண்டபத்தில் அலங்காரம் முதலியன கண்டருளி அங்கிருந்து புறப்பட்டு இரவு 10.15 மணிக்குக் கருவறை சேருவார்.

மூன்றாம் நாள் முதல் ஆறாம் நாள் வரையும், எட்டாம் திருநாளும், மாலை 5.30 மணிக்குப் புறப்பட்டுப் பவித்ரோத்சவ மண்டபம் சேர்ந்து, அலங்காரம் முதலியன கண்டு அருளிப் புறப்பட்டு இரவு 9.15 மணிக்கு கருவறை சேருவார்.

ஏழாம் நாள் உபய நாச்சியார்களுடன் இரவில் புறப்பட்டு, இரவு 7.30 மணிக்கு நெல் அளவு கண்டருளித் தாயார் சந்நிதியில் திரு உந்திக் காப்புக் கண்டருளி இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார்.

ஒன்பதாம் திருநாள் மூலஸ்தானத்திலிருந்து காலை 9 மணிக்குப் புறப்பட்டுச் சந்திர புஷ்கரணியில் தீர்த்தவாரி கண்டருளித் திருப்பவித்ரோத்சவ மண்டபம் சேர்ந்து பகல் 1.00 மணி முதல் மாலை 3.00 மணி வரை திருமஞ்சனம் கண்டருளுவார். மண்டபத்தில் பொது ஜன சேவை கண்டருளி, அங்கிருந்து புறப்பட்டு இரவு 9 மணிக்குக் கருவறை சேருவார். வாதூல தேசிகர் திருப்பவித்ர பிரும்மரத மரியாதை இரவு 9.30 மணிக்கு நடைபெறும்.

இரண்டாம் திருநாளன்று 'அங்கோபாங்க சேவை' எனும் 'பூச்சாண்டி சேவை' நடைபெறும்.

பூச்சாண்டி சேவை என்பது மூலவர் மீது பஞ்சுத்திரியை வட்ட வட்டமாக வைத்து அலங்கரிப்பதாகும். இது பார்க்க அழகிய காட்சி. இதற்குப் பூச்சாண்டி சேவை என்று பெயர்.

உற்சவருக்கு வெவ்வேறு வண்ணப் பூணூல்கள் அணிவித்து அதற்கென்றுள்ள மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணுவர். பக்தர்கள் இதைக் காணக் கூடுவர்.

ஆவணி மாதத்தில் சேரனை வென்றான் எனும் சேனை மண்டபத்தில் நம் பெருமாள் பவித்ரோத்சவம் நடைபெறும். இந்த மண்டபத்தை பவித்ரோத்சவ மண்டபம் என்று கூறுகின்றனர்.

'சேரனை வென்றான்' என்னும் விருதுக்கு உரியவன் ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் என்னும் பாண்டியனாவான். நம் பெருமாள் இசுலாமியத் தாக்குதலுக்குப் பின் 1371ஆம் ஆண்டு வைகாசி மாதம் 17ஆம் நாள் திருவரங்கத்திற்குத் திரும்பி எழுந்தருளிய தினத்தன்று இந்த மண்டபத்தில் உபய நாச்சியார்களோடு எழுந்தருளியிருந்தார்.

கருவறை பாழ்பட்ட நிலையில் நம்பெருமாள் பாதுகாப்பாக எழுந்தருளியிருந்தது இந்த மண்டபத்தில்தான். ஸ்ரீவைணவ வண்ணத்தான் சாத்திய திருநாமமே அழகிய மணவாளன் என்பதாகும். அந்தப் பெயர் சூட்டி அடையாளம் சூட்டியது இந்த மண்டபத்தில்தான். அன்று சாத்திய திருநாமமே நிலை பெற்றுள்ளது.

விஜய நகர மன்னரான மல்லிகார்ச்சுணர் காலத்துக் கல்வெட்டில் பவித்ரோத்சவம் முதலாழ்வார்கள் திருமண்டபத்தில் நடைபெற்றதாகக்

கூறப்பட்டுள்ளது. (343/525) காலப்போக்கில் அங்குப் பவித்ரோத்சவம் நடைபெறுவது நின்று போய் சேனை மண்டபத்திற்கு எழுந்தருளும் முறை ஏற்பட்டது என அறிகிறோம்.

காலையில் ஸ்ரீ ஜெயந்தி நாளில் திருமஞ்சனம், வேத வியாசபட்டர் விண்ணப்பம், 81 கலச திருமஞ்சனம் நடைபெறுகிறது.

இரவு நம்பெருமாள் ஆஸ்தானம் திரும்பிய பின் கிளி மண்டபத்தில் உள்ள கண்ணனுக்குத் திருமஞ்சனம், இருவருக்கும் திருவாராதனம் கிருஷ்ணனுக்குச் சங்குப் பால் சமர்ப்பித்தல் சிறப்பான திருப்பணியாரங்கள் நிவேதனம் ஆகியன நடைபெறுகின்றன.

மறுநாள் மிருக சீர்ஷம் நாளில் காலையில் ஸ்ரீ கண்ணபிரான் திருவீதியில் எண்ணெய் விளையாட்டு. நம்பெருமாள் உபய நாச்சியார்களோடு, ஸ்ரீ கிருஷ்ணன் உள்பட்டோர் புறப்பட்டுத் திருமஞ்சனக் காவிரி அருகில் உள்ள யாதவர்களின் உறியடி ஆஸ்தான மண்டபம் சேருவார். மாலையில் மண்டபத்திலிருந்து புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து பாதாள கிருஷ்ணன் சந்நிதி அருகில் உறியடி கண்டருளுவார். பெருமாளுக்குக் கிளி மாலை சமர்ப்பித்ததற்காகச் சாத்தாத வைணவன் யானையேற்றம் நடைபெறும்.

ஆவணி மாதத்தில் விநாயக சதுர்த்தி நாளில் பெரிய பெருமாளுக்கு அமிர்த கலசம் (மோதகம்) அமுது செய்வித்தருளிய பிறகு திரு உண்ணாழி திருச்சுற்று மேற்குப் பகுதியில் உள்ள விநாயகருக்கு (கஜாணனர்) அமுது செய்வித்தல் நடைபெறும். இவர் விசுவக்சேனரின் படைத் தலைவர்களில் ஒருவர் ஆதலால் திருஉண்ணாழியின் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் விநாயகரும், திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் துர்க்கையும் பரிவார தேவதைகளாக அமைந்துள்ளனர்.

## புரட்டாசி மாதத் திருவிழாக்கள்

நம் பெருமாள் புரட்டாசி மாதத்தில் விஜய தசமி நாளில் பல்லக்கில் காலை 6.30 மணிக்குப் புறப்பட்டு, வழி நடை உபயங்கள் கண்டருளி காட்டழகிய சிங்கன் கோவில் ஆஸ்தான மண்டபத்தைக் காலை ஒன்பது மணிக்கு அடைகிறார்.

பின் குதிரை வாகனத்தில் மாலை 6.00 மணிக்குப் புறப்பட்டு நெல்லி மரத்தில் அம்பு போட்டு இரவு உபய நாச்சியார்களுடன் சாத்தார வீதி வழியாக இரவு 9.00 மணிக்குச் சந்தனு மண்டபம் சேர்ந்ததும் அமுது பாறையில் திருமஞ்சனம் கண்டருளுவார்.

துலா விஷூ புண்ய காலத்தில் நம்பெருமாள் காலை 9.45 மணிக்குப் புறப்பட்டுத் திருமஞ்சனம் கண்டருளி சந்தனு மண்டபத்திலிருந்து 5.30 மணிக்குப் புறப்பட்டுக் கருவறை சேருவார்.

*புரட்டாசி / ஐப்பசி டோலோத்சவம் (ஊஞ்சல்) :* இவ்விழா நடைபெறும் முதல் நாளில் ஊஞ்சல் மண்டபத்தில், ஊஞ்சல் உத்சவத்தில் அரையர்கள் 'மாணிக்கங்கட்டி' என்னும் பெரியாழ்வார் திருமொழி 1–3 பத்துப் பாசுரங்கள், மண்ணடிகள் என்று தொடங்கும் பெருமாள் திருமொழி, 8ஆம் திருமொழி பதினோரு பாசுரங்கள் ஆகிய தாலாட்டுப் பாசுரங்கள் திருப்பாலை முப்பது பாட்டும், ஆக ஐம்பத்தோரு பாசுரங்கள் சேவித்து நிறைவடையும் வரையில் திருவாராதனம் நடைபெறும்.

திருவாராதனத்தில் பராசரவேத வியாச பட்டர் எழுந்தருளி வேத விண்ணப்பம். வெள்ளிச் சம்பா அமுது செய்து பெருமாள் ஊஞ்சல் ஆடிக் கொண்டிருக்கையில் திரையிட்டு மங்கள ஆரத்தி நடைபெறும். அதன் பின் பிள்ளைப் பெருமாள் அருளிச் செய்த ஊஞ்சல் பாட்டுக்களைக் கோயில் தாசிப் பெண்கள் நின்றுகொண்டு பாடுவர். 1953ஆம் ஆண்டு தேவதாசி ஒழிப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்ததும் தேவதாசிகள் ஊஞ்சல்பாட்டுப் பாடுவது நின்றுவிட்டது.

ஊஞ்சல் பாட்டுக்களை அனுபவித்துக் கொண்டு இடையிடையே தாம்பூலம் தரித்துக் கொண்டும் முன் காலங்கள் பெருமாள் ஊஞ்சல் நடைபெற்றது. பெருமாள் அமுது செய்த தாம்பூலங்களை மணியக்காரருக்கு அளிப்பர். ஊஞ்சலாட்டம் நின்றதும் தீர்த்தப் பிரசாத விநியோகம் ஆன பிறகு பெருமாள் உள்ளே எழுந்தருளுவார். இந்த ஊஞ்சல் விழாவில் முதல் நாள், ஏழாம் நாள் தவிரப் பிற நாள்களில் உபயநாச்சிமார்கள் எழுந்தருளுவதில்லை. இந்த ஊஞ்சல் விழா ஏழாம் திருநாளிலும் உபய நாச்சியார்கள் சூர்ணாபிஷேகம் செய்து கொண்டு

கொட்டார வாசலில் நெல் அளவு கண்டு அதன் பின் மண்டபம் எழுந்தருளுவார்.

இந்த ஊஞ்சல் திருவிழாவிற்கு என்று கொடியேற்றமோ, கொடியிறக்கமோ கிடையாது என்ற போதும் தீர்த்தவாரி மட்டும்இது கேளிக்கை உத்சவம் என்பதால் உண்டு.

ஊஞ்சல் உற்சவத்தைக் கி.பி. 1489–1515க்கும் இடைப்பட்ட காலக் கட்டத்தில் ஸ்ரீ கந்தாடை இராமானுஜ முனி என்பவர் நடத்தி வைத்தார் எனக் கோயில் ஒழுகு குறிப்பிடுகின்றது. இந்தக் கந்தாடை இராமானுஜ முனியின் திருஉருவம், ஊஞ்சல் மண்டபத்தில் ஊஞ்சலுக்கு முன்பு உள்ள ஒரு தூணில் வடக்கு நோக்கி எழுந்தருளப் பண்ணப்பட்டுள்ளது.

ஏழாம் நாள் நெல் அளவை காணும் நாளன்று மதுரகவி நந்தவனத்தார் கைங்கர்யமாகச் சிறப்பான மலர் அலங்காரம் நடைபெறுகிறது.

புரட்டாசி திருவோணத்தில் அவதரித்த வேதாந்தாசாரியர் வேதாந்த தேசகரின் புரட்டாசி திருவோணத்தன்று மங்களா சாசனத்திற்குப் பெருமாள் எழுந்தருளுவதில்லை. இதற்குக் காரணம் 1803இல் திருச்சி மாவட்ட ஆட்சியாளரான வாலசு கோயில் முழுமையும் தென்கலையினரின் நிருவாகத்திலிருப்பதால் வடகலையினர் இத்திருக்கோவிலுடன் எத்தொடர்பும் கொள்ளுதல் கூடாது என்று தீர்ப்பு வழங்கியதே. அதன் பின்னும் பலமுறை பல வழக்குகள் இது தொடர்பாக நடைபெற்றுள்ளன என்று அறிகிறோம்.

ஊஞ்சல் உற்சவம் எனப்படும் டோலோத்சவம் புரட்டாசி கடைசியில் ஐப்பசி முதலில் ஒன்பது நாள்கள் நடைபெறும். மாலை உபநாச்சியார்களுடன் புறப்பட்டு ஊஞ்சல் மண்டபம் சேர்ந்து, அலங்கார அமுது செய்து ஊஞ்சல் தொடங்கி, அம்மண்டபத்திலிருந்து புறப்பட்டு கருவறை சேருதல் நடைபெறும். ஏழாம் நாள் நெல்லளவு காணுதல், திருவுந்திக் காப்புக் கண்டருதலும், ஒன்பதாம் நாள் சந்திர புஷ்கரணியில் தீர்த்த வாரியும், திருமஞ்சனமும் கூடுதல்.

# ஐப்பசி மாத விழாக்கள்

ஐப்பசி மாதத்தில் ஒவ்வொரு நாளும் தென் திருக்காவிரியிலிருந்து விசுவருபத்திற்கும், திருமஞ்சனத்திற்குமான தீர்த்தம் தங்கக் குடத்தில் யானையின் மேல் எழுந்தருளப் பண்ணப்படும்.

ஐப்பசியில் பத்து நாள்கள் மணவாள மாமுனிகள் உற்சவம் நாலாயிரதிவ்யப்பிரபந்த சேவை ஆகி சாத்து முறை நடைபெறும். பதினோராம் நாள் இயற்பா சாத்து முறை. மணவாள மாமுனிகள் சாத்துமுறை நாளில் அர்ச்சகர்கள் மாமுனிகளுக்கு அமுது செய்விப்பது பின்பு கோயில் மரியாதை கொண்டு வந்தவர்களுக்கும் மரியாதை செய்தல், கோஷ்டி ஆகியன நடைபெறும்.

ஐப்பசி திருவோணம் பிள்ளை லோகாசிரியர் திருநட்சத்திரம் ஆகும். வடக்குத் திருவீதிப் பிள்ளை குமாரராய் அவதரித்துப் பெருமாளுடைய அபிமானத்திற்குப் பாத்திரமான இவர், இசுலாமியப் படையெடுப்புகளின் போது ஒரு சிறு பல்லக்கிலே ரகசியமாக வெளியேறி நம்பெருமாளை இந்த ஆபத்திலிருந்து காப்பதைத் தம் கடன் எனக் கொண்டு, மதுரைக்கு அருகில் உள்ள ஜோதிஷ்குடி என்னும் ஊரில் தங்கி நம் பெருமாள் திருப்பணியில் சரீரத்தியாகம் செய்த பெருமைக்குரியவர்.

பெருமாளுடைய திருப்பரி வட்டம், மாலை சந்தனம், தாம்பூலம் மேளதாளத்துடன் பிள்ளை லோகாசாரியருக்குச் சாத்தி, ஸ்தானீகர்களுக்கும், பிள்ளை லோகாகாரியாருடைய தீர்த்தப் பிரசாதம் சாதித்து சேவை செய்து வைத்த பின்னர் கோஷ்டியாகும். இரவு பெருமாள் அமுது செய்யும் அரவணை பிள்ளை லோகாசாரியருக்கு அனுப்பி வைக்கப்படும்.

சேனை முதல்வர் திருநட்சத்திரம் பூராடம் அன்று அவருக்குப் பெரிய பெருமாள் செலவு (செல்வர் சம்பா) அமுது செய்த பிறகு சேனை முதல்வர் சந்நிதிக்கு செலவு சம்பா அலங்காரத்துடன் அனுப்பப்படும். பின் அங்குத் திருப்பாவாடை. கோஷ்டி மட்டும் நடைபெறும். முதலாழ்வார் மூவர் திருநட்சத்திரங்கள் திருவோணம், அவிட்டம்,

உதயம் ஆகும். ஆழ்வார்கள் மூவரும் பெரிய பெருமாளை மங்களா சாசனம் செய்து திருவீதிப் புறப்பாடு நடைபெறும்.

*தீபாவளி :* தீபாவளியின் முதல் நாள் பெருமாளுக்கு எண்ணெய் அலங்காரமும், கைங்கர்யகாரர்களுக்கு எண்ணெய், சீயக்காய், மஞ்சள் அனுக்கிரகித்து இரவு நரக சதுர்த்தி முழுக்கும், தீபாவளி நாளில் திருமஞ்சனமும் ஜாலி (சாளி) அலங்காரமும் நடைபெறும். தீபாவளி காலை 10.00 மணிக்குப் பெருமாள், கிளி மண்டபம் சேருவார்.

எம்பெருமாள் ஆழ்வார், ஆசாரியர் மூலஸ்தானத்திலிருந்து புறப்பட்டுச் சந்தனு மண்டபம் சேர்ந்து திருமஞ்சனம் கண்டருளிய பின் (11.30 – 1.30) ஏராளமான அணிகலன்கள் அணிந்து எழுந்தருளியிருப்பார்.

பெருமாளுடைய திருவாபரணங்கள் பாதுகாப்பாகக் கல் அறையில் வைக்கப்பட்டுள்ளன. மகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது. இந்த அறை பாறைகளால் கட்டப்பெற்றிருப்பதால் கல் + அறை, கல்லறை என்று பெயர். தெற்கில் இருப்பதால் தெற்குக் கல்அறையாகும்.

விழாக்காலங்களில் இன்ன இன்ன நாளில் இன்ன அணிகலன் அணிவிக்க வேண்டும் என்றும் விதிமுறை உள்ளது. அதனை முறையாகப் பின்பற்றுவதில்லை என்பர். மாலையில் ஜாலி (சாளி) அலங்காரம். ஜாலி அலங்காரமாவது ஆயிரம் முழு ரூபாயாக இரண்டு பைகளில் கட்டி மேளதாளத்துடன் கொண்டு வந்து பெருமாள் காலடியில் சேர்ப்பது.

இரவு 8.30 மணிக்குச் சந்தனு மண்டபத்திலிருந்து புறப்படுவார். ஆழ்வார்கள் – ஆச்சாரியர்களுக்கு மரியாதை நடைபெறும். தாம் உடுத்திக் களைந்த பீதவாடையை அனுப்பி உள்ளே எழுந்தருளுவார். இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார். அன்று இரவு 8.15 மணிக்கு மேல் மூலவர் சேவை இராது.

நம் பெருமாள் கைங்கர்யத்துக்கு மற்றைய மாதங்களில் வெள்ளிப் பாத்திரங்கள் பயன்படும். இந்த மாதத்தில் தங்கத்தினால்

ஆனவையே பயன்படுத்துவர். தங்கத்தோளுக்கினியானில் புறப்படுவர் தங்கச்சாமர திருமுத்துக்களும் உண்டு. ஐப்பசி முழுவதும் சாளக்கிராமமாலையணிவார்.

*ஐப்பசி ஊஞ்சலில் ஏழாம் நாள் :* ஏழாம் திருநாளன்று உபய நாச்சியார்களுடன் நெல் அளவு கண்டருளி தாயார் சன்னதியில் திருவந்திக் காப்பு நடைபெறும். பூக்கார வீதி எனப்படும் சாத்தார வீதி பூ வியாபாரிகள் ஆங்காங்கே செவ்வந்திப் பூப்பந்தல் போட்டு இருப்பர். ஒவ்வொரு திருவிழாவின் போதும் பெருமாளுக்கு ஒவ்வொரு வித அலங்காரம் தான். இது போல் வேறு எங்கும் விழாவிற்கு விழா வேறுபட்ட அலங்காரம் காணவியலாது.

பெருமாளுக்கான பாலமுது விஜயரங்க சொக்கநாதர் அளித்த வட்டிலில்தான் ஐப்பசி மாதத்தில் சமர்ப்பிக்கப்படுகிறது. காவிரி மண்டபத்தில் துலாகாவிரி மகாத்மியம் வாசிப்போருக்குப் பெருமாளுடைய மாலை அணிவித்தனர். இப்போது இதெல்லாம் இல்லை.

## கார்த்திகை மாத விழாக்கள்

*கைசிக ஏகாதசி :* அரையர் பாடிக் கொண்டிருக்கையிலே கோயில் மகாஜனம், கைங்கரியபரர்கள் ஸ்ரீபாரசர/வேத வியாசபட்டர் திருமாளிகைக்குச் சென்று, பட்டரைப் பெருமாளுடைய காப்பந்தம் மேளதாளம் முதலிய வைபவத்துடன் கோயிலுக்குள் எழுந்தருளப் பண்ணி வருவர்.

பட்டர் பிரதட்சணமாக வந்து கீழப்படி வழியாக அழகிய மணவாளன் திருமண்டபத்தில் பெரிய பெருமாளுக்குத் தண்டம் சமர்ப்பித்துவிட்டு, அவ்விடத்திலேயே எழுந்தருளியிருப்பார்.

திருவாய் மொழி முடிந்ததும் மணியகாரர் வந்து பட்டரைத் தண்டம் சமர்ப்பித்து அர்ஜுன் மண்டபத்துக்கு எழுந்தருளப் பண்ணுவார். அடிவிரித்து ஸ்தானிகர் பெருமாளை நியமனம் கேட்டுக் கொண்டு பட்டருக்கு அருளிப்பாடு சாதிக்க பட்டர் கைசிக பிராண ஸ்ரீ கோசத்துடன் (இது ஒரு நூல்) நம் பெருமாளிடம் வந்ததும், ஸ்தானிகர் ஸ்ரீ கோசத்தை வாங்கி அர்ச்சகரிடம் கொடுக்க அது அர்ச்சகரால் பெருமாளிடம் வைக்கப்படும்.

திருமுன் காணிக்கை சேர்த்துப் பட்டர் தீர்த்தம், சந்தனம், பரிவட்டம், மாலை, ஸ்ரீ சடகோபம், முதலிய பிரசாதங்களைப் பெற்று ஸ்ரீ கோசத்தை வாங்கிக் கொண்டு போய் சற்று தூரத்தில் 'ஸ்ரீ சைலேசதயாபாத்திரம், எனும் மணவாள மாமுனியின் தனியன் முதல் பட்டருடைய தனியன் வரையுள்ள தனியன்களைச் சொல்லி, கைசிக புராணத்தைப் பட்டர் அருளிச் செய்த அவதாரிகை வியாக்கியானங்களோடு ஸ்ரீ கோசத்தைப் பார்த்தே வாசித்து முடிப்பார்.

புராணம் வாசித்துக் கொண்டிருக்கையிலே பட்டருக்கு அருளிப்பாடாகும். பட்டர் புராணம் வாசிப்பை நிறுத்தி நம்பெருமாளிடம் 6 முறை தீர்த்தமும் 6 முறை வேளையத்தையும், பச்சைக் கற்பூர உருண்டையையும் பெற்றுக் கொள்வார்.

புராணம் நிறைவுற்றதும் பட்டர் நம் பெருமாளிடம் வந்து வெள்ளித் தட்டிலுள்ள வடை பருப்புப் பிரசாதத்தைப் பெற்றுக் கொள்வார். நம் பெருமாளுடைய காப்பந்தங்களோடு கைங்கர்ய பரர்கள் பட்டரை அழைத்துச் சென்று திருமாளிகையில் விட்டு வருவார்கள். வெண்கலத் தட்டில் உள்ள வடை பருப்பு அரையருக்குச் சாதிக்கப்படும்.

வேத விண்ணப்பம் நடந்து தட்டி வந்து கடதீபம் ஆனதும் பெருமாளுக்கு அலங்காரம், அமுது செய்விக்கப் பட்டுத் தீர்த்த விநியோகமும் திருப்பணியார விநியோகமும் ஆனபின் நம் பெருமாள் புறப்படுவார்.

பெருமாளுடைய புறப்பாட்டு வேளையினைப் பட்டருக்குத் தெரிவித்துக் கைங்கர்யபரர்கள் அவரை அங்கி, குல்லாய் முதலியவற்றுடன் சந்நிதிக்கு எழுந்தருளப் பண்ணுவார்கள். மணியகாரர் உள்ளே போய் நம் பெருமாளுக்குப் புறப்பாடு செய்து வைப்பார். பெருமாள் கிளி மண்டபத்திலிருந்து கீழே இறங்கிக் கண்ணாடி அறைக்கு அருகில் வந்ததும் பட்டர் பெருமாளைத் தண்டம் சமர்பித்துப் பெருமாளுடன் கூட வருவார். பெருமாள் இரண்டடி மேற்குப் பக்கம் வந்ததும் அரையர்களுக்கு அருளிப்பாடாகும்.

மேலப்படியில் பெருமாள் திருமுடியிலும், திருமேனியிலும் வாரியிறைக்கும் பச்சைக் கற்பூரப் பொடிகளோடு படியேற்றம் கண்டருளி, மலைப்படியேறி அதிவேகமாய்த் திரும்பி நிற்பார்.

மேலப்படியில் நம்பெருமாளுக்குத் திருவந்திக் காப்பு ஆகும். அதன்பின் கைசிக புராணம் அவதரித்த நாளில் தம்முடைய திருமுன்பே வியாக்கியானித்து உத்சவமாக உசப்பித்தமுறை காரரிடம் பராசர வேதவியாச பட்டரிடம் குதூகலித்து இருக்கும் நம் பெருமாளிடம் அர்ச்சக முகேலி நியமனம் கேட்டுக் கொண்டு, ஸ்தாலீர் புறம் பட்டரை வீட்டில் விட்டுவா என்று நம் பெருமாளுடைய திரு உள்ளத்தை மணியகாரருக்குச் செல்வார். மணியகாரரும் 'ஞாயிற்றே' ஞாயிற்றே என்று ஏற்றவாறு நம்பெருமாள் பட்டரையும், மணியகாரரையும் அழைத்துக் கொண்டு தம் திருமேனியில் சாற்றிய மாலையைக் களைந்து பட்டருக்குச் சாதித்து ஸ்ரீ சடாரி அபய ஹஸ்த மரியாதைகள் நடைபெறும்.

பின் பெரிய பெருமாளைச் சேவித்து அவ்விடத்திலும் பிரசாதங்களையும், மரியாதைகளையும் பெற்றுக் கொண்டு திருக்காப்பு நீங்கியவுடன் முதலில் வெளியே எழுந்தருளுவார். பிறகு பட்டர் நட்டு, முட்டு வாத்தியங்களோடு புறப்பட்டுப் பெரிய பெருமாளைப் பிரதட்சினம் செய்து கொண்டு ஆரிய பட்டாள் வாசலில் இருக்கும் திருமாளிகைக்கு எழுந்தருளுவார்.

வராக புராணத்தில் நம் பாடுவான் சரித்திரம் அமைந்துள்ளது. அதற்கு அழகான தமிழில் ஸ்ரீ பராசர பட்டர் வியாக்யானம் செய்து பெருமாளிடம் விண்ணப்பித்து அப்போதே மேல் வீடு பெற்ற வைபவத்துக்காக இந்த விழா ஸ்ரீரங்கத்தில் நடைபெறுகிறது.

கார்த்திகை மாதத்தில் கைசிக ஏகாதசி மிகவும் சிறப்பானது. பெருமாள் காலையில் சந்தனு மண்டபத்தில் தங்கச் சல்லடையின் வழி திருமஞ்சனம் கண்டருளுவார். இரவு துலுக்க நாச்சியாருக்குப் படியேற்றச் சேவை சாதித்து அர்ச்சுண மண்டபத்தில் எழுந்தருளுவார். வண்ண வண்ணப் போர்வைகள் 365 சாற்றுவார்கள். அந்த ஆண்டில் எத்தனை நாள்கள் உண்டோ அத்தனைப் போர்வை சாற்றுவது வழக்கம்.

இது பெரிய பெருமாளுக்குச் சமர்பிக்கப்படும் கைங்கர்யங்களில் வஸ்திரக் குறைவை ஈடு செய்வது ஆகும்.

ஒவ்வொரு போர்வை சாத்திடும்போதும் 'திருவிளக்கு தூண்டுவருதல்', 'திருவடி வளர்வருதல்', 'அடைக்காய் அமுது செய்வருதல்' என்று கூறியவாறு சாத்துவர். மங்கள ஆர்த்தியும் நடைபெறும்.

இரவு வெகுநேரம் அதாவது 11.30 மணி வரை அரையர்களுக்கு அருளப்பாடு ஆனதும் பாசுரங்கள் விண்ணப்பது நடைபெறும். அதன் பின் ஸ்ரீ பட்டர் சுவாமிகள் வியாக்யானம் நடைபெறும். கைசிக புராணம் வாசித்தல் நடைபெறும். இது இரவு 2.00 மணி வரை நீடிக்கும்.

*ஞாயிற்றே, ஞாயிற்றே :* நம் பெருமாளைத் திருமஞ்சன வேதியில் எழுந்தருளப் பண்ணித் திரை போடப்படும். அரையர்களுக்கு அருளிப்பாடு மரியாதை நடைபெறும். அரையர்கள் பெரிய திருமொழி முதற்பத்தில் உள்ள ஒன்றாம் திருமொழியில் உள்ள

*வாடினேன் வருந்தினேன் மனத்தால்*
*பெருந்துயரிடும்பையில் பிறந்து*
*கூடினேன் கூடி இளையவர் தம்மோடு*
*அவர்தரும் கலவியே கருதி*
*ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்*
*உணர்வெறும் பெரும்பதம் தெரிந்து*
*நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்*
*நாராயணா வென்னும் நாமம்*

என்ற இப்பாசுரத்தை அபிநயித்துப் பாடுவார்கள்.

அபிநயம் முடிந்ததும் கணக்குப் பிள்ளையை அருகே நிறுத்திக் கொண்டு ஸ்தானிகர் 'ஞாயிற்றே இரகுநாதா' என்று திருவுள்ளம் கேட்பார். கீழே அமர்ந்திருக்கும் அர்ச்சகர் சிம்புகுல்லாய் தரித்திருப்பார்.

கார்த்திகைக்குக் கார்த்திகை, திருக்கார்த்திகைத் திருநாளுக்கு நாம் புறப்பட்டு எழுந்தருளி அழகிய மணவாளன்

திருமண்டபத்தில் சேர பாண்டியன் சிம்மாசனத்தில் சுந்தர பாண்டியன் திருமுத்துப் பந்தலின் கீழ் அரிஹர ராயன் திருப்பள்ளிக் கட்டிலின் மேள் வீற்றிருந்து கலியன் பாட்டுக் கேளா நிற்குகையில் கோவணவர் கொடவர், கொடுப்பார், எடுப்பார், பாடுவார், தழையிடுவார், மற்றுமுள்ள நம்மிராநுசமுடையார்களும் தரவேணுமென்று விண்ணப்பம் செய்ய நாம் சாற்றிக் கழித்த சந்தனமும், சூடிக் கொடித்த சுகந்தமும் உடுத்துரைத்த கலியனும் நம் தழையிடுவான் கையில் கொடுத்தனுப்பினோம் என்று சொல்கையில் ஸ்தானீகர் 'எழுக' என்று சொல்லக் கணக்கர் 'ஞாயிற்றே' 'ஞாயிற்றே' என்று சொல்லி எழுத்தாணி பிடித்தெழுவான். 'வாசி' என்றவாறே வாக்கியத்தின் ஆரம்பத்தில் வருட, மாதங்களைக் கூட்டி வாசித்து என்று பெரிய பெருமாள் திருவாய் மலர்ந்தருளுகிறார் என்று முடிப்பான்.

ஸ்தானிகர் இன்னொரு தரம் வாசி என்றவாறே வாசித்து 'இங்கே தா' என்றதும் ஸ்ரீ முகத்தை ஸ்தானீகரிடம் கொடுத்து விடுவார். அந்த ஓலையை அர்ச்சகர் வாங்கி நம் பெருமாள் திருவடியில் வைப்பார்.

*கற்பூரப் படியேற்ற சேவை :* கைசிக ஏகாதசிக்கு மறுநாள் காலை நடைபெறும் விழா இது. காலை 5.15 மணிக்கு அருச்சுண மண்டபத்திலிருந்து புறப்பட்டு 5.45 மணிக்குக் கற்பூரப் படியேற்றச் சேவை கண்டருளுவார். கற்பூரப் படியேற்ற சேவையின் போது பச்சைக் கற்பூரத்தைப் பெருமாள் மீது வீசுவர். இதைக் காண மக்கள் அதிகாலையிலேயே வருவர்.

இதுபோல் குடும்பத்தோடு கற்பூரப் படியேற்ற சேவை காணத் தான் வந்தார் மன்னர் விஜயரங்கர். ஆனால், தாமதமாகிவிட்டார். மீண்டும் கற்பூரப் படியேற்ற சேவையினை மன்னர் வந்தார் என்பதற்காக நிகழ்த்தவில்லை. 'ஒச்சேட்டிக்கி' அதாவது இனி 'அடுத்த ஆண்டுதான்' என்றதால், மன்னர் அங்கேயே ஓர் ஆண்டு குடும்பத்துடன் தங்கிக் கற்பூரப்படியேற்ற சேவை அடுத்த ஆண்டுகண்டார் என்பது நடைபெற்ற வரலாறு. சான்றாக மன்னர் குடும்பத்துடன் தங்கிய திருச்சுற்றில் பதுமையாய்க் கண்ணாடிப் பேழையினுள் உருவமாகக் குடும்பத்தோடு வணங்கி நிற்கிறார்

*திருக்கார்த்திகை சொக்கப்பனை :* திருக்கார்த்திகை நாளில் அதாவது கார்த்திகைப் பௌர்ணமியில் நம் பெருமாள் காலை 9.15 மணிக்குப் புறப்பட்டுச் சந்தனு மண்டபம் சேர்ந்து திருமஞ்சனம் கண்டு (காலை 11.00 – 1.00) அலங்காரம் அமுது செய்து மண்டபத்திலிருந்து புறப்பட்டுக் கருவறை சேருவார்.

மாலை 6.00 மணிக்கு உத்தம நம்பி ஐயங்கார் சுவாமிகள் இடைவிளக்கு எடுத்தல் நடைபெற்ற பின் அவருக்குப் பிரம்ம ரத மரியாதை (இது கோயில் மரியாதை) நடைபெறுவதுடன் 6.30 மணியுடன் முதல் புறப்பாடு முடிவடைகிறது.

உத்தம நம்பி ஐயங்கார் திருமாளிகைக்கு எழுந்தருளி கைங்கர்ய மரியாதை செய்த பிறகுதான் பெருமாள் புறப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடு நடக்கும். உத்தம நம்பி ஐயங்காரின் ஆட்களை முன்னிட்டுக் கொண்டு நாச்சியார் கோயில் ஸ்தானீகர் நாச்சியார் கோயிலிலும், சாத்தாத வைணவர் மேட்டழகிய சிங்கர் சந்நிதியிலும் திருவிளக்கேற்றி வந்த பிறகு நம்பெருமாள் செங்கழுநீர்ப் பூவினால் அலங்கரிக்கப்பட்ட திருவாசியுள்ள கேடயத்தில் புறப்பட்டுச் சக்கரத் தாழ்வார் சந்நிதி வாயிற் கிழக்கு முகமாக சொக்கப்பானையைப் பார்த்ததாக நிற்பார்.

சொக்கப் பானை கண்டருளுவதற்கு இரவு 8.00 மணிக்குப் புறப்பட்டு 8.30 மணிக்குச் சொக்கப்பானை கண்டு. தாயார் சன்னிதியில் திருவுந்திக்காப்புக் கண்டருளி சந்தனு மண்டபம் சேருவதற்கு இரவு 9.15 மணி ஆகும். இரவு 9.45 மணிக்குச் சந்தனு மண்டபத்தில் ஸ்ரீ முகப்பட்டயம் படித்தல் நடைபெறும்.

*திருக் கார்த்திகை :* நம் பெருமாளுக்கு பானகம், வடை பருப்பு அமுது செய்வித்துக் திருச்சுற்றுக்கான முதலிக்கு பெருமாள் சேவை மரியாதை முதலியவை செய்து வைக்கப்படும். அன்று மதியம் பெருமாள் திருமஞ்சனம் செய்து கொண்டு களைந்த ஈரக் கைலியை உலர்த்தாமல் ஈரமாகவே வைத்திருந்து திருச்சுற்றுக் கார முதலியின் தலையில் கட்டுவது வழக்கம்.

திருச்சுற்றுக்காரார் கொண்டு வந்த பெரிய பந்தத்தை ஸ்தானீகர் வாங்கி தாசநம்பி பந்தத்தில் கொளுத்தி

பெருமாளுக்கெதிரில் மூன்று தடவை சுற்றி விட்டு அவருடைய தலையில் வைப்பார். அவர் அதைக் கொண்டு போய் சொக்கப்பனையைக் கொளுத்துவார். தென்னங்கால் நட்டுச் சுற்றிலும் கூடு போல அமைத்த மூங்கில்களில் கட்டிய பனை ஓலை நன்றாக எரியும்போது நம்பெருமாள் மேல் வெப்பம்படாதபடி வெளியாடையால் மறைப்பர்.

அது எரிந்து கொண்டிருக்கையிலேயே நம் பெருமாள் ஆழ்வான் திருச்சுற்று வழியாகப் புறப்பட்டு எழுந்தருளுவார். நாச்சியார் சந்நிதிக்கு எதிரில் திருவந்திக் காப்பு செய்து கொண்டு நம் பெருமாள் உள்ளே சந்தன மண்டபத்தில் எழுந்தருளியதும் திரை போடப்படும். நாழிகை கேட்டான் வாயில் கதவுகள் சாத்தப் பெறும்.

அதன் பின் 'கைத்தல சேவையுடன்'* சந்தனு மண்டபத்திலிருந்து புறப்பட்டு உள்ளே போய் பூபாலராய சிம்மாசனத்தில் எழுந்தருளுவார். மூலஸ்தானம் சேர்ந்ததும் இரவு 10.30 மணிக்கு ஸ்ரீ வாதூல தேசிகர் பிரம்மரத மரியாதை நடைபெறும். இதைக் குறித்துக் காண்போம்.

### வாதூல தேசிகர் திருமுகப் பட்டயத்தை ஆழ்வாரிடம் சேர்த்துப் பிரம்மரத மரியாதை பெறுதல்

கோயில் கைங்கரிய பரர்கள் வாதூல தேசிகர் இல்லம் சென்று அவரை அழைத்து வருவார்கள். வாதூல தேசிகர் மரபினரான ரங்காச்சார், அண்ணங்கார் இருவரும் ஒரே மரபினர். ஆதலால் சந்நிதி கைங்கர்யத்திலும், மரியாதையிலும் சரி பங்கு வாதூல தேசிகருக்குரிய திருப்பவித்திரப் பிரம்மரதம், திருக்கார்த்திகைப் பிரம்மரதம் இரண்டையும் இவ்விருவரும் ஆண்டுக்கொருவராய்ப் பெற்று வருகின்றனர்.

இருவரில் ஒருவரான வாதூல தேசிகர் மேளதாளம், விருதுகள் முதலியவற்றுடன் புறப்பட்டுக் கருவூல வாயிலில் வந்து எழுந்தருளியிருப்பார்.

---

* பெருமாளை வாகனம், பல்லக்கில் கொண்டு செல்லாது கையில் தூக்கிச் செல்வது கைத்தல சேவையாகும்.

கொரட்டு மணியகாரர் வாதூல தேசிகரிடம் வந்து, சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி அவரைச் சந்நிதிக்குள் எழுந்தருளச் செய்வார். வாதூல தேசிகர் புறப்பட்டு மேலப்படி வழியாகச் சென்று சந்நிதி வாயிலில் உள்ள ஜெய விஜயர்களுக்கு அருகில் கீழ்ப்புறம் போய் நிற்பார். அப்போது மணியகாரரையும், அர்ச்சக முருகேன பெருமாளுடைய திருவுள்ளத்தையும் கேட்டுக் கொண்டு கருவறையில் இருந்தவாறே ஸ்தானீகரால் வாதூல தேசிகர் என்று வெகு எடுப்பாக அருளப்பாடு சாதிக்கப்படும். (உரக்கச் செல்வது)

வாதூல தேசிகர் உள்ளே எழுந்தருளுவார். அங்குக் கைவிளக்கெடுத்துப் பெரிய பெருமாளின் சேவை, தீர்த்தம், சந்தனம், பெருமாளுடைய பீதாம்பரத்தினால் தொங்கு பரிவட்டம் பெருமாளுடைய கழுத்திலிருந்து களைந்து சாதிக்கப்பட்ட பெரிய மாலை ஸ்ரீ சடகோபன் ஆகிய பிரசாதங்களையும், மரியாதைகளையும் பெற்றுக் கொண்டு இருக்கையில், வெளியே மணியக்காரரின் கட்டளையின் பேரில் நட்டு முட்டு வாத்யம் முழங்கும். வாதூல தேசிகர் புறப்பட்டு வெளியே வந்து மேலப்படி வழியாகவே கீழிறங்கிப் பிரதட்சணமாய் சேனை முதலியார் சந்நிதிக்கு வருவார்.

சேனை முதலியார் சந்நிதியில், சேனை முதலியாரிடத்தில் பெருமாளுடைய ஸ்ரீ முகம், உட்சாற்று, வெள்ளை மாலை, சந்தனம், கஸ்தூரித் திருமண காவடி, எண்ணெய் ஆகியன வாதூல தேசிகருடைய திருமாளிகை மனிதர்கள் கொண்டு வந்து வைத்திருப்பர்.

பெருமாளுடைய உட்சாற்றின் நுனியாலும் வெள்ளை மாலையாலும் கட்டப்பட்ட ஸ்ரீமுக ஓலையை வாதூல தேசிகருடைய சீடர் கையில் தூக்கிப் பிடித்துக் கொள்வார். பெருமாளுடைய வட்டிலில் வைக்கப்பட்டிருக்கும் எண்ணெயை ஸ்ரீ பாதம் தாங்குவார் கொண்டு வருவார். சந்தனத்தையும் கஸ்தூரித் திருமணி காப்பையும் எடுத்துக் கொண்டு அனைவரும் சேனை முதலியார் சந்நிதியிலிருந்து புறப்படுவார்கள். திருமுகப் பட்டயம் முதலியவை வாதூல தேசிகருக்கு அருகில் வந்து கொண்டிருக்கும். யாவரும் ஆரியபடாள் வாசலுக்கு வந்த குறிப்பறிந்து நம்மாழ்வார் சந்நிதிக்காரர்கள் ஆழ்வாரைக்

கைத்தலத்தில் எழுந்தருளப் பண்ணி, அதாவது கையில் தாங்கிக் கொண்டு வெளியே வருவார்கள்.

வாதூல தேசிகர் ஸ்ரீ முகத்தோடு கூட ஆரியப்பட்டாள் வாயிலிலிருந்து மேற்கு முகமாகச் சென்று அங்கிருக்கும் ஆழ்வாரிடத்துச் செல்வார்.

ஆழ்வார் பெருமாளுடைய ஸ்ரீ முகத்தை எதிர் கொண்டு வருகையில், அந்தச் சந்நிதியின் முன் மண்டபத்தில் வாதூல தேசிகர் முதலானோர் ஆழ்வாருக்கு அருகே சென்றதும், வாதூல தேசிகருடைய மனிதர் திருமுகப் பட்டயத்தைப் பெருமாளுடைய உட்சாற்றினால் ஆழ்வாருடைய திருமுடியில் கட்டி வெள்ளை மாலையை ஆழ்வாருக்குச் சாதித்துத் திருக்கைகளில் சந்தனத்தை வைத்துத் திருமுக மண்டலத்தில் கஸ்தூரித் திருமண் காப்பையும் சாற்றுவார்.

ஆழ்வாருடைய திருவாராதனக்காரர் முன்னதாகவே ஆழ்வார் சாற்றியுள்ள மாலையைக் களைந்து வாதூல தேசிகருக்குச் சூட்டுவார். பெருமாளுடைய முகம் முதலிய பிரசாதங்களை ஆழ்வாரிடம் சேர்த்த பாக்கியத்தினால் ஆழ்வாருடைய சர்வ ஸ்வதானமாக மாலைப் பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு வாதூல தேசிகர் இல்லம் எழுந்தருளத் திரும்பி விடுவார். வாதூல தேசிகர், சேனை முதலியாருடைய கைங்கரியமான தழையிடுவார் பிரிவுக்கு அதிகாரியாவார் என்பதால் இந்தச் சிறப்பு.

வாதூல தேசிகர் தம்மைச் சுற்றியுள்ளவர்கள் பெருமாளுடைய அனைத்துக் கொத்து பரிஜனங்களுடனும், சகல வித வாத்யங்களோடும், நான்முகன் கோட்டை வாயிலில் காத்திருக்கும் பெருமாளுடைய யானை, பூச்சக்கரக்குடை, மகர தோரணம் என்னும் மகா வைபவத்துடன் இல்லம் எழுந்தருளுகையில், திருமாளிகை வாயிலில் அவருக்கு முத்தாலத்தி எடுப்பார்கள்.

வாதூல தேசிகர் புறப்பட்டுச் சென்றதும், ஆழ்வாரைக் கையிலே தாங்கி அவருடைய சந்நிதிக்கு எழுந்தருளுச் செய்வர். அரையர் தாளத்தோடு இசை பாடிப் படியேற்றம் செய்து வைப்பார். ஆழ்வார் உள்ளே எழுந்தருளியதும், திருமுகப் பட்டயத்தைத் தம்முடைய திருமுடியில் சேர்த்து வைத்த தழையிடுவாரின் பிரதிநிதிக்கு ஆழ்வார்

சேவை சாதித்துத் தாம் சாற்றிக் கொண்டிருக்கும் வெள்ளை மாலையையும் அளிப்பார்.

ஸ்ரீ பாதம் தாங்குவார் கொண்டு வந்த எண்ணெய்க் காவடி ஆழ்வாருடைய கழுத்தில் தடவப்படும். அரையர் உள்ளே எழுந்தருளி மதுர கவியின் 'கண்ணினுள் சிறுத்தாம்பு' பாசுரத்தை மட்டும் தாளத்துடன் பாடுவார். அரையர் எண்ணெய்க் காப்பினை விநியோகம் செய்வார்.

இங்கே இவ்விழா முடிவதற்கும், வாதூல தேசிகர் தம் இல்லம் எழுந்தருள்வதற்கும் சரியாயிருக்கும். இங்கிருந்தவர்கள் யாவரும் வாதூல தேசிகரின் இல்லம் செல்வர். கொரட்டு மணியகாரர், உள்துறை மணியகாரர், ஸ்தானிகர் முதலிய சந்நிதி கைங்கர்யகாரர்கள் முதலானவர்களுக்கு வாதூல தேசிகர் கந்த தாம்பூலாதிகளால் வாழ்த்தியனுப்புவார்.

அன்று காலை விசுவரூபம் மாலை 4.15 மணிக்கு மூலவர் சேவை கிடையாது. சொக்கப்பனை ஏற்றுபவர் விரதம் இருந்து பெருமாளின் திருஆணை பெற்று ஆச்சார அனுபட்டானத்துடன் சொக்கப்பனையை மேல் உச்சியில் சென்று ஏற்றிவிட்டு வேகமாகக் கீழே இறங்கி ஓடி வருவார்.

## மார்கழித் திருவிழாக்கள் (தனுர்மாதம்)

### தனுர்மாத ஆராதனம்

தனுர்மாதம் எனப்படும் மார்கழி மாதத்தில் சூர்யோதயத்துக்கு முன்பே திருப்பள்ளியெழுச்சி திருவாராதனம் நிவேதனம் நடக்கும். திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை அறையர் விண்ணப்பத்தோடு திருவாராதனம் ஆகும். திருவாராதனத்தில் வேத பாராயணத்திற்குப் பதிலாக திருப்பாவையை அரையர் தாளத்துடன் இசைப்பர். பெரிய பெருமாளுடைய பிரசாதம் அர்ச்சகரால் உடையவருக்கு அமுது செய்விக்கப்படும். உடையவரின் திருவாராதன அதிகாரிக்கும் பெருமாள் சேவை அளிப்பர். மார்கழி முழுவதும் பெரிய பெருமாள் சந்நிதியில் அரையர் திருப்பாவை சேவிக்கத் திருவாராதனம் நடைபெறும்.

## திரு அத்யயன வைகுண்ட ஏகாதசித் திருவிழா*

மார்கழி மாதம் முதல் நாள் முதல் மார்கழி மாதம் 20ஆம் நாள் வரை நடக்கும் **திருஅத்யயன வைகுண்ட ஏகாதசி மகோத்சவம்** எனப்படும் மார்கழித் திருநாளே திருவரங்கத்துத் திருவிழாக்களில் தலையாய திருவிழா.

சில ஆண்டுகளில் வரும் திதியைப் பொறுத்து வைகுண்ட ஏகாதசி கார்த்திகை மாதத்திலேயே ஆரம்பமாகிவிடும். மார்கழியில் மற்றத் திருத்தலங்களில் வைகுண்ட ஏகாதசி கொண்டாடுகையில் திருவரங்கத்தில் கார்த்திகையில் வைகுண்ட ஏகாதசி முடிந்து விடுவதும் உண்டு.

மணவாள மாமுனிகள் மிகவும் ஈடுபட்டு இருந்ததாலும், அவர் காலத்திலே விழா ஏற்படுத்தி வைக்கப் பெற்றதாலும் தைத்திருநாள் குறிப்பிட்ட நட்சத்திரத்தில் நடப்பதற்கு வசதியாக 2002இல் பகல் பத்து இரவு பத்து கார்த்திகையில் தொடங்கப் பெற்றன. 10 ஆண்டுகளுக்கு ஒரு முறை இவ்வாறு தொடங்கப் பெறும்.

திருஅத்யயன உற்சவம் என்றால் என்ன? அதன் சிறப்புக்கள் யாவை? என்பதனை விளக்கமாகக் கண்ட பின்னர் விழா நாட்கள் நிகழ்ச்சிகள், சிறப்புக்கள் குறித்துக் காண்போம்.

இவ்விழாவிற்குரிய ஏற்பாடுகள் அக்டோபர் மாதத்தின் இறுதியில், ஒரு தென்னை மரத்தின் அடித்தண்டினை அவ்விழாவிற்குரிய பந்தலில் முதற்கம்பமாக நடுவதிலிருந்து தொடங்கும். அப்பந்தல் அமைத்து முடிகையில் 47 கம்பங்கள் இருக்கும். அப்பந்தல் திருச்சுற்றின் வடகிழக்கு வாயிலில், ஆயிரம் கால் மண்டபத்தின் முன்னே அமைக்கப்படும். இதனால் 953 தூண்கள் உடைய மண்டபம் ஆயிரங்கால்கள் கொண்ட மண்டபமாகிறது.

### பகல் பத்து, இராப்பத்து

கார்த்திகை ரோகிணியிலிருந்து தை உத்திரம் வரை அத்யயன. பருவம். இக்காலத்தில் திவ்யப் பிரபந்தம் வாசிப்பதோ, காலட்சேபம்

* திரு அத்யயனம் பற்றி நூலாசிரியருக்கு லட்சுமிபுரம் திருவரதராஜன் அளித்த தகவல்கள் இவை. திருவரதராஜன் மைய அரசில் சுரங்கப்பணி ஆற்றியவர். வடமொழி, தமிழ்மொழியில் வைணவ இலக்கியங்களில் புலமைமிக்கவர்.

பண்ணுவதோ கூடாது. பிரபந்தப் பாடசாலைகளுக்கு இப்பருவத்தில் வருடாந்திர விடுமுறை.

ஆண்டாளின் திருப்பாவைக்கு மட்டும் விலக்கு. அதுவும் மார்கழி 30 நாள்களில்தான்.

வைகுண்ட ஏகாதசி முதலாகப் பத்து நாள் வேதம் முழுவதும் மொத்தம் ஏழு காண்டங்கள் பாராயணம் பண்ணுவது வழக்கம். இதற்கு அத்யயன உற்சவம் என்று பெயர். இது பல நூற்றாண்டுகளாக நடந்து வந்தது.

திருமங்கை ஆழ்வார் நம் பெருமாளிடம் வடமொழி வேதத்துடன், நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழியையும் செவி சாய்த்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தார்.

ஆழ்வார், திருநகரியிலிருந்து நம்மாழ்வார் விக்ரகத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து, ஆண்டுதோறும் வைகுண்ட ஏகாதசி தொடங்கிப் பத்து நாட்கள் இரவு நேரத்தில் திருவாய் மொழி அனுசந்தானம் செய்யப்பட்டது. பகலில் வேதபாராயணம் நடைபெற்றது.

இவ்வாறாக அத்யயன உற்சவம் என்பது திருஅத்யயன உற்சவம் எனத் திரு எனும் தமிழ்ச் சொல் சேர்ந்ததனால் திருவாய் மொழிபோன்று ஆயிற்று.

பின்னர் ஓரிரு நூற்றாண்டுகளில் மக்கள் திவ்யப் பிரபந்தத்தையே மறந்து விட்டனர். திருஅத்யயன உற்சவமும் நடத்த இயலாது போயிற்று. 'கொல்லும் பாட்டு' என்று தமிழ் விரோதிகள் செய்த பிரச்சாரமே நாலாயிரம் மறையக் காரணமாயிற்று என்பர்.

எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் கி.பி. 784இல் அவதரித்த நாதமுனிகள், யோக தசையில் திவ்யப் பிரபந்தம் முழுமையும் அறிந்தார். திருஅத்யயன உற்சவம் எனத் தமிழ் வேதம் மறுபடியும் நடைபெற வகை செய்தார். நாதமுனிகள் ஆலயத் தலைமையை உய்யக் கொண்டாரிடம் ஒப்படைத்து விட்டுத் திருநாடு புறப்பட்டார்.

திருநகரியிலிருந்து ஆண்டுதோறும் நம்மாழ்வார் எழுந்தருளப் பண்ணுவது சிரமமாக இருந்தபடியால் திருவரங்கத்திலேயே

நம்மாழ்வார் விக்ரகத்தைப் பிரதிட்டை செய்தார். பாஞ்சராத்ர முறை மாறி வைகாநச முறை ஆக்கப்பட்டது.

திவ்யப் பிரபந்தத்துடன் மதுரகவி யாழ்வார் இயற்றிய 'கண்ணி நுண் சிறுத்தாம்பினால் என்று தொடங்கும் பாடலையும் சேர்த்தார். 929இல் அவதரித்த மணக்கால் நம்பி ஆலயத்தை நிர்வகித்து, நாதமுனிகளின் பேரனாகிய ஆளவந்தாரிடம் ஒப்படைத்தார். ஆளவந்தாருக்கு ஸ்ரீபெரும்பூதூரைக் கோடி காட்டுகிறார் பெரிய பெருமாளான ஸ்ரீ ரங்கநாதர். ஆம்! இராமானுசரைக் காட்டினார்.

திருவத்யயன உற்சவம் விரிவடைந்தது.

அ. ஏகாதசி முதல் பத்து நாள்கள் இரவில் திருவாய் மொழி

ஆ. பன்னிரண்டாம் நாள் இரவில் இயற்பா

இ. பிரதமை முதல் தசமி வரை பகலில் முதல் இரண்டு ஆயிரங்கள்

இவ்வாறு திருவாய்மொழி இயற்பா, சேர்த்து இராப்பத்து எனவும், முதல் இரண்டாயிரம் பகல் பத்து எனவும் ஆயிற்று.

அதுவரையில் திவ்யப்பிரபந்தத்தில் திருவரங்கத்து அமுதனாரின் இராமானுஜ நூற்றந்தாதி சேர்க்கப்படவில்லை.

உடையவரின் சீடர் திருவரங்கத்து அமுதனார் 108 பாக்களைக் கொண்ட இராமானுஜர் நூற்றந்தாதியை இயற்றினார். இதனைக் கேட்ட உடையவர், பிற சீடர்களின் விருப்பப்படி திவ்யப் பிரபந்தத்துடன் இதனைச் சேர்க்க இசைவளித்தார். இது இயற்பாவின் கடைசியில் சேர்ந்துவரும்.

ஆனால் தென்கலை மரபினர் இராமானுஜர் நூற்றந்தாதியை நாலாயிரத்தில் சேர்ப்பதில்லை. ஆனால், சுவாமி தேசிகன் இதனைச் சேர்த்துப் பிரபந்த சாரத்தில் சொல்லியிருக்கிறார்.

தேசகரின் குமாரரும், பரசீடருமான நைனாசாரியார் எனும் வரதாசாரியர் காலத்தில் பதின் மூன்றாம் நாள் தேசிகப் பிரபந்தம் பாராயணம் செய்யும் வழக்கம் தொடங்கியது. தேசிகரின் குமாரர் வரதாசாரியர், பரகால மட நிறுவனர் பேரருளான ஜீயர் இருவரும்

தேசிகன் விஷயமாகச் செய்த இருபது பாடல்கள் கொண்ட பிள்ளையந்தாதி என்னும் தொகுப்பையும் தேசிகப் பிரபந்தத்தில் சேர்க்க வேண்டுமென்று முடிவு செய்தனர்.

## நாலாயிரப் பிரபந்தத்தின் பிரிவுகள்

மொத்தம் 24 பிரபந்தங்களாக வகுக்கப்பட்டது.

| | | தென்கலை மரபு | வடகலை மரபு |
|---|---|---|---|
| 1. | திருப்பல்லாண்டு | 2 | |
| 2. | பெரியாழ்வார் திருமொழி | 471 | 473 |
| 3. | திருப்பாவை | 30 | 30 |
| 4. | நாச்சியார் திருமொழி | 143 | 143 |
| 5. | பெருமாள் திருமொழி | 105 | 105 |
| 6. | திருச்சந்த விருத்தம் | 120 | 120 |
| 7. | திருமாலை | 45 | 45 |
| 8. | திருப்பள்ளியெழுச்சி | 10 | 10 |
| 9. | அமலனாதி பிரான் | 10 | 10 |
| 10. | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 | 11 |
| 11. | பெரிய திருமொழி | 1084 | 1084 |
| 12. | திருக்குறுந்தாண்டகம் | 20 | 20 |
| 13. | திருநெடுந்தாண்டகம் | 30 | 30 |
| 14. | திருவாய்மொழி | 1102 | 1102 |
| 15. | முதல் திருவந்தாதி | 100 | 100 |
| 16. | இரண்டாம் திருவந்தாதி | 100 | 100 |
| 17. | மூன்றாம் திருவந்தாதி | 100 | 100 |
| 18. | நான்முகன் திருவந்தாதி | 96 | 96 |
| 19. | திருவிருத்தம் | 100 | 100 |
| 20. | திருவாசிரியம் | 7 | 7 |

| | | | |
|---|---|---|---|
| 21. | பெரிய திருவந்தாதி | 87 | 87 |
| 22. | திருவெழு கூற்றிருக்கை | 1 | 1 |
| 23. | சிறிய திருமடல் | 77.5 | 40 |
| 24. | பெரிய திருமடல் | 148.5 | 78 |
| 25, | இராமானுஜ நூற்றந்தாதி | | 108 |
| | | 4000 | 1000 |

இராமானுஜ நூற்றந்தாதி சேர்க்கப்படாததால் மடல் பாட்டுக்களில் ஒவ்வொரு வரியையும் ஒவ்வொரு பாட்டாக எண்ணித் தென் கலையார் (ஆனால் முதல் 5 வரிகளையும் மட்டும் சேர்த்தே கூறுவர்) 77.5 ; 148.5 பாட்டுக்கள் என்ற கணக்கிட்டு மொத்த எண் 4000 என்றார்கள்.

திருவரங்கத்துத் திருக்கோயில் தென்கலை மரபினதாதலால், கார்த்திகையில் அல்லது மார்கழியில் கருவறையில் இரவு ஏழு மணிக்குத் திருநெடுந்தாண்டகம் தொடங்கும். சந்தனு மண்டபத்தில் திருநெடுந்தாண்டகம் அபிநயமும், வியாக்கியானமும் இரவு 7.45 மணி முதல் இரவு 9 மணி வரை நடைபெற்ற பின் இரவு 9.30 மணிக்குத் திருப்பணியாரம் அமுது செய்தல், அதன்பின் இரவு பத்து மணிவரை கோஷ்டியான பின் இரவு 10.00 மணி முதல் 10.30 மணி வரை திருவாராதனம். பின் திருக்கொட்டாரத்தில் இரவு 10.30 மணி முதல் இரவு 11.00 மணி வரை சிறப்பலங்காரம். இரவு 11.00 மணி முதல் 11.30 வரை தீர்த்த கோஷ்டி. இந்த நாளில் மாலை 4.30 மணிக்கு மேல் கருவறை சேவை இராது.

## திருநெடுந்தாண்டகம் பாடுதல்

ஸ்ரீ பராசர பட்டர் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்த மாதவாசாரியர் என்னும் வேதாந்தியைத் திருநெடுந்தாண்டகத்தை கொண்டு திருத்திப் பணி கொண்டு அவருக்கு நஞ்சீயர் என்னும் திருநாமம் சாத்தித் தம் சீடராய் ஆக்கிக் கொண்ட வைபவத்தைக் கேட்டருளி அன்று முதல் பகல் பத்துக்கு முதல் நாள் திருநெடுந்தாண்டகம் கேட்கத் திருவுள்ளமானார். இது

திருவரங்கத்துக்கே உரிய நிகழ்ச்சி. மற்றைய திவ்ய தேசங்களில் திருநெடுந்தாண்டகத்திற்கென்று தனி விழா கிடையாது.

அரையர்கள் திருமாளிகையிலிருந்து சமயம் சொன்ன பிறகு எழுந்தருளிப் பார்த்தசாரதி சந்நிதியில் எழுந்தருளியிருக்கும் திருவரங்கப் பெருமாளரையர் எம்பெருமானார். நம்மாழ்வார் சந்நிதிகளுக்குச் சென்ற பிறகு சந்தனு மண்டபத்தில் அரையர்கள் எழுந்தருளியிருப்பர்.

ஸ்தலத்தார்களும், தீர்த்த மரியாதைக்கு உரியவர்களும் சந்தனு மண்டபத்தில் எழுந்தருளியிருப்பார்கள். அரையர் சுவாமிகளை மணியகாரர் பெரிய பெருமாள் சந்நிதிகளுக்கு மரியாதையுடன் அழைத்துச் சென்று அங்கு அருளப்பாடு சாதித்தபின், தொங்கு பரிவட்டம் கைலி சிரசில் அணிவித்திடுவார். அதன் பின் அரையர்கள் குலசேகரன் படி அருகில் திருநெடுந்தாண்டக முதல் பாசுரம் பாடுவர். மறுநாள் முதல் பகல் பத்து தொடக்கம்.

### பகல் பத்து

வைகுண்ட ஏகாதசி விழா மார்கழி மாத சுக்கில பட்ச ஏகாதசி தினத்தை மையமாகக் கொண்டு நடைபெறுகிறது. இது 21 நாள்கள் நடைபெறும் விழாவாகும். பகல் பத்து, ராப்பத்து என இருபது நாள்கள் நடைபெறும் இவ்விழா ஏகாதசிக்குப் பத்து நாள்கள் முன்னர் தொடங்குகிறது.

பகல் பத்து உற்சவ நாள்களில் பெருமாள் தினமும் ஒரு சிறப்பு அலங்காரத்தோடு அதிகாலையில் புறப்பட்டு இரண்டாம் திருச்சுற்றில் உள்ள அருச்சுண மண்டபத்தில் எழுந்தருளி இருப்பார். அங்கு அரையர்கள் திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள திருமொழிப் பாசுரங்களைப் பெருமாள் முன்னர் அபிநயிக்கின்றனர். பகல் பத்துத் திருவிழாவின் ஒன்பதாம் நாள் நம்பெருமாள் நாச்சியார் திருக்கோலம் எனப்படும் மோகினி அலங்காரத்தில் எழுந்தருளிப் பக்தர்களுக்குச் சேவை சாதிக்கிறார்.

பகல்பத்து முதல் நாள் திருப்பள்ளியெழுச்சி அரையர் சேவை திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை பாசுரங்கள். மாதம் முழுவதும் பகல் பத்து முதல் திருநாளில் கருவறையில் பல்லாண்டு தொடக்கமாக நம்பெருமாள் புறப்பட்டுத் துலுக்க நாச்சியார் படியேற்ற சேவையாகி பகல் பத்து மண்டபம் எழுந்தருளி தளிகை செய்த தீர்த்த பிரசாதங்கள் நம்மாழ்வார்கள்அனுப்பிவிட்டு ராத்திரி உள்ளிருந்து வியாகயானங்கள் கேட்டு திருப் பணியாரம் அமுது செய்து திருபாராசனம் காண்பர்.

பகல் பத்து இரண்டாம் திருநாள் அரையர் சேவை முதலாயிரம்.

பகல் பத்து மூன்றாம் திருநாள் அரையர் சேவை முதலாயிரம், அரையர் ஸ்ரீசடகோபன் சாதித்தல் .

பகல் பத்து நான்காம் திருநாள் அரையர் சேவை முதலாயிரம் இரண்டாவது சேவை கம்சவதம்.

பகல் பத்து ஐந்தாம் திருநாள் அரையர் சேவை முதலாயிரம் அரையர் திருவாராதனம், நம்பெருமாள்

பகல் பத்து ஆறாம் திருநாள் அரையர் சேவை பெரிய திருமொழி.

பகல் பத்து ஏழாம் திருநாள் அரையர் சேவை பெரிய திருமொழி இரண்டாவது சேவை வாமனாவதாரம்.

பகல் பத்து எட்டாம் திருநாள் அரையர் சேவை பெரிய திருமொழி இரண்டாவது சேவை அம்ருதசேனம்

பகல் பத்து ஒன்பதாம் திருநாள் அரையர் சேவை பெரிய திருமொழி இரண்டாவது சேவை முத்துக்குழி – அரையர் தீர்த்தம் ஸ்ரீ சடகோபம் சாதித்தல்.

பகல் பத்து – பத்தாம் திருநாள் – நாச்சியார் திருக்கோலம் கொண்டு கருட மண்டபம் புறப்பட்டு ஆழ்வார்களுக்குகனகலி வழங்குவார். அரையர் சேவை பெரிய திருமொழி இரண்டாவது சேவை இராவணவதம் திருமொழி சாற்றுமறை அரையர் தீர்த்தம் ஸ்ரீ சடகோபம் சாதித்தல் இரவு கருட மண்டபத்தில் ஆழ்வார் ஆசாரியார்கள் அரையர்

சுக்ரவார பண்டாரி மரியாதை கருவறையில் பிரம்மரதம் அரையர் சுவாமிகளால் கைத்தாளத்துடன் திருவாய் மொழி சாற்று முறை வாழிமங்கலம் பாடிய பிறகு அரையருக்குப் பிரம்ம ரதம். இவ்வாறு பகல் பத்து நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

இந்தப் பத்து நாள்களும் நம்பெருமாள் கருவறையிலிருந்து புறப்பட்டு அருச்சுண மண்டபம் சேர்ந்து அரையர் சேவை, திருப்பாவாடை கோஷ்டி, வெளிச்சம்பா அமுது செய்து கருவறை திரும்புதல் நடைபெறுகிறது. கடைசிப் பத்தாம் நாள் பெருமாள் கருவறையிலிருந்து புறப்படும் கோலம் நாச்சியார் திருக்கோலம் ஆகும்.

இயற்பா : 11ஆம் நாள் அரையர் சுவாமிகளே இயற்பா தொடங்கிச் சந்தனு மண்டபத்திலுள்ள ஆழ்வார் கோஷ்டியில் இயற்பா பாசுரங்களை சேவிப்பார். திருவாராதனம், தளிகை முதலியவை முடிந்ததும் 12ஆம் நாள் உதயம் அரையர்களால் கருவறை சந்நிதி வாயில் இரண்டிலும் இயற்பா சாற்றுமுறை, இயல் சாற்றுமுறை விண்ணப்பிப்பார். திருவரங்கத்து அமுதனாருக்கு உரிய பிரம்மரத மரியாதையை அரையர்கள் பெற்றுக் கொள்வதில்லை.

## இராப் பத்து அரையர் சேவை

ஒரு சமயம் ஆண்டவனின் முன் தேவகானம் உயர்ந்தா, மானிட கானம் உயர்ந்ததா எனும் சர்ச்சை ஏற்பட்டுத் தேவ கானமே உயர்ந்தது எனும் தீர்ப்புக் கிடைத்தது. அந்த தேவகானத்தை மானிட உலகில் பாட நியமிக்கப்பட்டவர்கள் அரையர்கள். அரையர் என்றால் இசைகளுக்கெல்லாம் அரசர் என்று சொல்வர்.

கிட்டத்தட்ட 1400 ஆண்டுகளாக வழி வழியாக இந்தப் பழம் பெரும் கலையைக் கட்டிக் காத்து வருகின்றார்கள் இவர்கள். தன்னுடைய கிரீடத்தையும், மாலையையும், பட்டுப் பீதாம்பரத்தையும் கழற்றி ஸ்ரீ மன்நாதமுனிகளிடம் கொடுத்து இக்கலையினைப் பெருமாள் தொடங்கி வைத்ததாகக் கூறுவர்.

அரையர்கள் நாலாயிரத் திவ்யப் பிரபந்தப் பாடல்களை இசையோடு கலந்து பாடி அதற்குரிய பொருளை விரிவாக

எடுத்துரைத்து வியாக்யானம் செய்து, பிறகு அதனைத் தெய்விக முத்திரைகளுடன் ஆடிக்காட்டுவர்.

இந்தப் பரம்பரை குறுகிப் போய் இப்போது ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிப்புத்தூர், ஆழ்வார் திருநகரி என்னும் மூன்று திருத்தலங்களில் மட்டுமே அரையர்கள் உள்ளனர்.

பகல் பத்து, இராப்பத்துத் திருவிழாக்கள் தமிழ்த்திருவிழாக்கள், தமிழின் பெருமை பேசும் திருவிழாக்கள் எனலாம். நாலாயிரத் திவ்யப் பிரபந்த விழாக்களாகவும் அரையர் அபிநயத்தில் மலர்கின்றன.

## பகல் பத்து அரையர் சேவை நடைபெறும் விதம்.

திருநெடுந்தாண்டகம் : மின்னுருவாய் பாசுரம் அநியம், வியாக்யானம், தம்பிரான் படி வியாக்யானம்

முதல் திருநாள் : 'திருப்பல்லாண்டு' அபிநயம் வியாக்யானம் பெரியாழ்வார் திருமொழி – 190 பாசுரங்கள் முதல் ஆயிரம்

இரண்டாம் திருநாள் : 1. ஆற்றிலிருந்து 2. தன்னோராயிரம் பாசுரங்கள் அபிநயம், வியாக்யானம் பெரியாழ்வார் திருமொழி 240 பாசுரங்கள்

மூன்றாம் திருநாள் : "சென்னியோங்கு" பாசுரம் அபிநயம், வியாக்யானம், "திருப்பொலிந்த சேவடி" எனும் ஏழாம் பாசுரம் வரை அபிநயம் – அரையர் ஸ்ரீ சடகோபம் சாதித்தல். மார்கழித் திங்கள் திருப்பாவை பாசுரம் அபிநயம், வியாக்யானம். நாச்சியார் திருமொழி – 120 பாசுரங்கள்

நான்காம் திருநாள் : 1. கண்ணனென்னும் கருந்தெய்வம், 2. இருள்விரிய பாசுரங்கள் அபிநயம், வியாக்யானம், பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், இரண்டாம் அரையர் சேவை. கம்ச வதம்.

ஐந்தாம் திருநாள் : திருமாலை முதல் பாசுரம் அபிநயம் வியாக்கியானம், ஆறாம் பாசுரம் அரங்கனாருக்கு ஆட்செய்யாதே வரை அபிநயம். அரையர் திருவாராதனம் – திருமாலை, திருப்பள்ளி எழுச்சி பாசுரங்கள் – "அமலனாதிபிரான்" அபிநயம், வியாக்கியானம்.

ஆறாம் திருநாள் : கண்ணிநுண் சிறுத்தாம்பு – பாசுரம் பெரிய திருமொழி – வாடினேன் வாடி அபிநயம், வியாக்யானம். பெரிய திருமொழி 250 பாசுரங்கள்.

ஏழாம் திருநாள் : "தூவிரிய" – பாசுரம் அபிநயம் வியாக்யானம். பெரிய திருமொழி 270 பாசுரங்கள் – இரண்டாம் அரையர் சேவை வாமனாவதாரம்.

எட்டாம் திருநாள் : "பண்டைநான் மறை" பாசுரம் அபிநயம், வியாக்கியானம் பெரிய திருமொழி 250 பாசுரங்கள் – இரண்டாம் அரையர் சேவை. அமிர்தமதனம்.

ஒன்பதாம் திருநாள் : "தொள்ளியீர்" பாசுரம் அபிநயம் வியாக்யானம் பெரிய திருமொழி 200 பாசுரம் இரண்டாம் அரையர் சேவை. முத்துக்குறி – "மின்னுருவாய்" பாசுரம், அபிநயம் வியாக்கியானம் – முத்துக்குறி வியாக்கியானம் அபிநயம்

பத்தாம் திருநாள் : "இரக்கமின்றி" பாசுரம் அபிநயம் வியாக்கியானம், பெரிய திருமொழி 170 பாசுரங்கள். திருக்குறுந்தாண்டகம் 20, திருநெடுந் தாண்டகம் 30 பாசுரங்கள். இரண்டாம் அரையர் சேவை 'இராவணவதம்' திருமொழி சாற்றுமறை – அரையர் தீர்த்தம் ஸ்ரீ சடகோபம் சாதித்தல்

வைகுண்ட ஏகாதசி அன்று அதிகாலை 4.00 மணிக்குப் பரமபத வாசலுக்கு வருகிறார். லக்னப்படி பரமபத வாசல் திறக்கப் பெற்றுத் திருக்கொட்டகை பிரவேசம் செய்து சாதரா மரியாதை ஆன பின் திருமாமணி மண்டபம் சேருகையில் காலை 7.30 மணி ஆகும்.

அலங்காரம் அமுது செய்யத்திரை போடப்பட்டு அன்று அரையர் சேவை, திருப்பாவாடை கோஷ்டி, வெளிச்சம்பா அமுது முதலியன கண்டபின் திருமாமணி மண்டபத்திலிருந்து புறப்பட்டு மறுநாள் அதிகாலை 1.30 மணி அளவில் வீணை வாத்தியத்துடன் கருவறை சேருகிறார். பொலியன் சிறப்புப் பெருமாள் திருமாமணி மண்டபம் எழுந்தருளின பிறகு ஆதி வண்சடகோப மடத்திலிருந்து யானை மேல் சிறப்பு வந்த பிறகு மற்றைய காரியங்கள்.

விழாவின் முதன்மை நிகழ்ச்சியான வைகுண்ட ஏகாதசியன்று அதிகாலை நம்பெருமாள் ரத்தின அங்கி உள்ளிட்ட விலை மதிப்பற்ற திருவாபரணங்கள் அணிந்து மூன்றாம் திருச்சுற்றுப் பரம பதவாயில் வழி வெளியே திருமாமணி மண்டபம் என்னும் ஆயிரக்கால் மண்டபத்தில் எழுந்தருளுகிறார்.

அன்றிலிருந்து இராப்பத்து எனப்படும் திருவாய் மொழித் திருநாள் துவங்குகிறது.

இராப்பத்துப் பத்து நாள்களும் பகலில் நம்பெருமாள் புறப்பட்டு பரமபத வாசல் வழியே ஆயிரக்கால் மண்டபத்திற்கு வருகிறார். அங்கு அரையர்கள் நம்மாழ்வாரின் **"தமிழ் வேதம்"** என்றும் **"வேத சாரம்"** என்றும் சிறப்பித்துச் சொல்லப்படும் திருவாய் மொழிப் பாசுரங்களைப் பெருமாள் திருமுன்னர் அபிநயத்தோடு பாடுகின்றனர்.

இராப்பத்து விழாவில் வேடுபறி, நம்மாழ்வாரின் நாச்சியார் கோலம், திருக் கைத்தலச் சேவை ஆகியன குறிப்பிடத்தக்கன. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக ஆகமவிதிகளின் படியும், நீண்ட கால பழக்க வழக்கங்களையும், மரபுகளையும் ஒட்டிப் பரமபத வாசல் கதவுகள் திறக்கப்படும்.

வேதங்களின் ஒரு பகுதியான அச்சித்திரம் கிருஷ்ண, யஜூர் வேதம் ஏழு காண்டங்கள் ஓதப்பட்டன. இருபது ஆண்டுகளாக வேத பாராயணம் ஓதுதல் நடைபெறவில்லை.

விஜயநகர மன்னர் அச்சுதராயர் காலத்துக் கல்வெட்டுகள் **36/1938–39, 324/1951–52** ஆகியன சான்றுகளாகத் திகழ்கின்றன. ஸ்ரீரங்க அத்யயனோத்சவம் என்னும் நூலில் வேத பாராயணம் நடைபெற்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நாளும் 8 பிரசனங்கள் என்ற அளவில் கிருஷ்ண யஜூர் வேதத்தில் அமைந்துள்ள 80 பிரசனங்களை ஓதியுள்ளார். எட்டாம் நாள் கீழ்ப்படியிலே வேதபாராயண சாற்றுமுறை நடைபெற வேண்டும் என்று விதித்துள்ளார். இப்போது கிருஷ்ண யஜூர் வேதம்

ஓதப்படவில்லை. பரமபத வாசல் கதவுகள் திறக்கப்படும் முன் ரிக், சுக்ல, யஜூர், கிருஷ்ண யஜூர் வேதம் முழுமையாக ஓதப்படும்.

இராப்பத்தில் ஏழாம் நாளே மிகவும் சிறப்புடைய நாள்களிலும் ஒன்று. நம்மாழ்வார் திருக் கைத்தல சேவை, பராங்குசராகிய திருக்கோலம் காணலாம். கங்குலும் பகலும் என்னும் பாசுரத்தில் ஆழ்வாருக்குத் தம்மிடமுண்டான நாயகிகா பாவத்துக்காகப் பெருமாள் திருமாமணி மண்டபத்தில் தோளுக்கினியானை விட்டிறங்கி, திருக்கைத்தலத்தில் நாச்சியார் திருக்கோலத்தில் எழுந்தருளி யிருக்கும் ஆழ்வாருக்கு சேவை சாதிப்பார்.

எட்டாம் திருநாள் திருமங்கை மன்னர் வேடுபறி விழாவிற்கு நம் பெருமாள் சந்தனு மண்டபத்திலிருந்து குதிரை வாகனத்தில் புறப்பட்டு வையாளி கண்டு அதிகாலை 12.30 மணிக்கே கருவறை திரும்புகிறார்.

அப்போது வழிப்பறியாக வந்து திருமங்கை எல்லாச் சொத்துக்களையும் கொள்ளையடிப்பார்.

அவரை அருகே விருவித்து ஞானத்தை உண்டாக்கி 'வாடினேன் வாழ' பாசுரம் பாடுவித்து அவரை அனுக்கிரகிருக்கும் வைபவம் நடக்கும்.

இன்று திருமங்கை ஆழ்வாருக்கு மட்டுமே அருளப்பாடு மரியாதை பிற ஆழ்வார்களுக்கு அருளப்பாடு கிடையாது.

பத்தாம் நாள் தீர்த்த வாரிக்குக் காலையில் புறப்பட்டு சந்திர புஷ்கரணியில் தீர்த்தவாரி கண்டருளத் திருப்பணியாரம் அமுது செய்த பிறகு அரையர் சேவை முதலியன இரவு பதினோரு மணி வரை நடைபெறுகின்றன. இன்று பன்னிரண்டாயிரம் திருப்பணியாரங்கள் அமுது செய்விக்கப்படுகின்றன.

அன்று இரவு முழுவதும் அரையர் சேவை, திருப்பா வாடை கோஷ்டி, வெள்ளிச்சம்பா அமுது முதலியன முடிய அதிகாலை ஆகிவிடும்.

அதிகாலை 6.00 மணி அளவில் நம்மாழ்வார் மோட்சம், திருத்துழாய் விநியோகம் முதலியன நடைபெரும். ஆழ்வார்களின் திருப்படி மங்களும் ஆச்சாரியர்களின் திருப் படிமங்களும் ஒன்றன் பின்

ஒன்றாகச் சுவாமி அருகே அவர் எழுந்தருளியுள்ள மண்டபத்தின் நடுவில் கொண்டு வந்து வைப்பர்.

நம்மாழ்வார் 11ஆம் நாளில் மோட்சம் செல்லும் நாளில் துளசியணிந்து எளிமையாகக் காட்சி தருவார். சுவாமியின் பாதத்தில் நம்மாழ்வாரை எழுந்தருளச் செய்து அவரைத் துளசி இதழ்களால் கொஞ்சம் கொஞ்சமாக மூடுவார்கள்.

## ஆழ்வார் திருவடி தொழுதல்

பதினோராம் நாள் உதயத்தில் அரையர்களால் சூழ் விசும்பணி முகில் (திருவாய்மொழி 10–9) அனுசந்தானத்தோடு ஆழ்வார் அர்ச்சகர்களால் நம்பெருமாள் திருவடியில் சேர்க்கப்படுவார். திருவாய்மொழி சாற்றுமுறை, ஆழ்வார் திருமேனியில் துளசி சேர்க்கப்படும். திருவாய்மொழி அனுசாந்தனம் முடிந்ததும் 'கண்ணினுள் சிறுத்தாம்பு' அனுசந்தானத்தோடு ஆழ்வாரை கோஷ்டியில் எழுந்தருளப் பண்ணி கோஷ்டிகாரியங்கள் பகல் பத்து, இராப்பத்துத் திருநாட்களில் ஆழ்வார் ஆசாரியர்கள் தத்தம் சந்நிதிகளுக்கு எழுந்தருளும் போது அத்யாபக சுவாமிகளால் ஸ்தோத்திரம் பாட கோஷ்டி நிர்வகிக்கப்படும்.

இராப்பத்துத் திருநாட்களில் முதல் நாள் தவிர்த்து மற்றைய நாட்களில் மணல் வெளியில் நம் பெருமாள் எழுந்தருளும் போது ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவ கோஷ்டி, ஏழாம் நாளன்று ஸ்ரீ குணரத்ன கோச கோஷ்டி நடைபெறும். இதன் பொருள் நம்மாழ்வார் வைகுண்டம் சேருதல் ஆகும்.

அப்போது மதுர கவியாழ்வார் அருளிச் செய்த கண்ணிநுண் சிறுத்தாம்பினால் எனும் புகழ் பெற்ற பாசுரத்தைச் சேவிப்பார்கள்.

## வைகுண்ட ஏகாதசி

வைகுண்ட ஏகாதசி நாள் காலை உற்சவர் இரத்தின அங்கியில் தோன்ற, மூலவர் முத்தங்கியுடன் காட்சி தருவார். முத்தங்கி சேவை நுழைவுக் கட்டணம் செலுத்தித்தான் தரிசிக்க வேண்டும். ஆனால் ஆறு நாள்களுக்கு முத்தங்கி சேவையைத் தரிசிக்கலாம். ஏழாம் நாள்

கைத்தல சேவையில் பெருமாளை ஸ்ரீ பட்டர் தம் இரு கைகளிலும் வைத்துப் பக்தர்களுக்குக் காட்டுவார்.

குதிரை வாகனத்தில் இப்போதும் வையாளி நடைபெறும். திருமங்கை ஆழ்வார் கொள்ளை செய்து கோவில் மதிலைக் கட்டியதன் நினைவாக நடைபெறும் விழா இது.

சிறிய குழந்தைகள் பத்துப் பேர் கையில் தடியுடன் ஒவென்ற இரைச்சலுடன் ஓடி வருவர்.

தம்பதிகளாக வரும் நம் பெருமாளின் ஆடை அணிகலன்களைப் பறித்துக் கொண்ட திருமங்கை நம்பெருமாள் காலில் அணிந்திருந்த மெட்டியைக் கழற்ற இயலாமல் பல்லால் அவருடைய கட்டை விரலைக் கடித்த போது ஞானம் வந்து நம் பெருமாளை அடையாளங் காணும் விழா இது.

இப்படித் திரு அத்யயனத் திருவிழாவின் 21 நாட்களிலும் சுவாமி தம்மைவிடத் தம் அடியவர்களுக்கே முதன்மை அளிக்கிறார். இரவு எழுந்தருளும் போது மல்லாரி வாத்தியமும் கோயில் வீணை மிரசுபாதியதை உடையவர்களால் வாசிக்கப்படும். வீணை வாத்யம் கேட்டு உள்ளே எழுந்தருளுவார்.

## இராப்பத்து அரையர் சேவை

முதல் திருநாள் : வைகுண்ட ஏகாதசி – "உயர்வற" பாசுரம். அபிநயம் வியாக்கியானம் முதல் பத்து நூறு பாசுரங்கள்.

இரண்டாம் திருநாள் : "கிளரொளியிளமை" – பாசுரம் அபிநயம். வியாக்கியானம் – 2ஆம் பத்து 100 பாசுரங்கள்

மூன்றாம் திருநாள் : "ஒழிவில் காலம்" – பாசுரம் அபிநயம் வியாக்கியானம், 3ஆம் பத்து 100 பாசுரங்கள்

நான்காம் திருநாள் : "ஒன்றுந்தேவும்" – பாசுரம் அபிநயம் வியாக்கியானம் நான்காம் பத்து 100 பாசுரங்கள்

ஐந்தாம் திருநாள் : "ஆரவமுதே" – பாசுரம் அபிநயம் வியாக்கியானம் ஐந்தாம் பத்து 100 பாசுரங்கள்

ஆறாம் திருநாள் : "உலகம் உண்ட பெருவாயா" பாசுரம் அபிநயம் வியாக்கியானம் ஆறாம்பத்து 100 பாசுரங்கள்

ஏழாம் திருநாள் : "நம் பெருமாள் திருக்கைத்தல சேவை" கங்குலும் பகலும் பாசுரம் அபிநயம் வியாக்கியானம் இரணியவதம் வியாக்யானம் அரையர் தீர்த்தம் சடகோபம் சாதித்தல் – ஏழாம் பத்து 100 பாசுரங்கள்

எட்டாம் திருநாள் : திருமங்கை மன்னன் வேடுபறி "நெடுமாற்கடினம்" பாசுரம் அபிநயம் வியாக்கியானம் 8ஆம் பத்து 100 பாசுரங்கள்

ஒன்பதாம் திருநாள் : "மாலை நண்ணி" பாசுரம் அபிநயம் வியாக்கியானங்கள் ஒன்பதாம் பத்து 100 பாசுரங்கள்

பத்தாம் திருநாள் : "தாளதாமரை" பாசுரம் அபிநயம் வியாக்கியானம் பத்தாம் பத்து 100 பாசுரங்கள். நம்மாழ்வார் மோட்சம் திருவாய்மொழி சாற்றுமறை.

வைகுண்ட ஏகாதசி பற்றிய சில குறிப்புகளை இங்கே காண்போம். வைகுண்ட ஏகாதசி நாளில் பெருமான் சொர்க்கவாசல் வழியே வருகையில் அவரோடு வருகை புரிந்ததால் நெரிசல் தான்.

இராப்பத்துத் திருநாட்களில் நீண்ட கால வழக்கப்படி நம்பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து புறப்பாடாகும் கால்மணி நேரத்திற்கு முன்னதாக ஆரிய படாள் வாசல் திருக்காப்பிடப்பட்டு நம் பெருமாள் பரமபத வாசல் வழியாகத் தென்புறம் எழுந்தருளியவுடன் திறக்கப்படும்.

வைகுண்ட ஏகாதசி அன்று அதிகாலை பரமபத வாசல், சந்தனு மண்டபம், முத்தங்கி சேவை முதலியவைகளைத் தரிசனம் செய்ய நபர் ஒருவருக்கு 125/– கட்டணம் செலுத்த வேண்டும்.

கட்டணம் செலுத்தினாலும் இந்தச் சீட்டுகள் குறிப்பிட்ட அளவிற்கு மேல் கொடுக்கப்படுவதில்லை யாகையால் சாமானிய மனிதர்கள் பெறுவது கடினம்தான்.

125 ரூபாய் செலுத்திச் சீட்டு வாங்குபவர்கள் ஒரு மணியிலிருந்து இரண்டு மணிக்குள் சந்தனு மண்டபம் வந்து சேர வேண்டும். அவ்வாறு வந்தவர்கள் பெருமாள் ஏகாதசி சேவை ஆகும் வரை வெளியே போக இயலாது.

வைகுண்ட ஏகாதசி நாளில் நம் பெருமாளுடன் பரமபத வாசல் நுழைவிற்கு (காலை 1.00 மணி முதல் காலை 3.30 மணி வரை) ஆரிய பட்டாள் வாயிலுக்குள் நுழைய நபர் ஒருவருக்கு ரூ. 10 சீட்டு வழங்குகின்றனர். மேற்படி சீட்டு வாங்குபவர்களை நாழி கேட்டான் வாசலுக்குள் அனுமதிக்காமல் வாசல் வரையே அனுமதிக்கின்றனர். உபயதாரர்கள் மட்டுமே அனுமதிச் சீட்டின் மேல் நாழி கேட்டான் வாசலுக்கு அனுமதிக்கப்படுவார்கள். மேலும் இலவச அனுமதி சீட்டுப் பெற்றிருப்பவர்களை நாழி கேட்டான் வாயிலுக்குள் அனுமதிப்பதில்லை.

கிளி மண்டபத்திலிருந்து புறப்பாடு சேவித்துப் பிறகு முத்தங்கி சேவை சேவிக்க ரூ. 75 நுழைவுச் சீட்டு பெற்றுக் கொள்ளலாம். காலை 1.00 மணியிலிருந்து அதிகாலை 3.00 மணிக்குள் கிளி மண்டபம் வந்து சேர வேண்டும். வைகுண்ட ஏகாதசி நாளில் திருமாமணி மண்டபத்தில் தரிசிக்கச் சிறப்புக் கட்டணம் உண்டு. கூட்ட நெருக்கடி மிக அதிகம்.

பகல் பத்துத் திருவிழாவில் பெருமாள் புறப்பாட்டின் போது சந்தனு மண்டபத்திலிருந்து சிம்மகதி சேவிக்கவும், கருவறை சேவிக்கவும் கட்டணம் உண்டு.

## மோகினி அலங்காரம்

காலை 6.00 மணி முதல் மாலை 4.30 மணி வரை நுழைவுக் கட்டணம், கருவறை தரிசனம் உள்பட ரூ. 5.00

அருச்சுண மண்டபத்தில் பொதுவழி, சிறப்பு வழி என மோகினி அலங்காரம் சேவிக்க இருவழிகள் ஏற்பாடு செய்து, சிறப்பு வழியில் மோகினி அலங்காரம் சேவிக்கவும் நுழைவுச் சீட்டு வழங்குவர்.

## முத்தங்கி சேவை

முத்தங்கி சேவை நாள்களில் ஒழுங்குபடுத்தப் பெற்ற வரிசையில் செல்லாமல் சிறப்பு வழியில் சென்று சேவிக்கச் சிறப்புக்

கட்டணச் சீட்டுக்கள் வழங்குகின்றனர். முதல் இரண்டு நாள்கள் ஒருவருக்கு முப்பது ரூபாயும், அடுத்த இரண்டு நாள்கள் ஒருவருக்கு இருபது ரூபாயும், அதற்கடுத்த இரண்டு நாள்கள் ஒருவருக்கு இருபது ரூபாயும் என்று சிறப்புக் கட்டணம்.

இருப்பினும் கடைசி இருநாள்கள் மாலை 2 மணிமுதல் மாலை 6.00 மணி வரை இலவச சேவையும், கடைசி நாளில் காலை 6.30 மணி முதல் காலை 10.00 மணி வரையும் இலவச சேவையில் பெருமாளைத் தரிசிக்கலாம்.

திருக்கோயில் நிதி நிலைமையைச் சீர்திருத்தும் பொருட்டும், மிக, மிக அதிகமாகப் பெருகிவரும் கூட்ட நெரிசலைக் கட்டுப்படுத்தி அனைவரும் பெருமாளைச் சேவிக்க இத்தகு கட்டண ஏற்பாடுகளை வகுத்துள்ளனர்.

வைகுண்ட ஏகாதசி நாள்களில் மிக முக்கியமான நபர் (வி.ஐ.பி) எனும் இலவச அனுமதிச் சீட்டு வழங்குகின்றனர். ஆனால் ஆயிர்கணக்கானவர்களுக்கு அத்தகைய சீட்டு வழங்கப்படுகிறது. பெருமாள் திருமுன் எல்லோரும் முக்கியமான நபர்தான் என்பதால் இப்படி ஏற்பாடு போலும். ஆனால், அத்தகையோர் கிளி மண்டபத்திற்குப் பக்கத்திலேயே நின்று, பெருமாள் சொர்க்கவாசல் வழியே சென்ற பிறகு செல்ல வேண்டியது தான். மூலஸ்தானத்திலிருந்து கருவறை புறப்பாடு, திருக்கொட்டகைப் பிரவேசம், சாதரா மரியாதை ஆகியவற்றையெல்லாம் காணவியலாது. அன்று மைய, மாநில அமைச்சர்கள் முதலிய பிரமுகர்கள் தரிசனம் வருகிறார்கள் எனில் கட்டுப்பாடுகள் மிக ஏராளம்.

## தை மாதம் – பூபதித் திருநாள்

### பூபதித் திருநாள்

தை பிரம்மோத்சவம் விஜய நகர மன்னரால் கி.பி. 1413ஆம் ஆண்டு ஏற்படுத்தி வைக்கப்பட்டது. இவருடைய பெயர் வீர பூபதி உடையார். இவர் விஜய நகர மன்னர் இரண்டாம் அரி அரனின் பேரன். இரண்டாம் புக்கரின் மகன். வீரபூபதி உடையார் 135 பொன் கொடுத்துப் பூபதித் திருநாளை ஏற்படுத்தி வைத்தார்.

கல்வெட்டு ஒன்று இராச மகேந்திரன் திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் அமைந்துள்ளது. அதில் வீர பூபதி உடையார் தைபுனர் பூசநட்சத்திரத்தில் திருத்தேர் விழா நடைபெற நிவந்தங்கள் விடப்பட்ட செய்தி காணப்படுகிறது.

கி.பி. 1413ஆம் ஆண்டு மணவாள மாமுனிகள் இசைவுடன் இவ்விழா தொடங்கப்பட்டது எனவும், இதனை நடத்தி வைக்கும் பொறுப்பு உத்தம நம்பிகளிடம் ஒப்படைக்கப்பெற்றதாகவும் கூறுவர்.

தையில் நடைபெறும் இந்தப் பிரம்மோத்சவத்தில் பெருமாள் உபயநாச்சியார்களுடன் தேரில் எழுந்தருளுவார்.

இசுலாமியர் படையெடுப்பிற்குப் பின் முதன் முதலாக ஏற்படுத்திய விழா இந்தத் தைப் பிரம்மோத்சவம், ஆதலால் சித்திரைத் திருநாள் போலவே இத்திருநாள் கொண்டாடப்பட வேண்டும் எனவும், உத்தம நம்பிக்கு அருள் செய்தார் என்பதனைக் கல்வெட்டுக் கூறுகிறது.

> *“தை மாதத்தில் உத்திரட்டாதி நாளன்று ஸ்ரீரங்கநாதனுக்கு கொடியேற்றம் செய்து ஒன்பது நாள் திருநாளும் நடத்தி ஒன்பதாம் நாள் புனர்பூச நட்சத்திரத்தில் நாச்சியார்களுடன் ஸ்ரீரங்கநாதனையும் திருத்தேரிலே எழுந்தருளுவித்துச் சித்திரைத் திருநாள் போலவே தேவ உற்சவம் ஒன்றுக்கு ஒரு தாழ்வற நடத்தும் பாவிக்கு” என்று கல்வெட்டுக் கூறுகிறது.*

மணவாள மாமுனிகள் ஆழ்வார் திருநகரியில் எழுந்தருளியிருந்த காலத்தில் இந்தத் தேர்த் திருவிழாவில் மிகவும் ஈடுபட்டு அதை எண்ணிப் பாடியிருக்கிறார். தேவியருந் தாமும் திருத்தேரின் மேலரங்கன் மேவி விக்கிரமன் வீதிதனிற் – சேவை செய்யும் அந்தச் சுவர்க்கத்தையனுபவிக்கப் பெற்று வரும் இந்தத் திருநாளிலேயாம்.

மார்கழி மாதத்தில் திருவரங்கத்தில் எம்பெருமானார் சந்நிதியில் நடைபெறும் திருப்பாவை கோஷ்டியில் அந்வயம் கொள்ள நிலையில்,

எந்தையெதிராசர் சிறப்பை யெழி லரங்கா
சிந்தை மகிழ்ந்தமுது செய்ய - அந்த நிலம்
சென்று நின்று சேவிக்கும் செல்வமின்று பெற்றிலமே

என்று சேவிக்கும் இனியாம்.

திருவரங்கத்தில் திருப்பாவை சாற்றுமுறைக்குச் சங்கராந்தி மண்டபத்திற்கு நம் பெருமாள் உபய நாச்சியார்களுடன் ஆழ்வார், ஆச்சாரியர்களுடன் எழுந்தருளும் வைபவத்தைச் சேவிக்கப் பெறாத நிலையில் பாடிய பாடல் இது.

சீர் சூர் அரங்கர்தற்தேவியரோடு சிறப்புடனே
ஏராரும் மாறன் கலியன் எதிராசனோடு அமர்ப்
பாரோர் மகிழ்ந்தேத்தும் தட்டுக்கள் தன்னுடன் போற்ற அமர்த்தப்
பேர் ஆரவாரத்தை இன்றுகண்டு இன்புறப் பெற்றிருமே

திருத்தேரில் உபய நாச்சி மார்களோடு பெருமாள் எழுந்தருளுவதும் தேரை விட்டிறங்கி, ஸ்ரீ ரங்க நாச்சியார் சந்நிதியில் கதிர் அலங்காரத்தைக் கடாட்சிப்பதும் தைபிரம்மோத்சவத்தின் சிறப்பியல்புகளாகும்.

சித்திரைத் திருநாளில் குத்தகைக்கு விடப்பட்ட நிலங்கள் அறுவடையாகி நெற்கதிரை வெள்ளாளப் பிள்ளையானை மேலேறி சிரசில் வகித்துக் கொண்டு திருவீதி சுற்றி வந்து நம்பெருமாள் திருமுன்பே சேர்ப்பதற்குக் கதிர் அலங்காரம் என்று பெயர்.

தை மாத விழாக்கள் இரண்டு ஆகும். முதலாவது உற்சவம் சங்கராத்தி உற்சவம். இது இரண்டு நாள்கள் மட்டுமே.

தைமாதம் முதல் நாள் சங்கராந்தியன்று காலை 6.00 மணிக்கு நம்பெருமாள் புறப்பட்டுத் திருச்சிவிகை சங்கராந்தி மண்டபம் அடைய அங்கே திருமஞ்சனம் கண்டு அலங்காரம் ஆனபின் திருப்பாவை சாற்று முறை தீர்த்த கோஷ்டியானதும் பிற்பகல் இரண்டு மணிக்குப் புறப்பட்டுப் பிற்பகல் 2.30 மணிக்குக் கருவறை சேர்வார். சித்திரைத் திருவிழாவின் தொடக்க நாளில் குத்தகை விடும் பட்டயம்

வாசிக்கப்படுகிறது. அந்நிலங்களில் விளைந்த தானியத்தைத் தை விழாவின் போது நம் பெருமாள் கடாட்சித்தருளுகிறார்.

அடுத்த நாள் கணு (கனு) – பாரி வேட்டை (பரிவேட்டை) நாள் ஆகும். பெருமாள் குதிரை வாகனத்தில் புறப்படுவதால் பரிவேட்டை எனவும், பாரி எனவும் உலகை வேட்டை கொள்ளச் செல்வதால் பரிவேட்டை எனவும் இருவகைகளாகக் குறிப்பிடுகின்றனர்.

நம்பெருமாள் முத்தங்கியுடன் புறப்பட்டு ஆயிரங்கால் மண்டபத்தில் முன் பகுதியிலுள்ள கனு மண்டபத்தில் எழுந்தருளி புளியோதரை, ததியோனம், என்ளோரை, சர்க்கரை பொங்கல் அமுது செய்து, குதிரை மேல் ஆரோகணித்துத் தெற்கு இராஜகோபுரம் வரையிலும் வேட்டை நிமித்தமாகச் செல்லுதல். வேட்டையாடு பாவனையாக கோபுரத்தின் வாசலில் ஆட்டின் காதில் துளையிடுவர். ஐந்து நாட்கள் உற்சவம் இப்போது ஒரு நாளாகக் குறுகிவிட்டது.

காலை 6.00 மணிக்கு புறப்படும் பெருமாள், கணு மண்டபம் சேர்ந்து அலங்காரம் திருவமுது செய்து குதிரை வாகனத்தில் பிற்பகல் 2.00 மணிக்குப் புறப்பட்டு 2.45 மணிக்கு வந்து சேருவார்.

தை மாதம் என்றாலே நினைவிற்கு வருவது பூபதித் திருநாள்தான். பூபதித் திருநாளின் முதல் நாள் சேனை முதலியார் நகர சோதனை செய்வார். மறுநாள் பூபதித் திருநாள் கொடியேற்றத்துடன் தொடங்கும்.

## பூபதித் திருநாள் – முதல் நாள்

நம் பெருமாள் லக்னத்தில் புறப்பாடு கண்டருளிக் கொடியேற்று மண்டபத்தில் உள்ள வெண்கலத்தேரில் எழுந்தருளுவார். கொடிப்படம் எழுதி வீதி எழுந்தருளும் அரையர் திருவரங்கப் பாசுரங்களைச் சேவிப்பர். ஸ்தானீகர் நம்பெருமாளுடைய ஆணையாக ப ஷோ என்று அதாவது கொடிப்படம் பறக்கவிடட்டும் என்பதின் மருஉ என்று மொழிவார். நம் பெருமாள் திருவடிகளிலிருந்து அர்ச்சகர் பிள்ளைக் கயிற்றைக் கொடுக்க சாத்தாத வைணவர் திருநாள் ரக்சா பந்தன அர்ச்சகரிடம் சேர்ப்பிக்க அவர் திருச்சுற்று முதலியிடம் கொடுக்கப்

பிள்ளைக்கயிறு போட்ட பிறகு பரிசாரகர் சுற்றிக் கொடிக் கம்பத்தில் கட்டுவர். கொடியேற்ற அப்ப விநியோகம் நடைபெறும்.

பெருமாள் கண்ணாடி அறை சேருவர். மாலையில் உபய நாச்சியார்களுடன் திருச்சிவிகையில் திருவீதி கண்டருளிய பிறகு கார்த்திகை கோபுர வாசலில் இயல் சாற்றுமுறையினை சாது ஸ்ரீவைணவர்கள் சாற்றுமுறை சேவிப்பர். நம்மாழ்வார் சந்நிதியில் இயல் கோஷ்டி நம்பெருமாள் யாக சாலை எழுந்தருளுவார். பஞ்சகுண்ட ஹோமம் திருவரங்க மாளிகையார் யாக சாலைக்கு எழுந்தருளுவார். நம்பெருமாள் கண்ணாடி அறைக்கு எழுந்தருளுவார்.

முதல் நாள் காலையில் கண்ணாடி அறைச் சேவையும், மாலையில் நம்பெருமாள் உபய நாச்சியார்களுடன் உத்தரவீதி வலம் வருதலும் உண்டு. பத்து நாளும் உத்தரவீதியில் வலம் வருவார். ஏறக்குறைய சித்திரை மாதத்து விருப்பண் திருவிழாப் போன்றுதான் நடைபெறுகிறது. வாகனங்கள், உலாவின் நாள்களில் மட்டுமே மாறுதல் இருக்கிறது.

## உள்வலம்

சித்திரை மாதத்தில் சித்திரை வீதியில் வலம் வந்த பெருமாள் தை மாதத்தில் உள் வலம் வருகிறார். இரண்டாம் நாள் காலை ஒற்றைப் பிரபை. மாலை அன்ன வாகனம், மூன்றாம் நாள் காலை சிம்மவாகனம். மாலையில் யாளி வாகனம், நான்காம் நாள் காலை இரட்டைப்பிரபை. மாலையில் கருட சேவை, ஐந்தாம் நாள் காலை சேஷவாகனம் , மாலை அனுமந்த வாகனம். ஆறாம் நாள் காலை கற்பக விருட்சம். மாலை யானை வாகனம். இரவு உள் ஆண்டாள் சன்னதியில் மாலை மாற்றல். ஏழாம் நாள் காலை கண்ணாடி அறை சேவை. மாலை பெருமாள் உபயநாச்சியார்களுடன் நெல் அளவு கண்டருளல் பூத்தேர், இரவு தாயார் சன்னதியில் திருமஞ்சனம், எட்டாம் நாள் காலை பல்லக்கு மாலை குதிரை வாகனம் வையாளி இரவு சின்னப் பெருமாள் சயனம்.

ஒன்பதாம் நாள் அதிகாலையில் 4.30 முதல் 5 மணிக்குள் உபய நாச்சியார்களுடன் தைத்தேருக்கு எழுந்தருளுவார். காலை 6 மணியளவில் தைத்தேர்வடம் பிடிக்கப்படும். பூபதித் திருநாளில் வரும்

புனர்பூச நட்சத்திரத்தில் தைத்தேர் அருள்மிகு இராமபிரான் நடத்துவதாகும். தைத்தேரில் நம்பெருமாள் உபய நாச்சியார்களுடன் வலம் வருவார். தைத்திருநாளின் போது எல்லாச் சந்நிதிகளும், கோபுர வாயில்களும் தேர்நிலைக்கு வரும் வரை மூடப்பட்டு இருக்கும். மாலையில் தீர்த்த வாரியும் தாயார் சன்னதியில் திருமஞ்சனமும் நடைபெறும்.

பண்டையக் காலங்களில் தைத் திருத்தேர் தாயார் சந்நிதிக்கு வடக்குக் கோபுர வாயிலின் மேற்குப் பகுதியில் நிலை கொண்டிருக்கும் தேரிலிருந்து தாயார் சந்நிதிக்கு எழுந்தருளுவார். வடக்கு உத்தர வீதியில் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள 10 திருமாளிகைகள் சற்று உள்ளடக்கியே அமைந்துள்ளன.

பத்தாம் திருநாள் சப்தாவரணமாகும். அன்று தைப்பூச நாளாகும். இரவு புவனமெல்லாம் காத்தாளாம், புவியடங்கக் காத்தவளாம் தம் சோதரி சமயபுரத்து மாரியம்மனுக்கு மாலை பிரசாதம், சீர் அனுப்புதல் நடைபெறும்.

பதினோராம் நாள் மாலை நம்பெருமாள் தோளுக்கினியான் பல்லக்கில் புறப்பட்டு ரெங்க விலாஸ் மண்டபம் சேருவார். இரவு ஆளும் பல்லக்கில் புறப்படுவார். இத்துடன் பூபதித் திருநாள் நிறைவடைந்து விடுகிறது.

## மாசி மாத விழாக்கள்

*மாசித் தெப்பம் :* பாண்டியர்கள் காலத்தில் தெப்பத் திருவிழா, சித்திரைத் திருநாளில் நடைபெற்றது. எம்மண்டலங் கொண்டு கோயில் பொன் மேய்ந்த பெருமாள் சுந்தர பாண்டிய தேவர், திருக்காவிரியிலே பெரியதாக ஊரணி வெட்டுவித்துத் திருக்காவிரி நீர் பாய்ச்சி அதிலே முத்தும் கவளமும் திருக்காவணமும் கட்டுவித்து, ஊரணியிலே திருப்பள்ளி ஓடம் பொன்னாலே பண்ணி நிறுத்தி அதிலே நாச்சிமார்களுடனே பெருமாளை எழுந்தருளச் செய்து தெப்போத்சவம் நடைபெற்றது.

பிற்காலத்தில் ஆடி பதினெட்டாம் நாள் திருக்காவிரியில் திருப்பள்ள ஓடத் திருவிழாவாக நடைபெற்று வந்தது. ஒருமுறை

தெப்பத் திருநாள் கண்டருளுகையில் மாந்திரீகர்களின் அடாத செயலால் தெப்பமானது திருக்காவிரியில் ஏற்பட்ட வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்பட்டது. அச்செய்தியைக்கேட்டுக் கூர நாராயண ஜீயர் தம்முடைய வலது திருக்கரத்தில் அணிந்திருந்த திருப்பவித்திரத்தை வலது புறம் திருப்ப நம் பெருமாள் திருப்பள்ளிப் படகுக் காவிரி வெள்ளப் பெருக்கினை எதிர்த்து நிலை கொண்டிட நாச்சிமார்களும், நம்பெருமாளும் எவ்வித ஆபத்துமின்றி ஆஸ்தானம் சென்றடைந்தனர் என்று கூறுவர்

இதன்பின்னர் இதுபோன்ற செயல்களுக்கு இடம் கொடாதபடி கோயிலுக்கு மேற்கே பெரியதாக ஒரு குளத்தை வெட்டுவித்து அதிலே திருப்பள்ளி ஓடத் திருநாள் நடத்தும்படி பண்ணுவித்தார். அச்செயலைப் போற்றும் வண்ணம் தெப்பத் திருநாளில் விட்டவன் விழுக்காடு மரியாதை இன்றும் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடத்திற்கு அனுப்பி வைக்கப்படுகிறது.

கி.பி. 1489இல் கந்தாடை இராமானுஜ முனி காலத்தில் அடைய வளைந்தானுக்கு மேற்கே அமைந்துள்ள குளத்தைச் சீரமைத்து மைய மண்டபமும் கட்டி வைத்தார்.

இப்போது நடைபெறும் மாசித் திருநாள் துளுவ மரபின் விஜய நகர சாம்ராஜ்ய மன்னரான கிருஷ்ண தேவராயர் பெயரில் ஏற்படுத்தி வைக்கப்பட்ட பிரம்மோத்சவத்தின் தொடர்பு ஆகும்.

மாசித் திங்கள் நடைபெறும் திருநாளைக் கிருஷ்ண தேவ மகாராயர் திருநாள் என்று கல்வெட்டுகள் குறிக்கும். இன்று மாசித் திங்களில் நடைபெறும் விழா அவர் பெயரால் குறிக்கப்படுவதில்லை. இத்திருநாள் தெப்பத் திருநாளாக ஒன்பது நாட்களுக்குக் கொண்டாடப்பட்டு வருகிறது.

கல்வெட்டு 42/1938 – 39 கிருஷ்ண தேவராயர் பெயரால் நடைபெற்ற மாசி பிரம்மோத்சவத்தின் ஐந்தாம் திருநாளன்று திம்மராசர் தோப்புக்கு எழுந்தருளியதைக் குறிப்பிடுகிறது.

அச்சுததேவராயரின் கி.பி. 1535, 1536, 1539ஆம் ஆண்டுக் கல்வெட்டுகள் கிருஷ்ண தேவராயரின் திருநாளின் இரண்டாம் நாள்

குறித்தும், அந்தத் திருநாளின் முடிவில் விடை ஆற்றிக்குப் பெருமாள் அக்கச்சி அம்மன் தோப்புக்கு எழுந்தருளியதையும் ஆறாம் திருநாளன்று தெப்பக்குளம் எழுந்தருளுவது பற்றியும் தெரிவிக்கின்றன.

மாசித் திருநாள் பிரம்மோத்சவமாகக் கொண்டாடப்பட்டு வந்தது. காலப் போக்கில் கொடியேற்றம் முதலிய சடங்குகள் நின்று போயின. தெப்பத் திருவிழாவாக ஒன்பது நாள்கள் நடைபெறுகின்றது. திருவீதிப் புறப்பாடும் பிரம்மோத்சவசங்கள் போன்று நடைபெறுகின்றது. எட்டாம் திருநாள் மட்டும் தெப்பத் திருநாள் நடைபெறுகின்றது. ஒன்பதாம் திருநாளில் ஸ்ரீ சடாரிக்குத் தெப்பக் குளத்தில் தீர்த்தவாரி நடைபெறுகின்றது. அன்றிரவு பந்தக் காட்சி.

தெப்பக் குளத்தைச் சீர் அமைத்து அதில் மைய மண்டபம் கட்டிய கந்தாடை இராமானுச முனிவர், விஜய நகர சாளுவ மன்னரான வீர நரசிம்மனின் அண்ணன் ஆவார்.

இவர் கோயில் கந்தாடை அண்ணனை ஆச்ரயித்து அவருக்குச் சீடரானதால், கந்தாடை இராமானுஜ முனி என வழங்கப்படுகிறார். விஜய நகரத்தை ஆண்ட சாளுவ, துளுவ மரபு மன்னர்களும், மக்களும் இவர்களைப் போற்றினர்.

ஸ்தலத்தார்க்குச் சமமாக கைங்கரியம் மரியாதை முதலியன கந்தாடை இராமானுஜ முனிக்கு அழகிய மணவாளன் சந்நிதியில் ஏற்பட்டிருக்கின்றன. இதைப் போலவே சாத்தாத ஸ்ரீ வைணவர்கள் கணக்குப் பிள்ளைகளான ஸ்ரீ ரங்க நாராயணப் பிரியன், அழகிய மணவாள பாண்டிய தரம்பிள்ளை, தைத்தோன்று கதிரலங்காரம் கொண்டு வரும் வீராதூர்ப்பிள்ளை ஆகியோருக்குப் பெரிய கைங்கர்யங்கள் ஏற்பட்டிருந்தன.

கந்தாடை இராமானுச தாசர் செய்த திருப்பணிகள்.

1. விஜய நகரப் பேரரசின் படைத் தளபதியான நரச நாயக்கரின் துணையுடன் நம்பெருமாளுக்கு ஏராளமான செல்வம் சேகரித்து வழங்கினார்.

2. உள் ஆண்டாள் சந்நிதிக்கெதிரில் உள்ள விட்டல கிருஷ்ண சந்நிதியை ஏற்படுத்தியது கந்தாடை இராமானுச முனியின் சீடர் கந்தாடை மாதவய்யங்கர்.

3. கீழ்க் கோட்டை வாசல் கோபுரமான வெள்ளைக் கோபுரம் இடி விழுந்து சேதமடைந்தபோது கந்தாடை இராமானுச முனி புதுப்பித்தார்.

4. திருக்கொட்டாரத்தில் பாழ்பட்டுச் சேதமடைந்த நிலையில் இருந்த மூன்றாம், நான்காம், ஐந்தாம் கூடுகளையும் புனர் நிர்மாணம் செய்து புதிதாக நடைபாதை அமைத்தார்.

5. காவிரி உடைப்பெடுத்து வெளி ஆண்டாள் சந்நிதி வழியாகப் பெருக்கெடுத்து ஓடிக் கிழக்கேயுள்ள எல்லைக்கரை மண்டபம் வரை பரவிய நிலையில் அதனால் ஏற்பட்ட பள்ளங்களைத் திருவெள்ளறையிலிருந்து மண் கொணர்ந்து சமன் செய்தார்.

6. திருப்பாணாழ்வார் எழுந்தருளியுள்ள வீர ஆஞ்சநேயர் சந்நிதியை கந்தாடை இராமானுச முனி உருவாக்கித் தமது ஆசாரியர் கந்தாடை அண்ணனுக்குக் காணிக்கையாக வழங்கினார்.

7. அகளங்கன் திருமதிலைத் திருப்பணி செய்து குலசேகரப் பெருமாள் என்று பெயர் பெற்றார்.

8. கோயிலுக்குச் சேர வேண்டிய கிராமங்கள் 61ஐ மீட்டார்.

*சிறப்புக்கள்* : கந்தாடை இராமனுசன் பட்டத்தை அலங்கரிப்போருக்கு வழங்கப்பெற்ற மரியாதைகள் இவை.

1. கந்தாடை இராமானுசன் பட்டத்தை அலங்கரிப்போர் பெருமாள் சேவைக்கு அல்லது கைங்கரியத்திற்கு வருகையில் அரையர், அமுதனார், பட்டர் இவர்கள் போலக் குல்லாய் தரித்துக் கொள்ள வேண்டும். கந்தாடை இராமானுசனுக்கு எக்காலத்திலும் குல்லாய் உண்டு.

2. கோஷ்டியின் போது கொரட்டு மணியகாரருக்குப் பக்கத்து இடம் கந்தாடை இராமானுசனுடையது. பிரசாத விநியோகம்

முதலியவை மணியகாரருக்குப் பிறகு கந்தாடை இராமானுசனுக்கு ஆகும்.

3. கந்தாடை இராமானுச முனிக்கு சாற்றுப்படி, பரிவட்டம், மாலை, அபயஹஸ்தம், வேளையம் முதலிய மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு சேவிப்பர்.

4. பெருமாள் தெப்பத்தை விட்டிறங்கி மைய மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் போதும் அவ்வாறு எழுந்தருளாத போதும் கரை மண்டபத்திலும் கந்தாடை இராமானுசனுக்குச் சேவை சாதிப்பார்.

5. ஊஞ்சல் விழா முதல் திருநாள், ஏழாம் திருநாள்களில் பெருமாள் திருவந்திக் காப்புக் கண்டருளும்போது மண்டபக் காரர்களுக்குச் செய்து வைக்கும் சேவை, மரியாதைகள் கந்தாடை இராமானுச முனி மடத்துக்கே அனுப்புகின்றனர். முதல் திருநாளன்று இந்தப் பிரசாதத்தை அர்ச்சகர் மடத்துக்குப் போய் ஸ்ரீ ரங்கராஜருக்கு அமுது செய்விப்பார்.

6. உத்சவ காலங்களில் மண்டபத்தில் பெருமாள் சேவை மரியாதை பெறுவதுடன், நித்தியப் படியில் கணை வாங்கி சேவை, மரியாதை, அபயஹஸ்தம் முதலியவைகளைப் பெற்றுக் கொள்வார்.

*கந்தாடை இராமானுச முனியின் கைங்கர்யங்கள் :* தினந்தோறும் அரவணைக்குப் பிறகு பெருமாள் பால் அமுது செய்த பிறகு, ஆரிய பட்டாள் வாசலுக்குள் திருவுண்ணாழிப் பிரதட்சணம் சந்நிதி வாயில் முதலான எல்லா இடங்களிலுமுள்ள பூட்டுகளின் மேலும் இவர் ஆஞ்சநேய முத்திரை இடுவார்.

காலையில் அவற்றைத் திறக்கும்போது தம்முடைய முத்திரை சரியாயிருக்கிறதா என்று பார்ப்பார். பெருமாள், நாச்சியார்கள் புறப்பாடுகளின் போது கத்தியுடன் வந்து திருமேனிக்குக் காவலாயிருப்பார்.

கந்தாடை இராமானுசனாக வந்த இராமராஜர் ஹனுமனு பாசனை பண்ணனதால் ஆஞ்சநேய முத்திரை இவருக்குக் கிடைத்தது.

கந்தாடை இராமானுச முனி எழுந்தருளியுள்ள மடம் இப்போது பழுது பார்க்கப் பெற்று சம்ப்ரோட்சணம் நடைபெற்றுள்ளது. மடத்து சந்நிதியில் மூலவராக ஸ்ரீ நிவாசனும், திருவாராதனப் பெருமாளாக ஸ்ரீ ரங்காஜனும் எழுந்தருளியுள்ளனர்.

இந்த மடத்துத்தூண் ஒன்றில் உறங்கா வில்லி தாசரும், அவருடைய துணைவியாரான பொன்னாச்சியும் எழுந்தருளியுள்ளனர்.* உறங்கா வில்லிதாசருடைய ஸ்தானத்திலேதான் கந்தாடை இராமானுச முனி பெருமாள் புறப்பாட்டில் அவர் முன் எழுந்தருளுவார்.

கி.பி. 2003இல் கந்தாடை இராமானுச முனி பட்டத்தில் யாரும் எழுந்தருளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## கிருஷ்ண தேவமகாராயர் திருநாள்: மாசி திருப்பள்ளியோடத் திருநாள் (தெப்பத் திருநாள்)

கோயிலுக்கு வெளியே தெற்கு – மேற்கு – வடக்குப் புறமாக ஒரு சாலை செல்லுகின்றது. அதன் மூலமாகச் சென்றால் தாமரை மலர்கள் நிறைந்த சதுர வடிவமான குளத்தைக் காணலாம். அது மேற்குப் புறத்துக் கோபுரத்தின் அருகிலுள்ளது.

இத்திருக்குளத்தில் இரவில் தெப்பத் திருவிழா நடைபெறும். **முதல் நாள்** காலை எட்டு மணிக்குக் கருவறையிலிருந்து புறப்பட்டு ரெங்கவிலாச மண்டபம் சேர்ந்த எம்பெருமாள் மாலை அம்மண்டபத்திலிருந்து மாலை 4.15 மணிக்குப் புறப்பட்டு வாகன மண்டபம் சேர்ந்து அன்ன வாகனத்தில் புறப்பட்டு உள்திருவீதி வலம் வந்து வாகன மண்டபம் சேர்ந்து இரவில் 9.00 மணிக்குக் கருவறை சேருவார்.

**இரண்டாம் நாள்** பல்லக்கில் புறப்பட்டு, அனுமந்த வாகனத்தில் மாலையில் புறப்பாடு ஆகி இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார்.

**மூன்றாம் நாள்**, பல்லக்கில் புறப்பட்டு, ராமராவ் மண்டபம் சேர்ந்து கற்பக விருட்சத்தில் புறப்பாடு ஆகி இரவு 9.00 மணிக்குக் கருவறை சேருவார்.

* பார்க்க : இந்நூலாசிரியரின் வைணவத் திருத்தலங்களின் வரலாற்றுக் கதைகள், தென்றல் பதிப்பகம், சென்னை.

நான்காம் நாள் விழா வெள்ளிக் கருட வாகனத்தில் உள்வீதி வலம் வந்து கருவறை சேரும் விழாவாகும்.

ஐந்தாம் நாள் இரட்டைப் பிரபையில் புறப்பட்டுக் கருவறை சேருதல்.

ஆறாம் நாள் யானை வாகனம், உள் ஆண்டாள் சந்நிதியில் மாலை மாற்றுதல் நடைபெற்ற பின் கருவறை சேருதல் நடைபெறும்.

ஏழாம் நாள் நெல் அளவு காணுதல். சந்தனு மண்டபத்திலிருந்து புறப்பட்டு நடைபெற்ற பின் கருவறை சேருவார்.

எட்டாம் நாள் தெப்பக் குளத்தில் உபய நாச்சியார்களுடன் மூன்று முறை தெப்பத்தில் சுற்றி வருவார். கிளிமாலை சாத்தாத வைணவன் யானையேற்றமும் நடைபெறும். தெப்ப ஓடம் செலுத்திய மிராசு முத்து ராஜா பரம்பரையினருக்குச் சிறப்பு செய்தல் நடைபெறும்.

ஒன்பதாம் நாள் காலை பல்லக்கில் புறப்பட்டுத் தெப்பக் குளத்தில் ஸ்ரீ சடாரி தீர்த்தவாரி – மாலை 6.30 மணிக்கு ஒற்றைப் பிரபையில் புறப்பாடு. தீப்பந்தக் காட்சி நடைபெறும். சித்திரை வீதிகள் வலம் வந்து இதன் பின் இரவு 8.30 மணிக்குத் திருமால் கருவறை சேர்வார்.

## பங்குனிப் பெருவிழா – ஆதி பிரம்மோத்சவம்

சோழ மன்னன் தர்மவர்மன் காலத்தில் விபீடணனால் நடத்தி வைக்கப்பெற்ற பங்குனி ஆதி பிரம்மோத்சவத்தின் தொடர்ச்சியே இன்று நடைபெறும் பங்குனிப் பெருவிழா என்பதே இப்பிரம்மோத்சவம் பெறும் முதல் சிறப்பு.

விபீடணனால் எழுந்தருளப்பட்ட பெரிய பெருமாளையும் உற்சவரையும் திருவரங்கத்தில் பங்குனி ரேவதியில் தர்மவர்மா பிரதிட்டை செய்து விழாக் கொண்டாடினார். அதனால்தான் இந்த விழாவிற்கு ஆதி பிரம்மோத்சவம் என்று பெயர்.

இசுலாமியப் படையெடுப்பிற்கு முன்பு சிறப்புடன் நடைபெற்ற இரு பெரும் விழாக்கள் ஐப்பசி, பங்குனி மாதங்களில் நடைபெற்ற **பிரம்மோற்சவங்கள்** ஆகும்.

இந்தப் பங்குனி மாதத்துப் பெருவிழாவினை அகநானூறு 137ஆம் பாடலில் உறையூர் முதுகூத்தனார் என்னும் புலவர் பின்வரும் பாடலில் எடுத்துக் காட்டுகிறார்.

வென்று எறிமுரசின் விறல் வோர்ச் சோழர்
இன்கடும் கள்ளின் உறத்தை ஆங்கண்
வருபுனல் நெரிதரும் இருகரைப் பேரியாற்று
உருவவெண்மணல் முருகு நாறு தண் பொழில்
பங்குனி முயக்கம் கழிந்த வழி நாள்
வீ இலை அமன்ற மரம் பியல் இறும்பில்
தீ இல் அடுப்பின் அரங்கம் போல
பெரும் பாழ் கொண்டதன்று நுதலே

இப்பாடலில் தலைமகன் பிரிய இருப்பதை நினைத்து வேறுபட்ட தலைமகனின் நிலையை எடுத்துக் கூறும் புலவர்.

*"திருவரங்கத்தில் பங்குனி உத்திரத் திருநாளின்போது மக்கள் மிகுதியாகத் திரண்டு காவிரியின் இருமருங்கிலும் உள்ள சோலைகளில் தங்யிருந்தபோது பொலிவுடையதாகத் தோன்றிய அச்சோலைகள் அவ்விழாவின் முடிவில் அனைவரும் அரங்கத்தை விட்டுப் போன பின்னர் பொலிவிழந்து காணப் பெறுதல் போலத் தலைமகன் பிரிவை எண்ணிய தலை மகளின் நெற்றியும் பொலிவிழந்து தோன்றுகிறது"*

என்று கூறுகிறார்.

இப்பாடலில் இவ்விழா திருவரங்கத்து விழா என்று கூறிய புலவர் திருமாலுக்கு நடைபெற்ற விழா என்று கூறவில்லையே என்று சிலர் விவாதித்து வினவக்கூடும்.

இக்குறை களையச் சிலம்பு துணை புரிகிறது. திருவரங்கத்தில் பள்ளி கொண்ட பிரான் திருமாலே என்று இளங்கோவடிகள் சிலம்பில் காடுகாண் காதையில் கூறக் காண்கிறோம்.

நீலமேகம் நெடும்பொன் குன்றத்துப்
பால் பிரிந்து அகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலை உடைஅருந்திறல்
பாயல் பள்ளிப் பலர் தொழுது ஒத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந்துருத்தித்
திரு அமர் மார்பன் கிடந்த வண்ணமும்

இப்பாடலில் திருமகளைத் திருமார்பில் கொண்ட திருமாலவன் கிடந்த திருக்கோலத்தைச் சுட்டிக் காட்டுகிறார்.

பங்குனிப் பெருவிழா சிறப்பாக நடைபெறச் சோழ மன்னர்கள் அளித்த நிவந்தங்கள் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் காணக் கிடைக்கின்றன.

முதலாம் இராஜராஜன் ஊஞ்சல் மண்டபத்திலுள்ள ஒற்றைக் கல்மண்டபக் கல்வெட்டில்

'ஆழ்வார் பங்குனித் திருநாளும்
ஐயப்பிகைத்திரு நாளி'

என்று கூறியுள்ளதைக் காட்டலாம்.

ஐப்பசி பங்குனி பிரம்மோத்சவங்களில் இரண்டு திருநாளிலும் தீர்த்தத் திருநாளில் அமுதுபடிக்குப் பள்ளி கொண்டான் என்ற மரக்கால் அளவையைக் கொண்டு நெல் அளந்ததைக் குறிப்பிடுகிறது, முதற் குலோத்துங்களின் குலசேகரன் திருச்சுற்றுக் கல்வெட்டு. பங்குனி உத்திரத்தின் இரண்டாம் திருநாள் ஜீயர்புறம் எழுந்தருளும் போது அவருக்குக் கீரையும் பாகற்காயும் நைவேத்தியம்.

முதலாம் குலோத்துங்கன் மூன்றாவது திருச்சுற்று கிழக்குச் சுவரில், ஆறே காசு என்ற தங்கத்தினை அரையன் கருடவாகனன் என்கிற காலிங்கராயனால் ஐப்பசி தேர்த் திருநாளிலும், பங்குனித் திருநாளிலும் தீர்த்த வாரியன்று இரவு திருப்புன்னை மரத்தின் கீழ் நம் பெருமாள் எழுந்தருளிக்க குலசேகராழ்வாரது திருவரங்க விஷயமான இரண்டாம் பதிகம் 'தேட்டருந்திறல் தேனினை' அரையர்களால் இசையுடன் கேட்டருளும் சமயம் அப்பம் நூறுக்குப் படி அரிசி பதக்கும்,

பருப்பு மூன்று நாழியும் நெய் மூன்று நாழியும் அளிப்பதற்கான நிபந்தம் உள்ளது.

மூன்றாம் திருச்சுற்று மேற்குப் பகுதியில் முக்கோல் பகைவர்களுக்குப் பிட்சை இடுவதற்கான ஏற்பாடுகளை முதலாம் குலோத்துங்கனின் பட்டத்து அரசி தென்னவன் மாதேவி செய்ததாகவும், ஐப்பசிப் பங்குனிப் பெருவிழாக்களில் ஏழாம் திருநாளில் நடைபெறும் திருமஞ்சனத்தின் போது பரப்பப்படும் அரிசிக்கு நிவந்தங்கள் ஏற்படுத்திய தையும் கூறுகிறது முதலாம் குலோத்துங்கனின் கல்வெட்டு. இன்றும் இத்திருமஞ்சனத்தின் போது அவ்வாறு செய்யப்படுகிறது.

நான்காம் திருச்சுற்று வடக்குப் பகுதி ஆலிநாடன் விக்கிரம சோழனின் கல்வெட்டு பங்குனி விழாவின் போது மலையாள நாட்டிலிருந்து வரும் மலையாள பிராமணர்களுக்கு உணவு படைப்பதற்கான ஏற்பாடுகளைத் தெரிவிக்கிறது.

இதுபோன்று நாயக்க மன்னர்கள் காலத்தும் மேற்கொள்ளப்பெற்ற ஏற்பாடுகள் குறித்து ஏராளமான கல்வெட்டுச் செய்திகள் உள்ளன.

ஆதி பிரம்மோத்சவ முதல் நாளில் மூலஸ்தானத்திலிருந்து புறப்பட்ட பெருமாள் கொடியேற்ற மண்டபம் சேர்ந்து கொடியேற்றத்தின் பின் கண்ணாடி அறை சேர்ந்தவர். மாலையில் உபய நாச்சியார்களுடன் திருச்சிவிகையில் புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து சந்தன மண்டபம், யாக சாலை சேர்ந்து திருமஞ்சனம் கண்டருளி இரவு 9.00 மணிக்குக் கண்ணாடி அறை சேருகிறார்.

இரண்டாம் நாள் கண்ணாடி அறையிலிருந்து புறப்பட்டுக் கருட மண்டபம் சேர்ந்து, பின் அங்கிருந்து மாலை புறப்பட்டு அரவணை அமுது செய்து கண்ணாடி அறையிருக்கிறார்.

மூன்றாம் நாள் கண்ணாடி அறையிலிருந்து இரவு 10 மணிக்குப் புறப்பட்டவர் அதற்கு அடுத்த நாள் மேலூர் வழி நடை உபாயங்கள் கண்டருளி ஜீயர் ஆஸ்தான மண்டபம் சேர்ந்து அங்கிருந்து புறப்பட்டு இரவு பத்து மணிக்குக் கண்ணாடி அறை சேருகிறார்.

நான்காம் நாள் கருடசேவைக்குக் கண்ணாடி அறையிலிருந்து காலை புறப்பட்டவர் ரெங்கவிலாஸ் மண்டபத்திற்கு 9.30 மணிக்குச் சேர்ந்த பின்னர் கருட வாகனத்தில் புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் அடைந்து அங்கிருந்து புறப்பட்டு இரவு 9.30க்குக் கண்ணாடி அறை சேருகிறார்.

ஐந்தாம் நாள் கண்ணாடி அறையிலிருந்து புறப்பட்டு வாகன மண்டபம் அடைந்து சேஷ வாகனத்தில் புறப்பட்டுச் சித்திரை வீதிகள் வலம் வந்து வாகன மண்டபம் சேர்ந்து அங்கிருந்து புறப்பட்டுச் சேஷராயர் மண்டபம் சேர்ந்து அம்மண்டபத்திலிருந்து கற்பக விருட்ச வாகனத்தில் புறப்பட்டு வலம் வந்து இரவு 9.00 மணிக்குக் கண்ணாடி அறை சேருகிறார்.

ஆறாம் திருநாளில் நம் பெருமாள் உறையூருக்கு எழுந்தருளுகிறார்.

விஜய ரங்கச் சொக்கநாதர் வழங்கிய தங்கப் பல்லக்கில் அதிகாலை 4.00 மணிக்குப் புறப்பட்டவர் உறையூர் அருள்மிகு கமல வல்லி நாச்சியார் திருக்கோயில் மகாஜன உபய மண்டலத்திற்கு வழிநடை உபாயங்கள் கண்டருளிச் சேரப் பகல் 11.00 மணி ஆகிறது. பின் 11.45க்கு அக்கோயில் முன் மண்டபத்திற்குச் சேர்ந்து அங்கிருந்து சேத்தி மண்டபம் சேர்கிறார். மறுநாள் அதிகாலை 1.30 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு வெளி ஆண்டாள் சந்நிதியில் காலை 4.00 மணிக்கு மாலை மாற்றிக் கொண்டு கண்ணாடி அறை சேர்கிறார்.

ஏழாம் திருநாள் கண்ணாடி அறையில் பொதுஜன சேவை காலை 8.00 முதல் பகல் 12.00 வரை சாதித்தருளியப் பின் உபய நாச்சியார்களுடன் மாலை 6.30 மணிக்குத் திருச்சிவிகையில் புறப்பாடு திருக்கொட்டாரத்தில் நெல் அளவு கண்டருளிச் சித்திரை வீதிகள் வலம் வந்த பின் தாயார் சந்நதியில் திருமஞ்சனம் கண்டருளிக் கண்ணாடி அறை சேர்ந்திட இரவு 12.30 மணி ஆகிவிடும்.

எட்டாம் திருநாள் கண்ணாடி அறையிலிருந்து காலை 6.30 மணிக்குப் புறப்பட்டு எல்லைக் கரை ஆஸ்தான மண்டபம் சேர்ந்து, மாலை 6.00 மணிக்குக் குதிரை வாகனத்தில் புறப்பட்டு வையாளி

கண்டருளி 8.45 மணிக்குக் கண்ணாடி அறை சேர்கிறார். இரவு 9.15 மணிக்குச் சின்ன பெருமாள் சயனம் ஆகும்.

## மட்டையடி சேவை – பிரணய கலகம்

ஒன்பதாம் நாள் திருவிழாவின் போது பெருமாள், ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதிக்கு எழுந்தருளும்போது பிரணய கலகம் என்னும் மட்டையடி விழா நடைபெறுகிறது.

அந்த விழாவின் போது நம்பெருமாள் வார்த்தைகளாகவும், ஸ்ரீரங்கநாச்சியார் கூறுவனவாகவும் இன்றும் முறையே அரையர்களாலும் நாச்சியார் சந்நிதி பண்டாரிகளாலும் சேவிக்கப்பட்டு வருகின்றன.

மட்டையடி சேவை அல்லது பிரணய கலகம் என்பது குறித்து விளக்கமாகக் காணும் முன்னர் ஒன்பதாம் நாள் நிகழ்ச்சிகள் யாவை என்பதையும், அவற்றின் முதன்மை குறித்தும் காண்போம்.

| | |
|---|---|
| நம் பெருமாள் கண்ணாடி அறையிலிருந்து தங்கப் பல்லக்கில் புறப்பாடு | காலை 6.00 மணி |
| சித்திரை வீதி, உத்திர வீதி வழியே தாயார் சந்நிதி சேருதல் | காலை 9.30 மணி |
| தாயார் சந்நிதி முன் மண்டபம் சேர்தல் | பகல் 11.45 மணி |
| முதல் ஏகாந்தம் | பகல் 12.30 மணி முதல் 1.45 வரை |
| தளிகை அமுது செய்து புறப்பாடு | பகல் 1.45 மணி |
| பங்குனி உத்திர மண்டபம் சேருதல் | பகல் 2.00 மணி |
| பொதுமக்கள் சேவை | பகல் 3.00 மணி முதல் இரவு 10.30 வரை |
| சின்னப் பெருமாள் தீர்த்தவாரி கண்டருளி தாயார் சந்நிதி சேருதல் | இரவு 10.30 |
| தாயார் நந்நிதி சேருதலின் ஏகாந்தம் | இரவு 11.30 மணி |

| | |
|---|---|
| திருமஞ்சனம் | இரவு 12.00 மணி முதல் அதிகாலை 3.00 மணி வரை |
| மூன்றாவது ஏகாந்தம் | அதிகாலை 3.30 மணி முதல் 4.30 மணி வரை |
| தாயார் மூலஸ்தானம் சேருதல் | காலை 5.30 மணி |
| நம்பெருமாள் கோரத்திற்குப் புறப்பாடு | காலை 5.45 மணி |
| ரத யாத்திரை | காலை 6.30 மணி |
| தேர்வடம் பிடித்தல் | காலை 7.15 மணி |

பங்குனி உத்திர நாளில் கருவறை சேவை கிடையாது.

உறையூர் நாச்சியாரை நம்பெருமாள் மணம் செய்ததன் தொடர்பாக எழுந்துள்ள நூல்கள் ஐந்து.

ஒன்று நிகளாபுரி மகாத்மியம். இரண்டாவது திவ்ய சூரி சரிதம், மூன்றாவது கோயிலொழுகு, நான்காவது லட்சுமி காவியம், ஐந்தாவது ஸ்ரீ ரெங்கராஜ சரித புராணம் ஆகும்.

பிரம்மோத்சவத்தின் ஆறாம் திருநாளில் பெருமாள் உறையூருக்கு எழுந்தருளிக் கமலவல்லி நாச்சியாரோடு ஏகசிம்மாசனத்தில் எழுந்தருளிச் சேவை சாதிக்கிறார்.

ஸ்ரீரங்க மகாத்மியம், லட்சுமி காவியம் முதலியவற்றில் சொன்னவாறு பங்குனி மாதம் உரோஹிணியில் கொடியேற்றம் ஆகிப் பத்து நாள் விழா நடைபெற்று வருவதன் சுருக்கமான விளக்கம் காண்போம்.

முதல் திருநாள் ரோஹிணியில் வெண்கல ரதத்தில் எழுந்தருளுகிறார். அரையர் சேவை, கோயில் பாசுரங்கள் விண்ணப்பித்தல், கருடக்கொடி திருவீதி எழுந்தருளல், கொடியேற்ற மண்டபத்தில் மட்டும் பஞ்சாங்க சிரவணம் ஆகியன நடைபெறும். கொடியேற்றம், பேரீதாடனம், கண்ணாடி அறையில் சேர்த்தி, உபய நாச்சியாரோடு திருவீதி உலா, யாக சாலையில் திருமஞ்சனம்,

பஞ்சகுண்ட ஹோமம், சந்நிதி வாயிலில் யாத்ரா தானம், அரையர் இசையோடு வலம் வருதல் படியேற்றம் நடைபெறுகின்றன.

இரண்டாம் நாள் பெருமாள் காலையில் வீதி எழுந்தருளுவதில்லை.*

இன்றைய மண்டகப்படி செலவுகளைத் திருச்சிப் பரியாரிகள் ஏற்பர். தோளுக்கிளியானில் புறப்பாடு.

மூன்றாம் நாள் விழாவில் சீயர்புரத்துக்காக இரவிலேயே பெருமாள் பல்லக்கில் புறப்பட்டுப் பிரதட்சணமாய் வடக்கு வாசல் வழியாக மேலூர் சென்று விருட்சி தீர்த்தத்தில் தீர்த்தம் சாதித்துக் கொள்ளிடத்தில் இறங்கி, காவேரியையும் தாண்டி இரவெல்லாம் வழி நடந்து உதயரு சீயர்புரம் அம்மையார் தண்ணீர்ப் பந்தலில் தத்யோனம், கீரை, பாகற்காய் வடுமாங்காய் ஊறுகாய் அமுது செய்து அங்கிருந்து புறப்பட்டு அந்தண நல்லூர் வரை உபயங்கள் கண்டருளி, பலாச தீர்த்தத்தில் தீர்த்தம் சாதித்து மண்டபத்தில் ஆராதனை, நைவேத்தியம் கண்டருளுவார். பின்னர் மாலையில் புறப்பட்டுக் காவேரி தாண்டி மேலூர் வழியே வந்து வடக்கு வாசல் வழியே நுழைந்து வீதி எழுந்தருளி உள்ளே செல்வார்.

நான்காம் நாள் கருடசேவை. பெருமாள் காலையில் பல்லக்கில் புறப்பட்டுக் கொள்ளிடம் இறங்கி நொச்சியத்துக்கு மேற்கில் ஸ்ரீரங்க ராஜபுரத்திலுள்ள ரெட்டிராயர் மண்டபத்திலிருந்து சாயங்காலம் கருட வாகனத்தில் புறப்பட்டு வீதியெழுந்தருளி உட்செல்வார். நொச்சியம் இரட்டை மண்டபம் பழுதடைந்திருப்பதால் பெருமாள் நொச்சியத்திற்கு எழுந்தருளாது ரெங்கவிலாச மண்டபத்திலிருந்து கருட வாகனத்தில் புறப்பாடு, வாகன மண்டபத்திற்கு வந்து சேர்தல், புறப்படுதல் கண்ணாடி அறை சேர்தல், என்று நிகழ்ச்சி அமைகிறது.

ஐந்தாம் திருநாள் காலை சேஷ வாகனத்தில் வீதியெழுந்தருளிப் பகலில் உறையூர் தாயாருக்குத் தான் அமுது செய்த

* பரியாரிகள் மண்டபத்துக்கு ஒரு வருடம் வட திருக்காவேரிப் பந்தலிலும், அடுத்த வருடம் தெற்கு வாயில் 16 கால் மண்டபத்திற்கு அருகிலுள்ள இப்போது சைதன்யர் திருப்பாதம் அமைக்கப் பெற்றுள்ள மண்டபத்திலும் முன்பு எழுந்தருளினார். இப்போது எழுந்தருளுவதில்லை. கருட மண்டபத்திலேயே மண்டகப் படியாகி உள்ளே எழுந்தருளுவார்.

சமாதானம் பொங்கல் வாத்யங்களுடன் உறையூருக்கு அனுப்புவார். மாலையில் கற்பக விருட்சத்தில் வீதியெழுந்தருளி உள்ளே செல்வார்.

ஆறாம் திருநாள் அதிகாலையில் உறையூர் புறப்பட்டுச் செல்வார். உறையூர் செல்லும் வழியில் திருப்பாணாழ்வார் திருவதரித்த கழனியில் பொன்னடி சாற்றிய பிறகு குடமுருட்டி ஆற்றினைத் தாண்டி எதிர்த்தட்டு மண்டபத்தில் எழுந்தருளுவார். உறையூர் தாயார் பரிஜனங்களை அனுப்பி மேள வாத்தியங்களோடு மரியாதைகளைச் சமர்ப்பிப்பதை பெருமாள் மண்டபத்திலிருந்து புறப்பட்டு, எதிர் கொண்டு பெற்றுக் கொள்வார்.

சந்நிதிக் கோபுரத்திற்குள் நுழைந்ததும் தாயார் தெப்ப மண்டபத்தில் இறங்கிக் கோயில் மகாஜனம் உபயம் கண்டருளுவார்.

உறையூருக்குப் பெருமாள் எழுந்தருளும்போது காலை 11.00 மணியாகும். பெருமாள் பல்லக்குடன் பகல் பத்து மண்டபத்திலே எழுந்தருளுகையில், முன்னர் தேவதாசி ஒழிப்புச் சட்டத்தின் முன்பு, தேவதாசிகள் பாட்டு மேள வாத்தியமும் முழங்கின.

சந்நிதிக்கெதிரில் பல்லக்கோடு எழுந்தருளின பெருமாள் பல்லக்கிலேயே நாச்சியாருக்கு நேராக எழுந்தருளி புத்தாடை, சந்தனம், மாலை திலகம் முதலியன அணிந்து களைந்த மாலையை நாச்சியாருக்கு அனுப்புவார்.

நாச்சியார் மாலையணிந்து கொண்ட பிறகு ஏகாந்த பிரசாதம் நிவேதனமாகும். முதலில் பெருமாளும், பிறகு நாச்சியாரும் வெள்ளிக்கிழமை மண்டபத்தில் எழுந்தருளித் திருவாராதனம் முதலியன ஆகும். இரவு பெருமாள் அனைவருக்கும் சேவை சாதித்து, நாச்சியாரை உள்ளே அனுப்பிப் புறப்பட்டுத் திருவரங்கம் வந்து வெளியாண்டாளுடன் மாலை மாற்றிக் கொண்டு கண்ணாடி அறை சேரக் காலை 4 மணி ஆகும்.

ஏழாம் திருநாளில் பெருமாள் காலையில் வீதி எழுந்தருளுவதில்ல. கண்ணாடி அறையில் பொதுஜன சேவை சந்தனு மண்டபத்திலிருந்து திருச்சிவிகையில் புறப்படுவார்.*

* லட்சுமி காவியம் என்னும் நூலில் (உத்தம நம்பி திருமலாசார் எழுதியது) பெருமாள் உறையூர் எழுந்தருள வேண்டிய நான் என ஐந்தாம் நாள் கூறப்பட்டுள்ளது. இப்பொழுது ஆறாம் திருநாள் ஆயில்யத்தன்று எழுந்தருளுகிறார்.

அரங்கநாதப் பெருமாளுக்கும், கமல வல்லித் தாயாருக்கும் மணம் நிகழ்ந்தது எப்படி என்பதனை லட்சுமி காவியம் விளக்குகிறது.

அந்நூலில் நான்காம் சர்க்கத்தில் பிரம்மா, சோழ மன்னனுக்குத் தபவலிமையால் பிறந்த லட்சுமியை மணம் செய்து கொள்ள வேண்டும் எனவும், நீலி வனத்திலிருந்து வியாக்ராசுரனை வதம் செய்ய வேண்டும் என்று விண்ணப்பித்ததாகவும், பிரம்மாவின் வேண்டுகோளை ஏற்றதாகவும் கூறியுள்ளது.

அவ்வாறே ஐந்தாம் சர்க்கம் முதல் திருநாள், இரண்டாம் திருநாள், மூன்றாம் திருநாளில் நடைபெற்றவற்றை விளக்குகிறார்.

பங்குனி மூன்றாம் நாள் குதிரை வாகனமாக இருந்தது கடுமையான மழை பின்பு பெய்தமையால் பல்லக்காக மாறிய செய்தியான கோயில் ஒழுகு நூலில் காணப்படுகிறது.

“ஒரு பங்குனித் திருநாளில் குதிரை மீது எழுந்தருளி வருகையில், உத்தம நம்பி தந்தச் சப்பரம் அளித்துத் திருப்பல்லக்கிலே எழுந்தருளும்படி கேட்டதாகவும் அது முதல் பல்லக்கில் வருகிறார்” என்றும் கூறுகிறது.

நாலாம் நாள் கருட வாகன மண்டபத்தில் இருக்கையில் திருமணப் பருவத்திலுள்ள லட்சுமியின் சுயம்வரத்திற்குப் பெருமாளை அழைத்து வர நிகளாபுரி அரசன் கரிகாலன் அழைப்பு விடுத்தது போலவே, லட்சுமியும் தன் தோழி ஹரிலோகையை அனுப்பி வைத்திருந்தாள். வந்த ஹரிலேகையிடம் வருவதாகச் சொல்லி அனுப்பிய பெருமாள் ஐந்தாம் திருநாளன்று உறையூர் சேர்ந்த போது, சோழ அரசன் வரவேற்று அழைத்துச் சென்று இடமளித்தார். லட்சுமி சுயம்வர மண்டபத்தில் அனைவருக்கும் மத்தியில் அரங்கனுக்கே மாலையிட்டார்.

அரசர் முறைப்படி உறையூர் வல்லிக்கும், அரங்கநாதனுக்கும் அக்னி சாட்சியாக மணம் முடித்து வைத்தார். அத்தனை மூர்த்திகளுக்கும் இடையில் ரங்கநாதனையே அழகான மணமகனாக உறையூர் வல்லி முடிவு செய்தமையால் அவர் அழகிய மணவாளன் ஆனார்.

அரசர் சீர் வரிசைகள் முதலியவற்றுடன் அழகிய மணவாளனையும், உறையூர் வல்லியையும் அனுப்பி வைக்க வழியில் வியாக்ராசுரன் படையுடன் வந்து முற்றுகையிட்டார். விசுவக்சேன பரிகரமான கஜானன் வியாக்ராசுரனை, அழகிய மணவாளனைச் சாட்சியாக வைத்து அவனையும் படையையும் அழித்தார்.

அழகிய மணவாளன் வியாக்ராசுரனை வதம் செய்ததால் அவருக்கு 'வியாக்ராசுர நிஷூநன்' என்னும் பெயர் ஏற்பட்டது.

ஸ்ரீரங்க மகாத்மியம் நூலில் அழகிய மணவாளன் இராமாவதாரத்துக்கு முன்னரே வியாக்ராசுரனை வதம் செய்யக் காவேரி வந்த செய்தி காணப்படுகிறது.

ஆறாம் திருநாள் ஆயில்யத்தன்று காலையில் பெருமாள் புறப்பட்டுத் தாமோதர கோபுரத்தின் வழியாகப் பல்லவராஜன் தோட்டம் சென்று சாயங்காலம் யானை வாகனத்துக்கேற்ற உடைகளோடு வந்து, யானையேற்று மண்டபத்தில் யானையேறி வீதிவலம் வந்து, வாகனத்திலிருந்தவாறே திருவந்திக்காப்புக் கண்டருளி, யானையை விட்டிறங்கி உள்ளே போய்த் திருமஞ்சனம் செய்து கொண்டார். (மணவாள மாமுனி சந்நிதிக்குப் பல்லவராயன் மடம் என்று பெயர். கோயிலை ஆச்சரயித்திருக்கும் கேசாந்தரி ஜீயர்களுக்கா அது பல்லவராயனால் கட்டப்பட்டதென்று அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது. இம்மன்னவனே கிழக்கே பல்லவராஜன் தோட்டம் என்று பெருமாளுக்கு அளித்தார்.)

ஏழாம் திருநாளில் அழகிய மணவாளப் பெருமாள் வசந்த வேடம் தரித்துக் கொண்டு உபய நாச்சியாரோடு சூர்ணாபிஷேகம் செய்து கொண்டு, ஒருவர் மீது மற்றொருவர் மஞ்சள் பொடியைத் தூவி விளையாடியதாகவும், மாலையில் புறப்பட்டுக் கொட்டார வாசலில் நெல் அளவு கண்டருளி, பிரதட்சணமாய் நாச்சியார் கோயில் சென்று, திருமஞ்சனம் முதலியவற்றின் பின் பூந்தேரில் புறப்பட்டு வீதி வலம் வந்து உள்ளே சென்றார். இப்போது பூந்தேர் முன்னும் திருமஞ்சனம் என்றும் நடக்கிறது.

இனி இப்போதைய ஏழாம் திருநாள் விழாவினைக் காண்போம்.

பெருமாள் காலையில் வீதி எழுந்தருளவதில்லை. மாலை உபய நாச்சியாரோடிருந்து ஜலக்கிரீடை, சூர்ணாபிஷேகம், நெல் அளவு இவை ஆனதும் வீதியெழுந்தருளி, ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதியில் திருமஞ்சனம் செய்து கொண்டு திருக்கோயில் சேர்வார்.

லட்சுமி காவியம் கூறும் எட்டாம் திருநாள் விழாவினைப் பற்றிய குறிப்புகளைக் காண்போம்.

பெருமாள் காலையில் திருவீதி எழுந்தருளாமலே தெற்கு வாசல் வழியாகக் கிழக்கே சென்று அசுவத்த தீர்த்தத்தில் தீர்த்தம் சாதித்து வேலேந்தி தாசருக்கு ஆனையேற்றம் அனுக்ரஹத்து, வழியில் ஸ்தலத்தார்களையும் அனுக்ரகித்து, பில்வ தீர்த்தத்தில் தீர்த்தம் சாதித்து எல்லைக்கரை மண்டபம் சென்று எல்லைக்கரை இராமானுஜரையும், ஸ்ரீரங்க நாராயண ஜீயளர அனுக்கிரகிப்பார். பண்டைய நாட்கள் எல்லாம் பிரம்மோத்சவ காலங்களிலும் எட்டாம் திருநாளுக்கு எல்லைக்கரை மண்டபத்திற்கு எழுந்தருளுவது வழக்கம்.

இப்போது பங்குனி பிரம்மோத்சவத்திற்கு மட்டும் எல்லைக் கரை மண்டபம் எழுந்தருகிறார். ஸ்ரீரங்கராசனுடைய கி.பி. 1620, கி.பி. 1650 ஆண்டுக் கல்வெட்டுகள் பெருமாள் தெப்பத்திருநாளன்று மாசி மூன்றாம் உபயம் பற்றியும், எட்டாம் நாளில் எல்லைக்கரை மண்டபத்திற்கு எழுந்தருளுதல் பற்றியும் குறிக்கின்றன.

எல்லைக்கரையில் இராமானுஜஸ்தானத்தில் யாரும் இல்லாததால் இந்த மரியாதை நடைபெறுவது இல்லை.

ஸ்ரீரங்க நாராயண ஜீயருக்கு அனுக்கிரகிப்பது ஏன்? கூரநாராயண ஜீயர் என்பவர் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் பட்டத்தில் முதலில் எழுந்தருளி நம் பெருமாளுக்குப் பல திருப்பணிகள் ஆற்றியவர். இவரைப்பற்றிக் கோயில் ஒழுகு குறிப்பிடுகிறது.

இரவில் குதிரை வாகனத்தில் புறப்பட்டுக் கொள்ளிடம் இறங்கி வடக்கு வாசல் வழியாக ஊருக்குள் நுழைந்து கோரதத்தினடியில் வையாளி ஆகி உள்ளே எழுந்தருளுவார்.

லட்சுமிகாபியம் எட்டாம் திருநாளைப் பற்றிக் கூறுவது இது.

"பூரத்தன்று காலையில் அழகிய மணவாளன் ஸ்ரீரங்கத்தின் எல்லையைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு பத்ர, சுபத்ரர்கள் உள்ள நாழிகை கேட்டான் வாசல் வந்து பஞ்ச கோபுரங்கள் கடந்து வாமனராச்மத்தைப் பார்த்துக் கொண்டே தென் திருக்காவிரியின் வடகரை சென்றார். அழகிய மணவாளன் காவேரிக் கரையிலிருந்து கிழக்கே சென்று வடக்கே திரும்பி, திருவரங்கத்திற்கும், மாதங்கவனம் என்னும் திருவானைக் காவலுக்கும் உள்ள எல்லைக் கல்லையும், வழியிலிருந்த ச்வேதாங்கணம் என்றும் பில்ப தீர்த்தம் சென்று வடதிருக்காவிரி தாண்டி, கதம்பதீர்த்தம் என்றும் திருமங்கை யாழ்வாருடைய ஸ்தானம் வழியாகத் திருமங்கையாழ்வாருடைய மண்டபம் சென்றார். மாலையில் குதிரையேறிப் புறப்பட்டுக் காவிரியில் விளையாடி, வடக்கு வாசல் வழியாக நுழைந்து மூலைகளில் அனுபவித்துக்கொண்டே வீதி வலம் வந்து உள்ளே எழுந்தருளினார்.

கந்தாடை ராமானுஜர் பட்டத்துக்கு இளவரசாயுள்ள எல்லைக்கரை ராமானுஜனுக்கு எல்லைக்கரை மண்டபம் எழுந்தருளும் விழா நாளில் உத்தம நம்பி ஐயங்கார் மண்டபத்தில் பெருமாள் சேவை மரியாதைகளையும், எல்லைக்கரை மண்டபத்தில் பெருமாள் ஸ்ரீபாதம் தாங்குவாருடைய தோள்களை விட்டுக் கீழே எழுந்தருளிய பின் மணியாருக்கும் கந்தாடை இராமானுஜனுக்கும் பிறகு பெருமாள் சேவையும் சடகோபமும் பெற்றுக் கொள்வதுதான் மரியாதை.

*ஒன்பதாம் திருநாள் பங்குனி உத்திரம் :* சாத்திரங்கள் "பரமபுருஷன் ஒருவனே ஆண்மகன் மற்ற உயிரினங்கள் அனைத்தும் அவனுக்கு ஸ்வரூபத்தால் சேஷ பூதர். ஆகையால் உருவத்தால் எப்படியிருந்தாலும் பெண் மக்களே" என்று கூறும்.

இவ்வுண்மையினைக் கிருஷ்ணாவதாரத்தில் ஆய்ச்சிகளுக்கு ஊடலை விளைத்து, அவர்களுடன் ப்ரண கலகம் கொண்டாடிய திலிருந்து நாம் உணருகிறோம்.

இந்தக் கலகத்தினை மண்ணுலகில் வாழும் தம்பதிகளின் கலகம் போலே எண்ணக்கூடாது. ஏனென்றால் பரமாத்மாவுக்கும்,

ஜீவாத்வாவுக்குமுள்ள அப்ராக்ருத காமம் என்பது பிராக்ருதக் காமச் சாலையில் வெளிப்படுவதாலே அவ்வாறு எண்ணக்கூடாது என்பர்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி ஆறாம்பத்தில் இரண்டாம் திருவாய்மொழி, எம்பெருமாள் காலந்தாழ்த்தி வரக்கண்ட தலைவி, உமக்கு வேண்டின பெண்கள் இருக்க இங்கே வரவேண்டா, என்று ஊடல் திறத்தினால் விலக்கியதை அருளிச் செய்தல் என்றவாறு பத்துப் பாசுரங்கள் பாடியுள்ளார்.

மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் முன்பு
நாதைஞ்சுதவன்
மன்னுடையிலங்கை அரண்காய்ந்த மாயவனே
உன்னுடைய கண்டாயம் நானறிவன் இனி அது கொண்டு
செய்வாதென்?
என்னுடைய பத்தும் கழலும் தந்து போகு நம்ம!

போகு நம்பீ! உன் தாமரை புரைகண்ணிணையும்
செவ்வாய் முறுவலும்
ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோமே? யாம்
தோகை மாமயிலார்கள் நின்னருள் சூடுவார்
செவியோசைவைத்தெழ
ஆகன் போகவிட்டுக் குழலூது போயிருந்தே

போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்கு உரை
நம்பீ! நின்செய்ய
வாயிருங்கனியும் கண்களும் விபரீதமிந்நான்
வேயிருந்தடற்தோளினார் இத்திருவருள் பெறுவார்
யவர் கொல்
மாயிருங்கடலைக் கடைந்த பெருமானாலே

ஆலினிலையே உலகமுண்டு அன்று நீகிடந்தாய் - உன்
மாயங்கள்
மேலே வானவருமறியார் இனியெம்பரமே
வேலினேர் தடங்கண்ணினார் விளையாடு சூழலைச்
சூழவே நின்று
காலி மேய்க்க வல்லாய்! எம்மை நீகழ நேலே

கழறேல் நம்பி! உன்கைத்தவம் மண்ணும் விண்ணும்
நன்கறியும் திசைக்கர
நிழறு தொல்படையாய்! உனக்கொன்றுணர்த்துவன் நான்
மழறு தேன்மொழியார்கள் நின்னருள் சூடுவார் மனம் வாடி
நிற்க - எம்
குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே.

குழகியெங்கள் குழமணன் கொண்டு கோயின்மை செய்து
கண்மமொன்றில்லை
பழகியாமிருப்போம் பரமே இத்திருவருள்கள்?
அழகியாரிவ்வுலக மூன்றுக்கும் தேவினம் தருவார்
பலருளர்
கழகமேலேறல் நம்பீ! உனக்குமிளை தேகன்மமே.

கன்மமன்றெங்கள் கையிற் பாவை பறிப்பது கடல்
ஞாலமுண்டிட்ட
நின்மலா! நெடியாய்! உனக்கேலும் பிழை பிழையே
வன்மமே சொல்லியெம்மை நீவிளையாடுதி அது கேட்கில்
என்னைமார்
தன்மபாவமென்னார் ஒரு நான்று தடி பிணக்கே.

பிணக்கியாவையும் யாவரும் பிழையாமல் வேதித்தும்
வேதியாதது - ஓர்
கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞான மூர்த்தியினாய்
இணக்கியெம்மை யெந்தோழிமார் விளையாடப்போது
மினென்னப் வேந்தோகை
உணக்கிரூவளைத்தால் என் சொல்லாடுக வாதவரோ

உகவையால் நெஞ்சமுள்ளுருகி உன் தாமரைத் தடங்கண்
விழிகளின்
அகவலைப் படுப்பான் அழித்தாயும் திருவடியால்
தகவு செய் நிலை எங்கள் சிற்றிலும் யாமருசிறு சோறும்
கண்டு - நின்
முகவொளி கிழகமுறுவல் செய்து நின்றிலையே

நின்றிலங்கு முடியினாய்! இருபத்தோர் காலரசுகளை கட்ட
வென்றி நீள் மழுவா! வியன் ஞால முன்படைத்தாய்
இன்றிவ்வாயர் குலத்தை வீடுய்யத் தோன்றிய
கருமாணிக்கச்சுடர்
நின் தன்னால் நிலவே படுவோம் என்றும் ஆய்ச்சியோமே.

ஆய்ச்சியாகிய வண்ணையால் அன்று வெண்ணெய்
வார்த்தையின் சீற்றமுண்டமு
கூத்தவப்பன் தன்னைக் குருடர்ச்சடகோபன்
ஏந்திய தமிழ் மாலை ஆயிரத்துள் இவை யுமோர்
பத்திசையொடும்
நாத்தன்னால் நவில உரைப்பார்க்கு இல்லை நல் குரவே.

**நம்மாழ்வார் ஆய்ச்சியர் நிலையடைந்து பாடிய பாடல்களில் முதலாவது பாடலான 'மின்னிடை' என்ற இப்பாடல் நாச்சியார் பிரணகலகத்தில் சேவிக்கப்படுகிறது.**

குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி ஏர்மலர்ப்பூங்குழல் பாடலில் 'ஆய்ச்சியர் ஊடி அமலனை என்கியுரைத்தல்' என்பதில்

ஏர்மலர்ப் பூங்குழல் ஆயர்மாதர்
எனப்பலருள்ள இவ்வூரில் - உன்தன்
மார்பு தழுவுவதற் காசையின்மையறிந்தறிந்தே
உன்தன் பொய்யைக் கேட்டு
கூர்மழை போற் பனிக்கூதயெய்திக்
கூடி நடுங்கி யமுனை யாற்றில்
வார்மணற்குன்றில் புலர நின்றேன்
வாசுதேவா! உன்வரவு பார்த்தே.

என்று தொடங்கிப் பாடுகிறார்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் 'காதில் கடிப்பிட்டு' என்று தொடங்கும் பாசுரத்தில் ஆய்ச்சி நிலையை அடைந்து கண்ணனோடு ஊடல் கொள்ளும் பதிகங்களை அருளிச் செய்தனர்.

## ப்ரணய கலகம்

திருவரங்கத்தில் உறையூருக்கு நம்பெருமாளுக்கும் நடைபெறும் ப்ரணயகலகம் (அன்புச் சண்டை) நம்மாழ்வாராலே தீர்த்து வைக்கப்படும் ப்ரணயகலக உத்சவம் வருடந்தோறும் நடைபெறுகிறது. பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் ஆச்சார்யனே சேர்த்து வைக்கிறான் என்னும் அரும் பொருளையும் இது காட்டுகிறது என்பர்.

ஒன்பதாம் திருநாளில் பெருமாள் காலையில் பல்லக்கில் புறப்பட்டு மாட மாளிகை சூழ் வீதி என்று பெயர் பெற்ற சித்திரை வீதியான, கோயில் ஒழுகு குறிப்பிடும் திங்களும் விழாவறாத திருவீதி வழியில் வலம் வந்து, அரையர் இசையுடன் வலம் வந்து ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதிக்கு வருகிறார்.

பெருமாள் ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதிக்குள் செல்கையில் கதவுகள் சாற்றப் பெற்று, மலர்களையும், பழங்களையும் எறிந்து

பெருமாளைத் தடுத்து வெளியே நிறுத்தி வைப்பார்கள். கதவு திறக்கும் போது பெருமாள் உள்ளே போவதும் கதவும் சாற்றும்போது பெருமாள் பின்னால் ஒதுங்குவதுமாயிருக்கும். வேடிக்கையான நிகழ்ச்சி இது.

பெருமாளுக்கும் ஸ்ரீ ரங்கநாச்சியாருக்கும் சமாதானம் பண்ணி வைப்பதற்காக மணியகாரர் நியமனத்தின் பேரில் கோயில் மகாஜனம் ஸ்ரீ நம்மாழ்வாரையும் அரையர்களையும், எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வருவார்.

பரமபத வாசலிலிருந்து ஆழ்வார்களும் அரையர்களும் சேர்ந்து தாயார் சந்நிதிக்கு எழுந்தருளுவர். பெருமாளும் சமாதானத்திற்கு அருளப்பாடு சாதித்து பெருமாள் சொல்ல வேண்டியவைகளை அரையர்கள் தாள இசையில் இசைப்பர். பெருமாள் தாயார் விவாதத்தைத் தம்பிரான்மார் பாசுரங்கள் கொண்டு சேவிப்பார்கள்.

அரையர்கள் பெருமாள் வார்த்தையைப் பெருமாளிடம் விண்ணப்பித்துத் தாயாரிடமும் விண்ணப்பிப்பார்கள். பண்டாரிகள் சொல்லிய தாயார் வார்த்தையை அரையர்கள் பெருமாளிடம் விண்ணப்பிப்பார்கள். (பெருமாள் அஞ்சு வார்த்தை, தாயார் அஞ்சு வார்த்தையானது இரட்டிப்பாக்ரபடியால் அரையர்கள் 15 தடவையும் பண்டாரிகள் 5 தடவையும் சொல்லுவார்கள்.

1. பாசுரம், வியாக்யானம் பெருமாள் அருளிச் சொல்லுவதாகச் சொல்வது – 5

2. பாசுரம், வியாக்யானம், பெருமாள் அருளிச் செய்ததாகத் தாயாரிடம் சொல்வது – 5

3. அரையர்கள் பாசுரம் சேவித்த பிறகு தாயார் அருளிச் செய்வதாகப் பண்டாரி சொல்வது – 5

4. பாசுரம், வியாக்யானம், தாயார் அருளிச் செய்ததைப் பெருமாளிடம் அரையர்கள் விண்ணப்பிப்பது – 5

ஆக அரையர்கள் விண்ணப்பிப்பது 15

பண்டாரிகள் விண்ணப்பிப்பது 5

**பெருமாள் அருளிச் செய்த ப்ரகாரம் (பெருமாள் கூறுவதாம்)**

(பெருமாள் கூறுவதாகக் கூறுவது) "நாம் உத்சவார்த்தமாகப் புறப்பட்டருளி திருவீதிகளெல்லாம் வலம் வந்து தேவதைகள் புஷ்பவர்ஷம் வர்ஷிக்க, பிராம்மணரெல்லோரும் தோத்திரம் பண்ண, இப்படி பெரிய மனோரதத்தோடே தங்களிடத்தில் (தாயாரிடத்தில்) வந்தால், தாங்களெப்போதும் எதிரே விடைகொண்டு திருக்கை கொடுத்து, உள்ளே எழுந்தருளப் பண்ணிக் கொண்டுபோய், திவ்ய சிம்மாசனத்திலேறியருளப் பண்ணி, திருவடி விளக்கி, திருவொத்து வாடை சாத்தி, திருவாய வட்டம் பரிமாறி, மங்களாரத்தி கண்டருளப் பண்ணி சுருளமுது திருத்திச் சமர்ப்பித்து – இப்படி அருகை தூப தீப உபசாரங்களெல்லாம் நடக்குமே, இன்றைக்கு – நாமெழுந்தருளின விடத்திலே திருப்பல்லக்கைத் தொட்டுத் தள்ளி, திருக்காப்பு சேர்த்துக் கொண்டு திருமுக மண்டலத்தைத் திருப்பிக் கொண்டு, திருச்சேவடி மார்கள் கைகளாலே பந்துகளாலும் பழங்களாலும் விட்டெறிவித்து, இப்படியொரு நாளும் பண்ணாத அவமானங்களையெல்லாம் இன்றைக்குப் பண்ண வந்த காரியம் ஏதென்று கேட்டு வரச் சொல்லிப் பெருமாளருளச் செய்த பிரகாரம்." (முன்னாலே எல்லாம் உபசாரம் பலமாயிருக்குமே இப்போது துரத்துவது ஏன் என்று கேட்கிறார்.)

**நாச்சியார் அருளிச் செய்த பரகாரம் (தாயார் கூறுவதாம்)**

(தாயார் கூறுவதாகக் கூறுவது) தாம் எப்போதும் எழுந்தருளினதே மெய்யானால் திருக்கண்களெல்லாம் சிவந்திருப்பானேன்?

திருக்குழல் கற்றைகளெல்லாம் கலைத்திருப்பானேன்?

கஸ்தூரி திருமண் காப்பு களைந்திருப்பானேன்?

திருவதரம் வெளுத்திருப்பானேன்?

திருக்கழுதாதல்லாம் நகக்ஷதங்களாயிருப்பானேன்?

திருமேனியெல்லாம் குங்குமம் பொடிகளாயிருப்பானேன்?

இப்படிப்பட்ட அடையாங்களைப் பார்த்து நாச்சியாருக்கு மிகவும் திருவுள்ளம் கலங்கியிருக்கிறது. ஆனபடியினாலே, உள்ளே

யிருக்கிறவர்களை வெளியே விட வேண்டாமென்றும், வெளியிலேயிருக்கிறவர்களை உள்ளே விட வேண்டாமென்றும், இப்படி கட்டுப்பாடு பண்ணிக் கொண்டிருக்கிற சமயத்திலே உள்ளே விண்ணப்பம் செய்யச் சமயமில்லை. ஆனபடியினாலே நேற்றைக்கு எழுந்தருளின விடத்திலே தானே இன்றைக்கு எழுந்தருளச் சொல்லி நாச்சியாருளிச் செய்த பிரகாரம். ( தலை கலைந்திருக்கிறது. திருமண் களையப்பட்டிருக்கிறது. நேற்றுப் போன இடத்துக்கே செல்லுங்கள் என்று தாயார் சொல்லி விடுகிறார்.)

## பெருமாள் அருளிச் செய்த பிரகாரம்

திருக்கண் சிவந்திருப்பானேனென்றால் நாம் செங்கோலுடைய திருவரங்கச் செல்வரானபடியினாலே கவிரி முடித்து, கச்சைகட்டி, வல்லயமேந்தி, குதிரை நம்பிரான் மேலே ராத்திரி முழுவதும் நித்திரையின்றி ஜகத்ரட்சணார்ந்தமாக ஜாரூகளாயிருந்த படியினாலே திருக்கண் சிவந்து போச்சுது.

திருக்குழலி கற்றைகளெல்லாம் கலைந்திருப்பானேனென்றால் காற்றடித்துக் கலைந்து போச்சுது.

கஸ்தூரி திருமண் காப்பு களைந்திருப்பானேனென்றால் அதிகடோரமான சூரிய கிரணத்தால் கரைந்தது போச்சுது.

திருவதரம் வெளுத்திருப்பானேனென்றால் அசுர நிரசனார்த்தம் தேவதைகளுக்காக சங்கத் வானம் பண்ணின படியினாலே ஸ்ரீபாஞ்ச சன்னிய ஸ்பரித்தாலே வெளுத்துப் போச்சுது.

திருக்கழுத்தெல்லாம் நகஷதமாயிருப்பானேனென்றால் அதிப்ராயசமான காடுகளிலே போகிற போது பூமுள்ளு கிழித்தது.

திருமேனியெல்லாம் குங்கும பொடிகளாயிருப்பானேனென்றால் தேவதைகள் புஷ்பம் வர்ஷித்த படியினாலே புஷ்ப ரேணு (மகரந்தம்) படிந்தது.

திருப்பரி வட்டங்களெல்லாம் மஞ்சள் நிறமாயிருப்பானே னென்றால் சந்தியா ராகம் போலேயிருக்கிற திவ்யபீதாம்பரமான படியினாலே உங்கள் கண்ணுக்கு மஞ்சள் வர்ணமாகத் தோன்றுகிறது.

திருவடிகளெல்லாம் செம்பஞ்சுக் குழம்பாயிருப்பானேனென்றால் குதிரை தம்பிரான் மேலேறி அங்க வடிவ மேல் திருவடிகளை வைத்துக் கொண்டு போன படியினாலே திருவடிகள் சிவந்து போயின. இப்படிப்பட்ட அடையாளமேயொழிய வேறில்லை.

ஆனால் போது கழிந்து வருவானேனென்றால் வேட்டையாடி வேர்த்து விடாய்த்து வருகிற சமயத்திலே திருமங்கையாழ் வானென்பவன் ஒருவன் வந்து சர்வஸ்வாபஹாரணத்தையும் பண்ணிக் கொண்டு போனான். அவனைச் சில நல்ல வார்த்தைகளைச் சொல்லித் திருவாபரணங்களை மெல்ல வாங்கிக் கொண்டு போய்க் கருவூலத்தில் எண்ணிப் பார்க்குமிடத்தில் கணையாழி மோதிரம் காணாமல் போச்சுது.

அதற்காக விடியப் பத்து நாழிகைக்குப் புறப்பட்டருளி திருவீதிகளெல்லாம் வலம் வந்து, கணையாழி மோதிரத்தைக் கண்டெடுத்துக் கொண்டு மீள வாரா நிற்கச் செய்தே, அப்பொழுது தேவதைகள் பாரிஜாத புஷ்பங்கள் கொண்டு சேவிக்க வந்தார்கள். நாம் நம்முடைய பெண்டுகளண்ணியில் சூடுகிறதில்லையென்று நமக்கு முன்னே வாக்காட்டி நாமும் பின்னே எழுந்தருளினோம்.

ஆன படியினாலே நாம் கொடுத்த புஷ்பத்தையும் வாங்கிக் கொண்டு உள்ளே அழைக்கச் சொல்லி பெருமாளருளிச் செய்த பிரகாரம். (பெருமாள் தாயார் கேட்ட கேள்விகளுக்குச் சொல்லும் சுவையான சமாதானம் இது.)

### நாச்சியார் அருளிச் செய்த ப்ரகாரம்

கணையாழி மோதிரம் காணாமல் போனதே மெய்யானால் விடிய பத்து நாழிகைக்குப் புறப்பட்டருளி உறையூரிலே போய் மின்னிடை மடவார் சேரியெல்லாம் புகுந்து, யதாமனோரதமனுபவித்து அவ்வனுபவத்தாலே உண்டாயிருக்கிற அடையாளங்களெல்லாம் திருமேனியிலே ஸ்பஷ்டமாகத் தோற்றா நிற்கச் செய்தேயும், அவ்வடையாளங்களையும் அந்யாதவாகச் சொல்லிக் கொண்டு நாங்கள் ஏழைகளான படியினாலே இப்படிப்பட்டிருக்கிற

வஞ்சநோக்கிகளையெல்லாம் சொல்லி வந்தாரே. இப்படிப்பட்டிருக்கிற பொய்களையெல்லாம் நேற்றைக் கெழுந்தருளினவிடத்தில் தானே சொல்லிக் கொண்டு இன்றைக்கும் அங்கேதானே எழுந்தருளச் சொல்லி நாச்சியாரருளிச் செய்த ப்ரகாரம். (தாயார், பெருமாள் சொல்வது எல்லாம் பொய். இதை நேற்றைக்குவான இடத்திலே சொல்லுங்கள் என்கிறார்.)

## பெருமாள் அருளிச் செய்த ப்ரகாரம்

நாமானால் உறையூரைக் கண்ணால் கண்டதுமில்லை; காதாலே கேட்டதுமில்லை. துஷ்டர்களாயிருக்கிற பேர்கள் உள்மனதுக்குச் சரிப்போனபடி சொன்னால் நீயும் அந்த வார்த்தைகளைத் தானே கேட்டுக் கொண்டு நம்மையும் ஒரு நாளும் பண்ணாத அவமானங்களெல்லாம் பண்ணலாமா?

நீங்கள் ஸ்திரீகளான படியினாலே முன்பின் விசாரியாமல் படிக்கு அவமானம் பண்ணினீர்களாம் என்கிற அவமானம் உங்களுக்கேயொழிய நமக்குத் தேவையில்லை.

ஆனபடியினாலே நாம் கொடுத்த புஷ்பத்தையும் வாங்கிச் சூட்டிக் கொண்டு நம்மையும் உள்ளேயழைக்கச் சொல்லிபெருமாளுக்குச் செய்த பிரகாரம். (பெருமாள், கெஞ்சுகிறார்)

## நாச்சியார் அருளிச் செய்த ப்ரகாரம்

முந்தாநாள் அழகிய மணவாளம் பெருமாள் வேட்டையாடி வேர்த்து விடாய்த்து எழுந்தருளினாரென்று அடியோங்கள் அதி ப்ரீதியுடனே எதிரே விடை கொண்டு திருக்கைகொடுத்து உள்ளேயெழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய், மங்கள ஹாரத்தி கண்டருளப் பண்ணித் திவ்ய சிம்மாசனத்திலேறியருளப் பண்ணி, திருவடி விளக்கி, திருவொத்துவாடை சாத்தி, திருவால வட்டம் பரிமாறினோம்.

அப்போது அதிக சிரமத்தோடே எழுந்தருளியிருந்தார். ஆனால் இளைப்போ என்று வெந்நீர்த்திருமஞ்சனம் சமர்ப்பித்தோம். அதை நீராடினது பாதியும் நீராடாதது பாதியுமாக எழுந்தருளியிருந்தார்.

ஆனால், இளைப்போ என்று திருவரைக்குத் தகுதியான திவ்ய பீதாம்பரம் கொண்டு சமர்ப்பித்தோம். அதையும் எப்போதும் போலச் சாத்திக் கொள்ளாமல் தாறுமாறாகச் சாத்தியருளினார்.

ஆனால் இளைப்போ என்று சொல்லிக் கஸ்தூரிக்கு திருமண காப்பு சேர்த்து சமர்ப்பித்தோம். அதையும் எப்போதும் போலே சாற்றிக் கொள்ளாமல் திருவேங்கட முடையாள் திருமண் காப்புப் போல கோணமாணலாய்ச் சாத்தியருளினார்.

ஆனால் இளைப்போ என்று தங்கப் பள்ளயத்தில் அப்பம் கலந்த சிற்றுண்டி அக்காரம் பாலில் கலந்து வர்க வகைகள் முதலானதுகளைச் சேர்த்துச் சமர்ப்பித்தோம். அதையும் அமுது செய்தது பாதியும் அமுது செய்யாதது பாதியுமாய் எழுந்தருளியிருந்தார்.

ஆனால் இளைப்போ என்று சுருள் அமுது திருத்தி சமர்ப்பித்தோம். அதையும் அமுது செய்யாதபடிதானே எழுந்தருளியிருந்தார்.

ஆனால், இளைப்போ என்று திருஅனந்தாழ்வானைத் திருப்படுக்கையாக விரித்து அதன்மேலே பெருமாளைத் திருக்கண் வளரப் பண்ணி அடியோங்கள் திருவடிகளைப் பிடித்துக் கொண்டிருந்தோம்.

தாம் வஞ்சக் கள்வனானபடியினாலே எங்களுக்கு ஒரு மாயா நித்திரை உண்டாக்கி, எங்கள் கருவூலம் திறந்து எங்கள் ஸ்தீரிதனங்களான அம்மானை பத்து கழஞ்சி பீதாம்பரங்களையும் கைக்கொண்டு, இன்னவிடத்துக்கு எழுந்தருளுகிறோமென்று சொல்லாதபடி எழுந்தருளினார்.

அந்த உத்தர ஷணமே அடியோங்கள் அச்சமும் திடுக்கிட்டெழுந்திருந்து, திருப்படுக்கையைப் பார்க்குமிடத்தில் பெருமாளைக் காணாமையாலே கைநெரித்து வயிரடித்து, அணுகவிரும், வாயிற்காப்பாளரையழைத்துக் கேட்குமளவில் அவர்கள் வந்து, அம்மானை, பந்து சுழற்சி பீதாம்பரமான ஸ்திரீதனத்தையும் கைக் கொண்டு, இன்னவிடத்துக்கு எழுந்தருளகிறோமென்று

சொல்லாத படிக்குத் தானே எழுந்தருளினாரென்று சொல்ல வந்தார்கள்.

அந்த உத்திர ஷணமே அந்தரங்க பரிஜனங்களாயிருக்கிற திருச்சேவடிமார்களை அழைப்பித்தோம். அவர்கள் வந்து அடி பிடித்து அடிமிதித்துக் கொண்டு யோன பீடத்திலே உறையூரிலே கொண்டு போய்விட்டது. (பெருமாள் முதல் நாள் என்னவெல்லாம் ஜாலம் செய்து மாயம் செய்து தாயாரை ஏமாற்றிவிட்டு உறையூர் போனார் என்று கூறுபவை இவை)

அங்கேதாம் மச்சினியென்று ஒருத்திக்கு முறைமை சொல்லி, மற்றொருத்தி மடியைப் பிடித்ததும் கச்சணி பொன்முலையாள் ஒருத்தியைக் கண்ணாலழைத்ததும், கனிவாய் கொடுத்ததும், கையில் நகக்குறி மெய்யங்கமானதும், கார்மேனியெங்கும் பசுமஞ்சள் பூத்ததுமாகக் (கரும்புத் தோட்டத்தில் யானை சஞ்சரிக்கராப் போலே), தேவரீர் சஞ்சரிக் கிறீரென்று நாங்கள் உசிதமாகப் போகவிட்ட தாதியோடி அங்கே உள்ளபடி வந்து சொன்னாள். உம்மாலே எங்கள் மனது உலைமெழுகாயிருக்கிறது. நீர் இந்த வேளையிலே ஒன்றும் சொல்லாதே போம் போமென்று – நாச்சியாரருளிச் செய்த ப்ரகாரம்.

## பெருமாள் அருளிச் செய்த ப்ரகாரம்

ஒருவருக்கொருவர் சம்சயப்பட்டால், அந்த சம்சயம் ஒரு ப்ரகாலத்திலும் தீராமற் போனால், ப்ரமாணத்தாலே தீர்த்துக் கொள்வார்கள். அந்தப்படி நாம் ப்ரமாணம் பண்ணித் தருகிறோம். நாம் தேவதைகளைத் தாண்டித் தருகிறோம். சமுத்திரத்திலே முழுகுகிறோம். அக்னிப் பிரவேசம் பண்ணித் தருகிறோம். பாம்புக் குடத்திலே கையிடுகிறோம். மழுவேந்துகிறோம். நெய்க்குடத்திலே கையிடுகிறோம். இப்படிப்பட்ட பிரமாணங்களையானாலும் வாங்கிக் கொண்டு, நம்மையும் உள்ளேயழைக்கச் சொல்லிப் பெருமாள் அருளிச் செய்த ப்ரகாம்.

## நாச்சியார் அருளிச் செய்த ப்ரகாரம்

ஒருவருக்கொருவர் சம்சயப்பட்டால் அந்த சம்சயம் ஒரு ப்ரகாரத்தாலும் தீராமற்போனால் ப்ரமாணத்தாலே தீர்த்துக்

கொள்வார்கள். லோகத்திலே பிராமணனுக்கும், பிராமணுக்கும் விவாதம் வந்தால் பிராமணன் பிராமணனைத் தாண்டிக் கொடுப்பான். தாம் தேவாதி தேவனான படியினாலே தேவதைகளைத் தாண்டிக் கொடுக்கிறோமென்று சொல்ல வந்தீரே! அந்த தேவதைகள் தம்முடைய திருவடிகளை எப்போ காணப்போகிறோம்? எப்போ காணப் போகிறோம்? என்று சதா பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறவர்களை வலுவிலே தாண்டித் தருகிறோமென்றால் வேண்டாமென்பார்களா?

சமுத்திரத்திலே மூழ்கிறோமென்று சொல்லவந்தீரே? ப்ரணவ காலத்திலே சகல லோகங்களையும் தம் திருவயிற்றிலே வைத்து இரட்சித்து ஓர் ஆவியைத் தளிரிலே கண் வளர்ந்த உமக்கு சமுத்திரத்திலே மூழ்குகிறது கடுமையா?

அக்னிப் பிரவேசம் மண்ணுகிறோமென்று சொல்ல வந்தீரே! பிரம்மாவுக்காக உத்தர வேதியல் ஆவிர்ப்பவித்த தமக்கு அக்னியில் முழுகுகிறோமென்றால் அக்னி தகுமா?

பாம்புக் குடத்திலே கையிட்டுத் தருகிறோமென்று சொல்ல வந்தீரே? சென்றார் குடையாயிருந்தாற் சிங்காதனமாமென்று சதா சர்வகாலம் திருவனந்தாழ்வான் மேலே திருக்கண் வளர்ந்திருக்கிற உமக்குப் பாம்பு குடத்திலே கையிட்டால் பாம்பு கடிக்குமா?

மழுவேந்துகிறோமென்று சொல்ல வந்தீரே? கோடி சூர்ய ப்ரகாசமான திருவாழியாழ்வானை சதா திருக்கையிலே தரித்துக் கொண்டிருக்கிற உமக்கு அப்ரயோகஜமான இரும்பு மழுவேந்துகிறது அருமையா?

கிருஷ்ணவதாரத்திலே பஞ்ச லஞ்சம் குடியிலே வெண்ணையுண்ட தமக்கு நெய்க் குடத்திலே கையெழுத்துத் தருகிறது அருமையா?

இப்படிப்பட்ட பரிஹாச ப்ரமானங்களையெல்லாம் தமக்குச் சரிப்போன விடத்திலேதானே பண்ணிக்கொண்டு இன்றைக்கும் அங்கேதானே எழுந்தருளச் சொல்லி நாச்சியாரருளிச் செய்த ப்ரகாரம்.

## பெருமாள் அருளிச் செய்த ப்ரகாரம்

நாம் உத்சவார்த்தமாகப் புறப்பட்டருளித் திருவீதிகளெல்லாம் வலம் வந்து தேவதைகள் புஷ்பவர்ஷம் வர்ஷிக்க, பிராமணர்களெல்லாரும் ஸ்தோத்திரம் பண்ண, இப்படிப் பெரியமனோ ரதத்தோடே தங்களிடத்தில் வந்தால், தாங்கள் எப்போதும் போலே ஆதரியாமல் படிக்கு அபராதங்களைப் பண்ணினோமென்றும் வேட்டையாடி வேர்த்து விடாயித்து வருகிற அடையாளங்களை அன்யதவாகச் சொல்லியும், நாமானால் உறையூரைக் கண்ணால் கண்டதுமில்லை, காதால் கேட்டதுமில்லையென்று சொன்னதை அப்ரமாணமாக நினைத்ததால் ஆனால், ப்ரமாணம் பண்ணித் தருகிறோமென்று சொன்னோம். அதைப் பரிகாசம் பண்ணினால் இப்படி நாம் எத்தனை சொன்ன போதிலும், அத்தனையும் அன்யதவாகக் கொண்டு சற்றும் திருவுள்ளத்தில் இரக்கம் வராமல், கோபத்தாலே திருக்கண்கள் சிவந்தும் திருமுகமண்டலம் கறுத்து இப்படியெழுந்தருளியிருந்தால் நமக்கென்ன கதியிருக்கிறது?

அழகிய மணவாளப் பெருமாள் ஸ்ரீரங்க நாச்சியார் சந்நிதி வாசலிலே தள்ளுபட்டுக் கொண்டிருக்கிறாராம் என்கிற அவமானம் உங்களுக்கேயொழிய நமக்குத் தேவையில்லை. ஆனபடியினாலே நாம் கொடுத்த புஷ்பத்தையும் வாங்கிக் கொண்டு தம்மையும் சீக்கிரத்தில் உள்ளேயழைக்கச் சொல்லிப் பெருமாளருளிச் செய்த ப்ரகாரம்.

## நாச்சியார் அருளிச் செய்த ப்ரகாரம்

தாம் இப்படி வருஷத்துக்கொரு தரம் வழி மாநாட்டமாக எழுந்தருளியிருந்து உமக்குச் சரிப்போனபடி நடந்து போட்டு, இன்னும் இங்குதானே வந்து நாமானால் ஒன்றும் அறியோம் என்றும், ப்ரமாணம் பண்ணித் தருகிறோமென்றும் பரிகாசங்களைப் பண்ணி இப்படிப்பட்டிருக்கிற ஆகாத்யங்கள் எல்லாம் பண்ணிக் கொண்டு வருகிறார். நாமானால் இதுகளையெல்லாம் பொறுக்கிறதில்லை. நம்முடைய ஐயா நம்மாழ்வார் வந்து மங்களமாகச் சொன்ன வாய்மொழியினாலே பொறுத்தோம். பெருமாளைச் சீக்கிரம் எழுந்தருளச் சொல்லி நாச்சியார் அருளிச் செய்த பிரகாரம் என்று உள்ளே அழைக்கிறார்.

இந்த விவாதத்தின் போது காலை ஒன்பதரை மணியிலிருந்து தாயார் சந்நிதி வாயிலில் பெருமாள் நிற்கிறபோது பெருமாள் வந்த பல்லக்குத் தாங்கிகள் பல்லக்கைக் கீழே இறக்கி வைக்காமலும், ஆயக்கால் எழும் காலின்மேல் நிற்கச் செய்யாமலும், பல்லக்குச் சுமையைத் தோளில், கடுமையான பங்குனி உத்திரத்து வெயிலின் கொடுமைக்கிடையே தாங்கி நிற்பதைக் காண்கிறோம்.

தாயாரின் இசைவு கிடைத்ததும், பல்லக்கின் பாதிப் பகுதி மூடியிருந்த பட்டுத் துணியை விலக்குகின்றனர். உடனே நம்பெருமாள் மணியகாரருக்கு நியமித்து மாலை, கஸ்தூரித் திருமண், சந்தனம் இவைகளைக் களைந்து நட்டுமுட்டு, காப்பந்தம் தாசநம்பிபந்தம் இவற்றுடன் அனுப்பி ஸ்ரீ ரங்க நாச்சியாரும் சமர்ப்பித்துக் கொண்டு உள்ளே செல்கிறார்.

அதன்பின் வாயிற்கதவை அடைத்து விடுகின்றனர். உள்ளே இருப்பவர்கள் மூன்று மணி வரை வெளியே செல்ல இயலாது என்பதையும் முன்னரே சொல்லி விடுகின்றனர்.

தாயார் கருவறையில் அரையர்கள் திருப்பல்லாண்டு, வாழ், மங்களம் இவைகளைச் சேவித்து இரண்டு பட்டப் பெயர் அருளப்பாடுகளுடன் அரையர் சாதரா மரியாதை நடைபெறும்.

நம்பெருமாளிடம் பண்டாரிகளுக்கு சாதரா மரியாதை நடைபெறும். ஸ்ரீரங்க நாச்சியாரால் அனுமதிக்கப்பட்ட பிறகு பெருமாள் சந்நிதி வாயிலில் எழுந்தருளி நம் மாழ்வாரை மரியாதை செய்து அனுப்புவார்.

**முதல் ஏகாந்தம்**

முதல் ஏகாந்தம் நடைபெறும். இது 12.30 மணி முதல் 1.45 மணி வரை. அதன் பின்னரே தளிகை அமுது செய்து புறப்பாடு ஆகிப் பகல் 2.00 மணிக்குப் பங்குனி உத்திர மண்டபம் சேர்ந்தபின் பகல் 3.00 மணி முதல் இரவு 10.30 மணி முடியப் பொதுஜன சேவை.

மக்கள் கூட்டம் அலைமோத, வாயிலில் ஒரே நெருக்கடியாக இருக்கும். சேவை முடிந்து வருவோர் வெளியே வருவதற்கு

வழியில்லாமல், உள்ளே செல்வோர் வரும் வழியில் என்று சற்றுக் குழப்பமான சிரமமான சூழ்நிலைதான். அனைவரும் வரிசையில் சென்றால் தரிசிக்க எளிதாகும். அதற்குரிய ஏற்பாடுகள் ஆண்டுதோறும் ஏனோ முறைப்படுத்தப்படுவதில்லை. சேர்த்தி மண்டபத்தில் நம் பெருமாளையும் தாயாரையும் தரிசிக்க அருகில் சென்று காணக் கட்டணமும் உள்ளது. இருப்பினும் மூன்று மணி முதல் கூட்ட நெருக்கடி அதிகம்.

## இரண்டாம் ஏகாந்தம்

இரவு 11.30 மணிக்கு செல்வர் பெரிய கோயிலிலிருந்து புறப்பட்டு வடதிருக்காவேரியில் தீர்த்தம் சாதித்துப் பெருமாளிடம் வந்ததும், கத்யத்ராயம் எனும் உடையவர் இராமானுசப் பிரான் அருளிச் செய்த கத்யத்ரயம் என்னும் கிரந்தம் பங்குனி உத்திர நாளில் அவதரித்தது. கத்யத்ராய சாற்று முறைக்காக அது இரண்டாம் ஏகாந்தத் தளிகை நிவேதனம் ஆனதும் செல்வர் பெரிய கோயில் எழுந்தருளுவார்.

## மூன்றாம் ஏகாந்தம்

நள்ளிரவு 3.30 மணி முதல் 4.30 முடிய அதற்கு முன் திருமஞ்சனம் 12.00 மணி முதல் அதிகாலை 3.30 வரை நடைபெறும். பெருமாளுக்கும் நாச்சியாருக்கும் பதினெட்டு ஆவ்வருத்தித் திருமஞ்சனம் ஆகும். எம் பெருமானார் உடையவர் இராமானுஜர் திருக்கோட்டியூர் நம்பிகளிடம் பதினெட்டு ஆவ்ருத்தி நடந்த சிரமத்தை எம்பெருமானார்க்குத் தீர்த்தருளவதற்காகப் பதினெட்டுத் தடவை கைலி சமர்ப்பித்துத் திருமஞ்சன அனுஷ்டானம் நடைபெறுகிறது.

திருவாராதனத்தில் அரையர்களுக்கு வசந்தன் அருளப்பாடு என்று சாதித்து இசையில் தம்பிரான்கள் இயற்றிய வசந்தன் பாட்டுச் சேவிக்க பெருமாளும், தாயாரும் கேட்டு மகிழ்ந்தருளுவர்.

மூன்றாம் ஏகாந்தத் தளிகை நிவேதனம் முதலியவை ஆனதும் நாச்சியார் உள்ளே எழுந்தருளுவார்.

பெருமாள் பங்குனி உத்திர மண்டபத்திலிருந்து புறப்பட்டுத் தாயார் சந்நிதிக்கு முன் ஸ்ரீரங்க நாச்சியாரைப் பார்த்தவாறு

பிரியமனமில்லாதவர் போல் ஒவ்வொரு அடியாக வைத்து மெல்ல எழுந்தருளுவார். எம்பெருமாள் எவ்வளவு நடிப்புச் செல்வர் பாருங்கள்.

வாசல் மண்டபம் தாண்டும் வரைதான் இந்தக் கோலம். வாசல் மண்டபம் தாண்டியதும் ஓட்டமாகக் கோரதத்திற்கு எழுந்தருளுவார். கோரதத்தில் திருவீதி எழுந்தருளி உள்ளே போய்க் கண்ணாடி அறையில் புஷ்பக விமானத் திருமஞ்சனம் செய்து கொள்வார்.

பங்குனி உத்திர இந்த ஒன்பதாம் நாள் மட்டையடி விழா திருவரங்கம் போல் இத்தனைச் சிறப்பாக வேறு திருத்தலம் எதிலும் நடைபெறாது. திருவரங்கத்தில் பங்குனி உத்திரம் என்பது 'தந்த்ரோத்சவம்', அதாவது இரண்டு விழா.

உத்சவம் அவரவர்களுடைய திருநட்சத்திரத்தில் தொடங்க வேண்டும் அல்லது நிறைவடைய வேண்டும். பெருமாளுக்கு ரோகிணி நட்சத்திரமாகையால் அன்று இந்த விழாத் தொடங்கி உத்திரத்தில் முடிகிறது.

நாச்சியாருக்கும் அவருடைய நட்சத்திரத்தில் உத்திரத்தில் முடிகிறது. பெருமாளுக்கு காலையிலும், இரவிலும் விழா நடக்க வேண்டியிருப்பதால் நாச்சியார் உற்சவம் தனியாக நடைபெறாமல் பாவனையாக நடைபெறுகிறது. உத்தரம் இருவருடைய விழாவிற்குக் கடைசி நாளாகையால் பெருமாள் நாச்சியாருடைய சேர்த்தியில் இருப்பதற்காக அங்குச் செல்கிறார்.

## பத்தாம் திருநாள் விழா

*பத்தாம் திருநாள் விழா :* பத்தாம் திருநாள் விழா சத்தாவரணம். பத்தாம் திருநாளன்று காலையில் வீதி உலாக்கிடையாது. காலையில் எழுந்தருளுவதற்குப் பதிலாக மாலை 4.00 மணிக்கு புறப்பாடு. காலையில் கோரத ஊர்வலம் இருப்பதே இதன் காரணம். சந்தனு மண்டபம் சேர்ந்த பெருமாள் திருமஞ்சனம் கண்டருளி மேளமில்லாமல் உலாப்பாட்டும், இராமானுஜர் நூற்றந்தாதியும் கேட்டுக் கொண்டே வீதியெழுந்தருளி, உடையவர் சந்நிதி வாயிலில் உடையவரை அனுக்கிரகித்து அவர் செய்து வைக்கும் சைத்யோபசாரங்களையும் பெற்றுக் கொண்டு துவஜஸ்தம்பத் தினடியில் படிப்புக் கேட்டுச் சந்நிதிக்கு எழுந்தருளுவார்.

முன்பெல்லாம் மேல வாத்தியங்களோடு சத்தாவரணங்களையும் பிரதட்சிணம் செய்ய, வெளியே ஐந்து பிரகாரங்களையும் பிரதட்சணம் செய்து, ஆரியபடாள் கோபுரத்துக்கு நேரே வடக்கே பார்த்து நின்று, பூர்வவிஜாக்களாலும் வர்த்தமான ராஜாக்களாலும் செய்யப்பட்ட கைங்கரியங்களைப் பற்றிய ஸ்ரீ சக்தியைக் கேட்டு தீர்த்தம், துளசி, சந்தனம், மாலை முதலியன அனுக்ரகித்து தேவதை முதலானோரை உத்வாசனம் பண்ணி நாழிகேட்டான் வாசல் கடந்து கருட விசுவக் சேனர்கள் இருக்கும் திருச்சுற்றையும், துர்க்கை கஜானனர்களிருக்கும் திருச்சுற்றையும் வலமாக வந்து உள்ளே எழுந்தருளினார்.

எனவே பெருமாள் திருஉள் நாழியையும் வலம் வந்ததாகவும் ஏழு திருச்சுற்றுகளிலும் மேள வாத்தியங்களோடும் எழுந்தருளினார். இராமானுஜ நூற்றந்தாதிக்காக மேளமில்லாமல் எழுந்தருளுவது, உடையவர் சந்நிதிக்கு எழுந்தருளுவது லட்சுமி காவியத்தில் காணப்படவில்லை. ஆளும் பல்லக்கும் அதில் கூறப்படவில்லை.

ஒவ்வொரு விழாவும் முடிந்த பின் வெளிமண்டபங்களிலே விடையாற்றி விழா 5 நாள்களுக்கு நடைபெற்று வந்தது.

இப்போது இந்த விடையாற்றி விழாவே ஆளும் பல்லக்கு விழாவாகப் பதினோராம் நாள் நடைபெறுகிறது. சப்த்தாவரணமும் பெருமாள் ஏழு திருவீதிகளுக்கும் எழுந்தருளி நடைபெற்று வந்த விழாவாகும்.

*பதினோராம் திருநாள் :* பங்குனித் திருநாளின் கடைசித் திருவிழா இது. நாளில் பகல் 3.00 மணிக்கு மூலஸ்தானத்திலிருந்து புறப்பட்டுக் கருடமண்டபம் சேர்ந்து, இரவு 7.30 மணிக்கு ஆளும் பல்லக்கில் புறப்பட்டு வாகன மண்டபம் சேர்ந்து இரவு 9.30 மணிக்குக் கருவறை சேர்வார்.

இப்பங்குனித் திருவிழா ஆண்டின் இறுதி விழாவும் ஆகும்.

சில ஆண்டுகளில் தெலுங்கு வருடப் பிறப்பு பங்குனி மாதத்திற்குள் வருகையில் அன்று பெருமாள் ஆலயத்தினுள் சந்தனு மண்டபத்தில் அலங்காரம் அமுது செய்தல், புது பஞ்சாங்கம் வாசித்தல் ஜாலி அலங்காரம் முதலியன நடைபெறும்.

இயல் : எட்டு

# துணைக் கோயில்கள்

இக்கோயிலின் நிருவாகத்தின் கீழ் முன்னர் ஒன்பது கோயில்கள் இருந்தன. சமயபுரம் தனி நிருவாகத்தின் கீழ் சென்றதும், அருள்மிகு புண்டரீகாட்சப் பெருமாள் கோயில் திருவெள்ளறை, அருள்மிகு வடஜம்பு நாதா கோயில் திருவெள்ளறை, அருள்மிகு மாரியம்மன் கோயில் அன்பில், அருள்மிகு சுந்தரராஜப் பெருமாள் கோயில் அன்பில், அருள்மிகு கமலவல்லி நாச்சியார் கோயில் உறையூர், அருள்மிகு இராஜகோபுர முனீசுவரர் கோயில் அருள்மிகு காட்டழகிய சிங்கர் கோவில் திருவரங்கம் ஆகியனவே அந்த எட்டுத் திருக்கோயில்களாகும்.

## திருவரங்கம் திருக்கோயில்கள்

திருவரங்கம் என்றால் அரங்கநாதர், திருவரங்கம் என்றால் பூலோக வைகுந்தம், திருவரங்கம் என்றால் பெரிய கோயில். இவை அனைவர் நெஞ்சிலும், நினைவிலும் பதிந்தவை நிற்பவை. திருவரங்கம் ஒரு மாநகராட்சி இங்குப் பலத்திருக்கோயில்கள், மடங்கள் என்று அமைந்துள்ளன. அவையும் திருக்கோயிலின் தொடர்பு கொண்டும் தொடர்பு இன்றியும் உள்ளன. அவற்றைக் குறித்தும் அறிந்து கொள்வோம்.

## அம்மா மண்டபம்

திருவரங்கத்துப் பெரிய கோயிலின் நேர் எதிரே தென்புறம் காவிரியின் வடகரையில் இது அமைந்துள்ளது. பேருந்துகள் அம்மா மண்டபம் சாலை வழியே செல்கின்றன.

மக்கள் நீராட இம்மண்டபம் மதுரை ராணி மங்கம்மாள் கட்டி வைத்து ஆகும். ஆடி 18 அல்லது 28இல் அரங்கர் காவிரிக்கு வந்து தங்கத்தாலி, சேலை, மாலை இவற்றைக் காவிரித் தாய்க்கு வழங்குகிறார்.

சித்திரை முழு நாளில் கஜேந்திர மோட்சம் சிறப்பு நடைபெறுகிறது. ஐப்பசி 30 நாளும் அரங்கருக்குத் தங்கக் குடத்தில் யானை மேல் திருமஞ்சன நீர் எடுத்துச் செல்லப்படுகிறது. ராணி மங்கம்மா மண்டபம்தான் அம்மா மண்டபம் ஆகிவிட்டது. இங்கு நீர்ப் படுகையில் நீர் இருந்து நீராடினார். கவனமுடன் நீராட வேண்டும். நீரில் மூழ்கி இறந்தவர்கள் பலர். கவனம் வேண்டும்.

## ஸ்ரீ சங்கரர் மடம்

அம்மா மண்டபம் சாலையில் பிள்ளையார் கோவிலின் தென்புறம் ஆதி சங்கரர், சாரதாம்பிகை, நரசிம்ம பாரதி ஆகிய மூவர் சன்னதிகள் உள்ளன. இங்கு வழிபாடு, வேதம் ஓதுதல், திருவிளக்குப் பூஜை, திருஉரைகள் நடைபெறுகின்றன. 16 கலைகளை விளக்கும் லட்சுமிகள், எட்டுக் குருமார்கள், சப்த மாதாக்கள், கோபுரச்சிற்பங்கள் கண்ணையும் கருத்தையும் கவர்வன. கோவில் ஜன்னல் வேறு எங்குமில்லாத வகையில் ஸ்ரீ சக்கர அமைப்புடன் அமைந்துள்ளது. தியானம் செய்ய உகந்த இடம்.

## ஸ்ரீ ராகவேந்திர மடம்

திருவரங்கம் பேருந்து நிற்குமிடத்து எதிர்புறச்சாலையில் இராகவேந்திர புறத்தில் உள்ளது. தினமும் இராகவேந்திருக்கு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மலரஞ்சலி, ரதம் சிறப்புக்குரியது. யோகீந்திர தீர்த்தர், சுமதீந்திர தீர்த்தர், உபேந்திர தீர்த்தர், முனீந்திர தீர்த்தர் ஆகியோருடைய பிருந்தாவனங்கள் உள்ளன. இராகவேந்திரரின் வாழ்க்கை வரலாற்றுப் படங்களில், அவர் நடத்திய அற்புதங்கள் காணலாம்.

## வியாச ராஜ மடம்

திருவரங்கம் பேருந்து நிறுத்தத்தின் எதிர்புறச் சாலையில் இராகவேந்திர மடம் செல்லும் வழியில் உள்ளது. 1860இல் தோன்றியது. மத்துவாச்சாரியாருக்குப் பன்னிரண்டாவதாக அவதரித்த வியாசராஜருக்கு மம்ருத்திகா பிருந்தாவனம் உள்ளது. வியாச ராஜரின்

ஐந்து சீடர்களின் பிருந்தாவனமும் இங்குள்ளன. இங்குச் சக்தி வாய்ந்த ஆஞ்சனேயர் உள்ளார்.

## பிள்ளையார் கோயில்

திருவரங்கத்தில் ராணி மங்கம்மா நகர் அருகில் அம்மா மண்டபம் சாலையில் உள்ள இக்கோயில் 100 ஆண்டுகளுக்கு மேற்பட்ட கோயில் என்பதோடு திருவரங்கத்தில் தோன்றிய முதல் சைவக் கோயில் என்பர். நாராயணசாமி பிள்ளை என்பவர் தன் பிள்ளையில்லாக் குறை தீர இதனைக் கட்டினார். இக்கோயிலில் பிள்ளையார், முருகன், துர்க்கை, மாரியம்மன் நவக்கிரக சன்னதிகள் உள்ளன.

## உலகளந்த பெருமாள் நம்பிள்ளை சன்னதி

அம்மா மண்டபம் சாலையில் பேருந்து நிலையத்திற்கு வடக்கில் மேற்குப் பகுதியில் உள்ளது. எப்போதும் பூட்டப் பெற்றுள்ள இச்சன்னதியில் திருவாய் மொழிக்கு 36000 படி விரிவுரை எழுதிய நம்பிள்ளை சன்னிதி உள்ளது.

## வெளி ஆண்டாள் சன்னதி

தெற்குச் சித்திரை வீதியின் மேற்குப் பகுதியிலிருந்து மேல அடைய வலஞ்சாண் வந்தால் வெளி ஆண்டாளைத் தரிசிக்கலாம். கொண்டையின்றிக் கிரீடத்துடன் ரங்க ராஜனின் மகரிஷி என்று காட்டுகிறார். பெரியாழ்வார் இங்குத் தங்கினார் எனவும், இதுவே முன்னர் காவிரியின் வடகரையாக இருந்தது என்றும் கூறுவர். அரங்கரை மணக்கக் காத்திருந்த ஆண்டாளுக்குப் பல்லக்கு அனுப்பித் தன்னுடன் ஐக்கியமாக்கியுள்ளார். மூலவர் மட்டுமே அமர்ந்த திருக்கோலம். வலது கை ஆக்குவான் முத்திரையுடன் உள்ளது. பெரியாழ்வார், கோயில் அண்ணன் திரு உருவங்கள் உள்ளன. ஆடியிலும், பங்குனியிலும் அரங்கர் வந்து இட்டு மாலை மாற்றிக் கொள்கிறார்.

## திருமங்கை திருமாளிகை

வடக்குக் கோபுர வாயிலின் கடைசியில் சென்று இடக்கை புறம் திரும்பி மேலூர்ச் சாலையில் வலதுபுறம் சந்தில் திருமங்கை ஆழ்வாரின் திருமாளிகை உள்ளது. அவர் இங்கிருந்து தான் அரங்கர் கோயில் மதிலைக் கட்டினார். அவருடைய காலத்திற்குப் பின் தசாவதாரக் கோயில் எழுந்துள்ளது. பத்து அவதாரங்களையும் ஒரே வரிசையில்

நின்று காணலாம். இதன் அருகிலேயே திருவரங்கம் இராஜகோபுரம் கட்டிய ஜீயர் சமாதி உள்ளது. இவரும் இங்கிருந்தே இராஜ கோபுரத்திருப்பணி செய்தார்.

## விசாலாட்சி திருக்கோயில்

திருவரங்கம் வடக்கு வாயிலின் கடைசியில் கொள்ளிடக் கரையில் உள்ள 90 ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில் தைப்பூச தீரத்த வாரிக்குச் சமய புறத்தாள் தன் அண்ணன் அரங்கரிடம் சீர்வரிசை பெறக் கொள்ளிடக் கரைக்கு வந்து இக்கோயிலின் நேர் வடக்கே நடு ஆற்றில் அமர்வாள். அப்போது இங்கு தீமிதி நடைபெறும்.

## கரிய மாலீசுவரர்

திருவானைக் கோவில் தைப்பூசத் தெப்பக் குளத்தின் மேல் கரையில் உள்ள பழமையான கோயில் தொடக்கத்தில் இராமரும் பிற்காலத்தில் மன்னர்களும் கட்டிய இத்திருக்கோயில் திருவானைக் கோயிலைச் சார்ந்தது. இராமபிரான் கும்பகர்ணனைக் கொன்ற பாவம் தீர அங்கதனைச் சாளக்கிராம மலைக்கு அனுப்பி லிங்கம் எடுத்துவர ஏற்பாடு செய்து சீதை, இலக்குவன் அனுமனுடன் வழிபட்ட புண்ணியத்தலம். எதிரிலுள்ள தெப்பக் குளத்தில் நீராடி ஸ்ரீராமர் பாவம் போக்கியதாகவும் இக்குளம் ஒன்பது தீர்த்தங்களுள் ஒன்று என்றும் கூறுவர். இராமர் வழிபட்டதால் கரிய மாலீசுவரர் என்று பெயர். அருகிலுள்ள துர்க்கைக்கு பௌர்ணமி பூஜை, வெள்ளி, செவ்வாய், ஞாயிறு இராகு கால பூஜையும் நடைபெறுகின்றன.

## அருள்மிகு அன்ன காமாட்சி அம்மன் கோவில்

திருவரங்கத்திற்குக் கட்டப்பட்டுள்ள புதிய பாலத்தின் கீழ் நேரு வீதியில் வாழைத் தோட்டத்திற்குள் ஒரு வீட்டில் இருப்பது போல அமைந்துள்ள கோவில். 200 வருடங்களுக்கு முன்பு கட்டப்பெற்ற கோவில். கிழக்குப் பார்த்து நான்கு கைகளுடன் அன்னை நின்ற திருக்கோலத்தில் இருக்கிறார். நவராத்திரி அலங்காரங்கள் சிறப்பானவை. காரிய சித்தி வேண்டுவோர் வியாழக்கிழமை தட்சிணா மூர்த்திக்குக் கொண்டைக் கடலை மாலையும், செவ்வாய்க்கிழமை இராகு காலத்தில் விஷ்ணு துர்க்கைக்கு வழிபாடும், மாதாமாதம் பௌர்ணமி பூஜையும் நடைபெறுகின்றன. ஏப்ரல் மாதம் சண்டிஹோமம், கார்த்திகை மாதம் சங்கு அபிடேகம் சிறப்பானவை.

இயல் : ஒன்பது

# தாயார் சந்நிதி விழாக்கள்

அருள்மிகு அரங்கநாத சுவாமித் திருக்கோயிலில் நம்பெருமாளுக்கு விழா நடைபெறுவதல் போலவே தாயார் ஸ்ரீ ரங்கநாச்சியார் சந்நிதியிலும் மாதம் தோறும் ஏதேனும் ஒரு விழா நடைபெறுகின்றது. தாயாருக்கான எல்லா விழாக்களும் வெள்ளிக் கிழமைகளில் முடிவுறும்.

சித்திரை மாதத்தில் வெளிக்கோடை, உள்கோடை, கோடைத் திருநாள் பூச்சாற்று உற்சவம் பத்து நாள்கள் நடைபெறுகிறது. வெளிக்கோடையிலும் உள்கோடையிலும் கருவறையிலிருந்து மாலை புறப்பாடு ஆகி, கோடை நாலு கால் மண்டபம் சேர்ந்து, மலர் சாத்துபடி கண்டருளி மண்டபத்திலிருந்து புறப்பட்டுக் கருவறை சேருவார். அப்போது மாலையில் 6.30 மணி வரை மூலவர் சேவை இராது.

வைகாசி மாதத்தில் ஏழு நாள்கள் மாலையில் வசந்த விழா நடைபெறுகையில் தினமும் தாயார் புறப்பட்டு வசந்த மண்டபம் சேர்ந்து அலங்கார வகையாராக் கண்டருளிப் புறப்பட்டுக் கருவறை சேருகிறார்.

ஆணி மாதத்தில் ஸ்ரீரங்க நாச்சியார் ஜேஷ்டாபிஷேகம் நடைபெறுகிறது. ஆணியில் திருப்பாவாடையும் நடைபெறுகிறது.

புரட்டாசி மாதம் . ஒன்பது நாள்கள் ஸ்ரீரங்க நாச்சியார் நவராத்திரி விழா. தாயார் திருமஞ்சனம் கண்டருளிப் புறப்பட்டுக் கொலு மண்டபம் சேர்ந்த பின் 7.45 மணிக்குக் கொலுத் தொடங்கி முதல் நாள் 8.45 மணிக்கு முடிவடைகிறது. இதைப் போலவே எட்டாம்

நாள் வரை, ஏழாம் நாள் தவிர்த்துக் கொலு தொடங்கித் தினமும் முடிகிறது. நவராத்திரியில் எல்லா நாட்களும் இசைக் கச்சேரியும், யானை நொண்டியடித்தலும் காண வேண்டிய வேடிக்கைகள் ஆகும்.

ஏழாம் திருநாளில் ஸ்ரீரங்கநாச்சியார் திருவடி சேவையாகும். இதுவும் கொலு மண்டபத்தில் தான் நடைபெறுகிறது. ஒன்பதாம் திருநாள் சரசுவதி பூஜை.

கார்த்திகை மாதம் தாயாரின் (ஊஞ்சல்) டோலோற்சவம் நடைபெறும். மார்கழியில் புறப்பாடு கிடையாது.

கருவறையில் மாலை 6.30 மணி முதல் இரவு 9.00 மணி வரை சேவை.

மார்கழியில் நடைபெறும் திருவாய் மொழித் திருநாளில் புறப்பட்டுச் திருவாய்மொழி மண்டபம் சேருகிறார். தை மாதம் இயற் சாற்றுமுறை நடைபெறுகிறது.

இயல் : பத்து

# வழிபாடுகளும் கட்டளைகளும்

நம்பெருமாள் சன்னதி, தாயார் சந்நதி, சக்கரத்தாழ்வார் சன்னதி ஆகிய மூன்று சன்னதிகளிலும் ஒருநாள் வழிபாட்டிற்கு கட்டணம் 30,500 ரூபாய் ஆகும்.

நம் பெருமாள் சன்னதி ஒரு நாள் வழிபாடு ஆறு காலமும் ரூ. 20,000 ஆகும்.

அருள்மிகு ரெங்க நாச்சியார் சன்னதி ஒருநாள் வழிபாட்டிற்கு (6 காலமும்) நடைபெறக் கட்டணம் ரூ. 7,500 ஆகும்.

அருள்மிகு சக்கரத்தாழ்வார் சந்நிதி ஒருநாள் பூஜைக்குக் கட்டணம் ரூ. 3,000 ஆகும்.

## பெரிய சந்நதி சேவை

(திருவிழா இல்லாத காலங்களில்)

| | |
|---|---|
| கட்டண சேவை | காலை 6.15 மணி முதல் 6.45 வரை (விசுவரூபம்) |
| தர்ம தரிசனம் | காலை 6.45 மணி முதல் 7.30 மணி வரை |
| வழிபாடு காலம் | காலை 7.30 மணி முதல் 8.45 மணி வரை |
| கட்டண சேவை | காலை 8.45 மணி முதல் 11.30 மணி வரை |
| தர்ம தரிசனம் | பகல் 11.30 மணிமுதல் பகல் 1.00 மணி வரை |
| ஓய்வு நேரம் | பகல் 1.00 மணி முதல் பகல் 2.00 மணிவரை |
| தர்ம தரிசனம் | பகல் 2.00 மணி முதல் மாலை 3.30 மணி வரை |

| | |
|---|---|
| கட்டண சேவை | மாலை 3.30 மணி முதல் மாலை 6.00 மணி வரை |
| வழிபாடுக் காலம் | மாலை 6.00 மணி முதல் மாலை 6.45 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 6.45 மணி முதல் இரவு 7.45 மணி வரை |
| தர்ம தரிசனம் | இரவு 7.45 மணி முதல் இரவு 9.00 மணி வரை |

இரவு 9.00 மணிக்கு மேல் மூலவர் சேவை இராது.

கட்டண சேவை காலங்களில் அர்ச்சனை சீட்டு ஒன்றுக்கு ஒருவர் மட்டுமே செல்லலாம்.

கட்டண சேவை காலங்களில் சேவை கட்டணம் ரூ. 1.00 மட்டுமே சிறப்புக் கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 10.00

## தாயார் சந்நிதி (திருவிழா இல்லாத போது)

| | |
|---|---|
| கட்டண சேவை (விசுவரூபம்) | காலை 6.30 மணி முதல் 7.15 மணி வரை |
| தர்ம தரிசனம் | காலை 7.15 மணி முதல் 8.00 மணி வரை |
| வழிபாடுக் காலம் | காலை 8.00 மணி முதல் 9.00 மணி வரை |
| கட்டண சேவை | காலை 9.00 மணி முதல் 12.00 மணி வரை |
| இலவச சேவை | பகல் 12.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| ஓய்வு நேரம் | பகல் 1.00 மணி முதல் பகல் 2.30 மணி வரை |
| இலவச சேவை | மாலை 2.30 மணி முதல் மாலை 3.30 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 3.30 மணி முதல் மாலை 6.00 மணி வரை |
| வழிபாடுக் காலம் | மாலை 6.00 மணி முதல் மாலை 6.45 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 6.45 மணி முதல் இரவு 8.00 மணி வரை |
| தர்ம சேவை | இரவு 8.00 மணி முதல் இரவு 9.00 மணி வரை |

இரவு 9.00 மணிக்கு மேல் மூலவர் சேவை இல்லை.

## சக்கரத்தாழ்வார் சந்நிதி

| | |
|---|---|
| விசுவரூபம் | காலை 6.15 மணி முதல் 7.15 மணி வரை |
| வழிபாடுக் காலம் | காலை 7.15 மணி முதல் காலை 8.45 மணி வரை |
| இலவச சேவை | காலை 8.45 மணி முதல் காலை 12.30 மணி வரை |
| திருமஞ்சனம் | பகல் 12.30 மணி முதல் மாலை 3.00 மணி வரை |

| | |
|---|---|
| இலவச சேவை | பகல் 3.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை |
| வழிபாடுக் காலம் | மாலை 6.00 மணி முதல் மாலை 6.45 மணி வரை |
| இலவச சேவை | இரவு 6.45 மணி முதல் இரவு 8.30 மணி வரை |

இரவு 8.30 மணிக்கு மேல் சேவை கிடையாது.

## சக்கரத்தாழ்வார் சந்நிதியில்

### வெள்ளி, சனி, ஞாயிறு நாள்களில் கால நிர்ணயம்

| | |
|---|---|
| விசுவரூபம் | வழக்கம்போல் |
| வழிபாடுக் காலம் | காலை 7.15 மணி முதல் காலை 8.45 மணி வரை |
| கட்டண சேவை | காலை 8.45 மணி முதல் காலை 10.15 மணி வரை |
| தர்ம தரிசனம் | காலை 10.15 மணி முதல் பகல் 11.00 மணி வரை |
| கட்டண சேவை | காலை 11.00 மணி முதல் பகல் 1.00 மணி வரை |
| ஓய்வு நேரம் | பகல் 1.00 மணி முதல் பகல் 3.00 மணி வரை |
| தர்ம தரிசனம் | மாலை 3.00 மணி முதல் மாலை 4.00 மணி வரை |
| கட்டண தரிசனம் | மாலை 4.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை |
| வழிபாடுக் காலம் | மாலை 6.00 மணி முதல் மாலை 6.45 மணி வரை |
| கட்டண சேவை | மாலை 6.45 மணி முதல் இரவு 8.00 மணி வரை |
| இலவச சேவை | இரவு 8.00 மணி முதல் இரவு 9.00 மணி வரை |

இரவு 9.00 மணிக்கு மேல் சேவை கிடையாது.

*ஆழ்வார் ஆசாரியர் :* ஆழ்வார் ஆசாரியர்களுக்கு மாத திருநட்சத்திர உற்சவங்களும், ஆண்டு திருநட்சத்திர உற்சவங்களும் குறைவற நடைபெற்று வருகின்றன.

*நித்தியப்படி நடந்துவரும் கோயில் உபசாரங்களும் கைங்கர்யங்களும் :* திருவரங்கம் திருக்கோயிலில் தினமும் ஆறுகால திருவாராதனம் பெரிய பெருமாளுக்குச் சமர்ப்பிக்கப் படுகின்றது. அவை விசுவரூபம், பொங்கல் தளிகை, பெரிய அவசரம் எனப்படும் உச்சிக்காலம், க்ஷீரன்னத்தளிகை, செலசம்பா, அரவணை பால் அமுது ஆகும்.

*விசுவரூபம் :* தினமும் திருவிழா இல்லா நாட்களில் கோயில் வீணை மிராசுவாத்யகாரர் காலையில் பெரிய பெருமாள் சந்நிதியில் வீணை வாசிப்பார்.

வடதிருக்காவிரியிலிருந்து யானை மேல் திருமஞ்சனம் எழுந்தருளிய பிறகு அவை காயத்ரி மண்டபத்தில் அமுதுபாறையில் இறக்கி வைக்கப்படும்.

திருமஞ்சனம் சந்நிதிக்குள் வந்ததும் அர்ச்சகர் விமான பிரதட்சணம் பண்ணிக் கொண்டு சந்நிதிக்குள் சென்று பெரிய பெருமாளைச் சுப்ரபாதம் பண்ணித் திருமேனி விளக்கித் திருமணி சேவிப்பார்.

அதனைக் கேட்டதும் உள்ளூரார் ஊழியக்காரரும், திருப்பதியார் ஊழியக்காரரும் கெட்டிக் கதவு, பலகணி கதவு முதலியவைகளைத் திறந்து வைத்துக் கெட்டிக் கதவுக் கீழ்ப்பகுதியில் நிற்பர்.

மேல் பகுதியில் கோயில் புள்ளச்சி வாத்தியார் ஆகிய ஸ்ரீ வேதவியாச பட்டர் சுவாமி ஸ்தலத்தார்களும் எழுந்தருளியிருப்பார். சந்நிதி வாயில் வைணவன் திரைக்குப் பக்கத்திலும் மணிக்கதவுக்கு வெளியிலும் நிற்பார்.

பஞ்சாங்க படனம் கருவறையில் தினமும் நடைபெறும். கொடியேற்ற நாள்கள் மூன்றில் கொடியேற்ற மண்டபத்தில் நம்பெருமாள் முன்பு நடைபெறும் காராம் பசு, யானை சந்தன மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும். அப்போது விசுவரூப தரிசனம் நடைபெறும்.

கோயில் மிராசு வேத பாராயணக் குழுவினர் பெரிய பெருமாள் சந்நிதி முன்னம் உற்சவம் இல்லாத நாள்களில் திருவாராதனையின் போது வேத பாராயணம் செய்வர்.

*பொங்கல் தளிகை :* தட்டு வந்த பிறகு திருமணி சேவித்துத் தீப பிரதிஷ்டையாகும். அலங்கார பொங்கல் தளிகை எடுத்துக் கொண்டு பரிக்ரகம் வாயை முடிக் கொண்டு வருவர். பால் ஊழியக்காரர் குடை பிடிக்கத் திருப்பதியார் தளிகைக்கு முன் தீர்த்தம் சேர்த்துக் கொண்டு வரவும் மேலப்படி வழியாய் ஸ்தல சுத்தி பண்ணிய பிறகு அமுது பாறையில் தளிகையை இறக்கி வைப்பர்.

அப்போது மேலப்படியின் கீழ் பெரிய மேளம் முதலிய வாத்தியங்கள் முழங்க நாச்சியார் பரிக்ரகம் தளிகை வகைகளைத் திறக்க பால்காரர் தளிகைமேல் நெய் சேர்க்க உள்ளூரார் ஊழியக்காரர் சாமரம் வீச திருப்பதியார் ஊழியக்காரர் அமுது பாறைக்குக் கீழ் பந்தம் பிடிக்க திருமஞ்சனக்காரர் கலசப்பானை எடுத்துத் தீர்த்தம் சேர்க்க அமுது செய்விக்கப்படும்.

பிறகு கொரட்டு மணியக்காரருக்கும், உத்தம நம்பிக்கும் உள்ளூரார் ஊழியம் கைவிளக்கு எடுத்து சேவிக்க அர்ச்சகர் தீர்த்தம் சாதித்து, சாலிக்கிராம பெட்டியிலிருந்து சந்தனத்தை உத்தரணியில் கரைத்துச் சாதிப்பார். விசுவக்சேனருக்கு அமுது செய்யப் பண்ணிப் பிறகு மணியகாரரும் உத்தம நம்பிக்கும் சாஸ்யாரம் காண்பிப்பது நடைபெறுகிறது.

*பெரிய அவசரம் அல்லது உச்சிக்காலம் :* உச்சிக்கால பூஜைக்குப் பெரிய அவசரம் என்று பெயர். கொரட்டுமணியக்காரர் உள்துறை சேவகரிடத்தில் உச்சிக்கால பூஜைக்குத் திருமணி எடுக்கச் சொல்வார். அவர் சந்நிதியினுள் சென்று பரிசாரகரிடம் சொல்லியதும், அவர் அர்ச்சகரைக் கேட்டுத் திருமணி எடுப்பார். திருப்பதியின் ஊழியக்காரர் சந்நிதியைத் தூய்மை செய்து உள் திரை போட்டபின், அர்ச்சகர் நம் பெருமாள், உபய நாச்சியார்கள் அணிந்துள்ள திருமாலையைக் களைந்து கொடி மண்டபத்தின் அருகில் உள்ள ஆஞ்சநேயரின் திருமஞ்சனத்திற்குச் செல்வார்.

முதல் மணி திருவாராதனம் ஆனபின், தீப தூபம் நடைபெறும். அதன்பின் பரிசாரகர் தயிரமுதை வட்டிலில் சேர்த்து அர்ச்சகரிடம் கொடுக்க அவர் பெரிய பெருமாள், உபய நாச்சியார் முதலானவர்களுக்குக் கண்டருளப் பண்ணுவார்.

இரண்டாம் மணி திருவாராதனம் ஆனபின் தூப தீபம் ஆகும். அதன் பின் திருமஞ்சனக்காரர் கலச தீர்த்தம் எடுத்துத் திருவடி விளக்கியவுடன், சின்னப் பெருமாளை பாத்ரவேதியில் எழுந்தருளச் செய்வர். திருவாராதனம் நடைபெற்று நெய் வெல்லம், வேளையம் அமுது செய்வித்துத் திருமஞ்சனம் கண்டருளச் செய்வர். சின்னப்

பெருமாளின் ஏகாந்தத் திருமஞ்சனம் ஆனபின் சிம்மாசனத்தில் எழுந்தருளச் செய்யப்படுவார்.

மூன்றாம் மணி திருவாராதனம் நடந்து தூப தீபமானவுடன் நாழி கேட்டான் வாயிலில் தட்டி மேளம் தட்டுவர். தட்டி தளிகை பொங்கல் அமுது செய்கையில் நடைபெற்றது போலவே உச்சிக்கால அமுது செய்த பின்னர் காயத்ரி மண்டபம், திருஉண்ணாழியில் எழுந்தருளியிருக்கும் சுவாமிகளுக்குத் திருஅமுது செய்து நாச்சியார் பரிகாரத்திற்குத் தீர்த்தம் சடகோபன் சாதித்து, மேலே கூறியவாறு மங்களாரத்தி நடைபெற்றுத் திருக்காப்பு நீங்கியவுடன் திருச்சின்னம் முதலியவை சேவிக்கப்படும்.

தளிகையானது சேனை முதலியார் சந்நிதி சேர்ந்தவுடன் மேளம் நிறுத்தப்படும். அர்ச்சகர் வட்டையும், திருப்பதியார் ஊழியக்காரர் திருமேணியும், பந்தமும் பிடித்துக் கொண்டு திருமடைப் பள்ளிக்குப் போய் ஹோமம் செய்தவுடன் பலிதானம் செய்துவிட்டுச் சந்நிதிக்குள் வந்து திருவடி விளக்கிப் பலி பிரதானம் செய்தவுடன் மேளம் இசைத்துச் சுற்றுக் கோயில் தளிகை அமுது செய்வர்.

*சாயங்காலம் (க்ஷீரன்னத் தளிகை)* : திருவிளக்கு சமர்ப்பிக்கவும், தளிகை சேர்க்கவும் சந்தியா கால மேளம் இசைக்கவும் ஒரு குறியீடாகக் கூச்சம் அடிக்கப்படும். அப்போது பெரிய பெருமாள் திருச்சந்நிதியில் உள்ள குத்து விளக்கில் இருக்கும் பழைய நெய்யை நீக்கிப் புதிய நெய் ஊற்றித் தீபம் ஏற்றுவர். சந்நிதி வாசல் சேவகர் மணியகாரரைக் கேட்டுத் திருமடைப்பள்ளிக்குப் போய்த் தளிகை எடுத்துவருவர். திருச்சுற்று முதலி கால்பந்தம் பிடிப்பார். அனைத்து வாத்தியங்களுடன் நாழி கேட்டான் வாசல் வரை உள்ளூரார் ஊழியகாரர் சாமரம் வீச, பால் ஊழியக்காரர் குடைபிடிக்க மேலப்படி வழியாய் சந்நிதி வாயிலுக்கு வருவார்.

தளிகை அமுது பாறையில் ஸ்தலசுத்தி பண்ணி வைத்ததும், சாத்தாத வைணவன் மாலையையும், திருமேனி சரம், வெள்ளைமாலை, உபயநாச்சியார் மாலை, திரவரங்க மாளிகையார் மாலை கொடுக்க அதைச் சாற்றியவுடன் தளிகை அமுது செய்விக்கப்படுகிறது.

## செல சம்பா (செல்வர் சம்பா)

செல சம்பா திருவாராதனத்திற்குத் திருமணியெடுத்துத் தளிகை அமுது செய்வித்து, மடப்பள்ளி ஹோமம் செய்த பிறகு பலி ப்ரதானம் நடத்தித் திருமடைப் பள்ளியில் உள்ள அன்ன மூர்த்திக்குத் தளிகை கண்டருளப் பண்ணுவர்.

பின்னர் சந்நிதி வாயிலில் பலிப் பிரதானம் நடத்திச் சுற்றுக் கோயில் அமுது செய்வித்து, பிறகு நாச்சியார் பரிக்ரஹத்திற்கு ஏற்பட்ட பிரசாதம் பத்ரன், சுபத்ரன் ஆகியோருக்கு அமுது செய்விக்கப்படும்.

## அரவணை பால் அமுது

இரவு அரவணையான பின்னர் நம் பெருமாளுக்கு பால் அமுது செய்வர். பிறகு அர்ச்சகர்களுக்குரிய பாலைக் கொடுத்துவிட்டு மணியக்காரருக்குக் கைவிளக்கு சேவை ஆன பின்னர் மாலையினை வழங்குவர். அம்மாலையை அவர் தலையில் கட்டிக் கொள்வார். அர்ச்சகர் பெருமாளுக்குச் சயனம் சமர்ப்பித்த பிறகு கோயில் மிராசு பாத்யமுடைய வீணைக்காரர் வீணை வாசிக்கக் கெட்டிக் கதவுகள் பூட்டப்படும்.

பாலமுது சேனை முதலியார் சந்நிதியை அடைத்ததும், வீணை வாசிப்பு நிறுத்தப்படும். பின்னர் பாரிமேளம் எனும் மேளம். அதனை முன்பு அடித்தனர். இப்போது இல்லை.

இவ்வாறு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பூஜா காலத்திலும் சிறப்பாக நடைபெற்று வருவதைக் காண்கிறோம்.

இயல் : பதினொன்று

# விழாக்களின் நடைமுறை

யக்ஞ ஹோமம் நிகழ்த்துகையில் முத்தீயினைப் பயன்படுத்துகின்றனர். ஒன்று கர்ஹ பத்யம் ஆகும். இது முதன்மைத்தீ. ஹோமத்தின் பிறகு வேறு இரண்டு தீக்களும் இணைந்து கர்ஹபத்யமாகும். இத்தீயை அணைக்காமல் பாதுகாக்க வேண்டும். ஏனென்றால் தீயை அணைத்து விடுவதானது தொடர்ந்த சடங்குகளின் முடிவாகும். மீண்டும் சடங்குகளைத் தொடங்க வேண்டுமானால் சிறப்பு ஏற்பாடுகள், சடங்குகள் செய்ய வேண்டி இருக்கும். யக்ஞம் நிறைவுற்றவுடன் நெருப்பை ஒரு தனிப்பானையில் உகா என்பதில் வைப்பார்கள். வாயிலில் அகலமாகவும் அடி குறுகலாகவும் இருக்கும் அடிப்பகுதியில் உலர்ந்த பசும் எருவும், உமியும் இடப்படும் அதன் பின் நெருப்பு வைக்கப்படும்.

இந்த நெருப்பை ஹோமம் நடைபெறும் இடத்தில் வைப்பர். பூஜை நடத்துபவர்கள் தினமும் காலையும், மாலையும் இதனைப் பயன்படுத்துவார்கள்.

பவித்ரோத்சவம் விழாவின் போது யாகசாலைக்கு அரங்கநாதரை எடுத்து வந்து அவர் முன் ஹோமம் நடைபெறும். யாக பலிக்குத் தண்ணீரை வடிக்காமல் உப்பு மிளகு சேர்க்காமல் சமைத்து நெய் மட்டும் சேர்ப்பார்கள். இந்தப் பிரசாதத்திற்குச் சாறு என்று பெயர். தினசரி பூஜையில் இது முக்கியத்துவம் வாய்ந்தது. இதனை மட்பாண்டத்தில் சமைப்பார்கள். யாகத்தில் போன்றே பிறவற்றிலும்

நெய்யே பயன்படுத்துவர். பல்வேறு தயாரிப்புகளுக்கு முந்நாளில் மிளகு, வெல்லம், உளுந்து ஆகியவற்றைப் பயன்படுத்தினர். சர்க்கரை பயன்படுத்துவது தடைசெய்யப் பெற்றதால் அதனுடைய இடத்தில் உளுந்தைப் பயன்படுத்தினர். இப்படிப்பட்ட பழக்கமே உள்ளது. வாழைப்பழமும் கற்கண்டு மட்டுமே பெருமாளுக்குப் பிரசாதங்கள். கருவறையில் தேங்காய் உடைப்பது தடைசெய்யப்பட்டிருப்பதால் தேங்காய் அளிப்பதில்லை. முன்பு தேங்காய் துருவி வழங்கினர்.

கருவறையிலிருந்து பெருமாள் வெளியேறுகையில் தாசரி பாண்டம் அல்லது தீவட்டி பல்லக்குடன் வருகிறது. இது பானை வடிவ உகா ஆகும். இதனை ஒரு கொம்பில் கட்டி அதனுள் பருத்தித் துணிகளைப் போடுவர். அதனை ஏற்றி அது தொடர்ந்து எரிய நெய் ஊற்றுவர். பல்வேறு கோயில்களிலும் கோயில் பணிபுரிபவர்களைப் பகவானுக்கு ஆற்ற அழைப்பர். அதனை அருளப்பாடு என்பர். கருவறை வெளியே சடங்குகளில் ஈடுபட்டவர்கள் காத்திருப்பர். அவ்வாறு காத்திருப்பவர்கள் அவர்கள் பணி தேவைப்படும்போது அவர்களின் பணியின் பெயரால் பல்லக்குத் தூக்கி அல்லது சீர்பாதம் அல்லது குடையேற்றி என்றவாறு அழைப்பார்கள்.

பெருமாளின் மரியாதை பெற அழைத்து வரப்படும் ஆழ்வார்களும் அழைத்த பிறகுதான் உள்ளே வருவார்கள். வேள்விகளின் போதும் தலைமை புரோகிதர் அழைக்கும் வரை சடங்குகளைத் தொடங்காமல் மற்றப் புரோகிதர்கள் காத்திருப்பார்கள். இது **பிரிஷம்** எனப்படும். அருளப்பாடு என்பது பிரிஷம் போன்றது.

அதிகாலை உதயத்திற்கு முந்திய வேளையே பிரம்ம முகூர்த்தம் என்று பல்வேறு சமயப் பணிகளுக்கு உகந்த வேளை. தேவர்களுக்கு இக்காலம்தான் காலப் பிறப்பிற்கு முந்திய பிரம்ம முகூர்த்த வேளை. மார்கழியில் மிகவும் புனிதமான வேளையிது. தினசரி பூஜைக்கு முன் மார்கழியில் அரங்கத்துப் பெருமாளை எழுப்பத் திருப்பள்ளி எழுச்சி பாடுவார்கள்.

பிறதிவ்யதேசத்துப் பெருமாள்கள் எல்லாம் அவரவர் ஆலயங்கள் இரவில் மூடப்பெற்ற பின் திருவரங்கம் வருகின்றனர் என்பது நம்பிக்கை. ஆண்டாளின் நான்காவது பாசுரத்தை விளக்குகையில் இதனைக் குறிப்பிடுகின்றனர்.

அரங்கநாதர் வேட்டியிலும் குறிப்பிட்ட விழாவிற்கேற்ற அணிகலன்களும் அணிவார். எந்த நாளில் எந்த எந்த அணிகலன் அணிந்து பெருமாள் வருவார் என்று நாற்பது நாள்களுக்குப் பெண்கள் மனப்பாடமாகச் சொல்லும் அளவிற்கு முறையாக அணிவார்.

ஐந்து மாறுபட்ட பூக்களால் தொடுக்கப்பெற்ற அழகிய மாலையைச் சூட்டிக் கொள்வார் பெருமாள்.

ஒரே ஒருமுறை மட்டுமே மாறுபட்ட தோற்றத்தில் பெருமாள் பெண் வேடமிட்டு வருவார். குதிரை வாகனத்திலோ, யானை வாகனத்திலோ வருகையில் அதற்குரிய ஆடையை அணிவார்.

இதைத்தவிர இராமாவதாரத் தோற்றமோ அல்லது கிருஷ்ணவதாரத் தோற்றமோ அல்லது அலங்காரமோ செய்வதில்லை. அணிகலன் இல்லாவிட்டாலும் அரங்கர் அழகு மிக்கவர். பேரழகுமிக்கவர் ஆதலால் தான் அழகிய நம்பி என்று பெயர் பெற்றார்.

நம்மாழ்வார் நாயகி பாவத்தை மேற்கொண்ட போது தனக்குத் தரிசனம் அளிக்கும்படி வேண்டுகிறார். ஆழ்வார் தன் வீட்டிற்கு இறைவன் வரவேண்டாம் என்கிறார். ஏனென்றால் ஆண் பெணணைத் தேடிச் செல்வது முறையன்று. இதற்கு ஆழ்வார் கூறும் மாற்று உள்ளது. பகவான் தன் அடியவர்களைக் காக்க முதலையிடமிருந்தோ, இராட்சகர்களிடமிருந்தோ காக்க வெளிச் செல்வதுண்டு. அப்படிச் செல்கையில் ஆழ்வார் வசிக்கும் தெரு வழியே சென்றால்போதும் ஜன்னல் வழியே தரிசிக்கும் பேறு கிடைக்கும். ஏனென்றால் வாசலில் இருந்து பெண்டிர் நோக்குவதுடன் வழக்கமில்லை.

இந்த உண்மையை மனதில் கொண்டு உலா வருகையில் தன் அடியார் எல்லோரும் பெண்டிர் எனக்கருதி அழகாகப் பெருமாள் உடை உடுத்து வருகிறார்.

காலில் மெட்டி அணிந்து பிரயோகச் சக்கரத்தை ஏற்றித் திருவரங்கத்தைத் தீயவர்களை அளிக்கச் செல்வது போல் செல்கின்றார். அவருடைய எழிலான தோற்றம் கண்டு அடியவர் அவருடனேயே இருந்துவிட விரும்பினாலும் சம்சார பந்தத்தினால் இல்லத்தில் இருந்து அடுத்த தரிசனத்திற்காக ஏங்குவர்.

அரங்கநாதப் பெருமாளின் நடையின் வேகம் இருக்கிறதே அந்த நடையழகே தனி அழகு. ஒருமுறை பெருமாளைத் தாங்கிச் செல்லும் சீர்பாதம் தாங்கிகளைக் கும்பகோணத்திற்கு சாரங்கபாணிப் பெருமாள் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர்.

ஆனால் அவர்கள் சாரங்க பாணிப் பெருமாளை எழச் செய்தபோது அவர்களின் நடையின் வேகம், ரெங்கநாதரை எழுந்தருளச் செய்யும் போது காணப்பட்டது போல் காணப்படவில்லை. இதற்கு காரணம் என்று கேட்டபோது இதை முன்னரே சொல்லியிருந்தால் வந்திருக்கவே மாட்டோமே என்று கூறி எங்களுடைய திறமை, ஆற்றலால் அவருக்கு நடை அழகு வரவில்லை. பெருமாளின் காலணிகள் கொண்டுள்ள கட்டுப்பாடுகள் எங்களுக்கு நடையில் வேறுபாடு காட்டுகின்றன என்றனராம்.

பெருமாள் ஒவ்வொரு விழாவிற்கும் ஒரு நடை, ஒரு ஒய்யார அழகு காட்டுவார் என்பது குறிப்பிடத்தக்கது. கருவறையிலிருந்து வருகிறபோது ஒரு சிங்கம் புறப்பட்டு வருவது போலிருக்கும்.

குகையிலிருந்து புறப்பட்டு வரும் சிம்மம் நிமிர்ந்து, ஏறிட்டு இரு பக்கமும் உற்றுப் பார்த்துப் புறப்படுவது போலிருக்கும். அது போலவே பெருமாளும் சிறிது ஒவ்வொரு பக்கமும் திரும்புவார்.

கருவறைக்குத் திரும்பும்போது தலையைத் தாழ்த்தி ஒரு துளையினுள் புகும் நாகம் போல நுழைவார். இந்த நடையழகு யோக அனுபவத்தை விளக்கக்கூடியது.

மோகினி வடிவத்தில் வருகையில் ஒரு பெண் போலச் சிற்றடி எடுத்து வைத்து, இதுவரை போட்ட நீண்ட அடிகள் எடுப்பான அடிகள் போடாமல் வருவர். யாகத்திலுள்ள புரோகிதரின் வேகத்தை அரங்கநாதரின் நடையின் வேகம் ஒன்று காட்டும்.

நெல் அளவை காணச் செல்வது போல ஸ்ரீ ஜெயந்தி நாளில் மடப் பள்ளிக்கு வருகை புரிவார் நம் பெருமாள்.

ஆண்டுக்கு மூன்று தேர்கள். அதில் ஒன்று கோரதமாகும்.

தேருக்கு முதல் நாள் ஒவ்வொரு முறையும் குதிரை வாகனத்தில் வருவார். தேருக்கு அருகில் வருகையில் குதிரை வாகனம்

கோணல்மாணலாகச் செல்லும். இதைத்தான் கோண வையாளி என்பர். காண வேண்டிய எழில் காட்சி அழகுக் காட்சி, அது. இத்தகைய அனுபவத்தை வேறு திருக்கோயில்கள் எதிலும் பெற இயலாது.

தேர்க்கயற்றினைத் தொடுவதற்குச் செல்வர்களும், புகழ் பெற்றவர்களும் கூடுவர். ஒரு மெய்ஞானியின் கல்லின் வலிமையினைத் தேர்க் கயிறுகள் கொண்டிருப்பதாக நம்புகின்றனர். "ஸ்ரீ மடையர்களே, இரங்கநாதர் நேரில் வருகிறார். இடம்பிடித்துக் கயிற்றை இழுங்கள். இதன் மூலம் வைகுந்தத்தில் இடம் பெறுங்கள்" தேர்க் கயிற்றைத் தொடுவதனால் மட்டுமே தூய்மையான ஆன்மாக்களாகிச் சுவர்க்கம் செல்லத் தகுதி பெறுகிறோம்.

சிறப்பான திருவிழா நாளில் பெருமாளின் தோளில் பச்சைப் பசுங்கிளி தொத்திக் கொண்டிருக்கும். கிளி மாலையைப் பெருமாளும் தாயாரும் அணிவர். இலைகளாலும் மலர்களாலும் அழகுபடுத்தப் பெற்றுச்செய்யப்பட்ட கிளிகளின் அழகே கொள்ளை அழகு.

கஜேந்திர மோட்ச விழா நாளில் யானைக்கு அதன் தலையில் சடாரி சாத்தப் பெறுவது சுவை மிகுந்த நிகழ்ச்சியாகும்.

கவசமில்லாமல் நம் பெருமாளுக்குத் திருமஞ்சனம் நடைபெறுவது ஜ்யேஸ்டாபி ஷேகத்தின் போதுமட்டும்தான். இச்சடங்கில் பங்கு கொள்வோர் மட்டுமே திருமஞ்சனத்தைத் காண இயலும்.

நம் பெருமாளுக்கு வழங்கப்படும் உணவு திருப்பாவாடை எனப்படும். இதனைப் பெரிய திருப்பாவாடை என்பர். வேகவைத்த சோற்றில் மா, பலா, வாழை, உப்புச் சேர்த்து அதன்பின் இதனை அன்பர்களுக்கு வழங்குவர்.

ஜியேஷ்டாபிஷேகத்தைப்பொருத்தே ஆடி 18 அல்லது ஆடி 28இல் நம்பெருமாள் அம்மா மண்டபம் செல்கிறார்.

ஆடி மாதத்தில் மதியம் அம்மா மண்டபத்தில் எலுமிச்சை சாதம், பிற வகைச் சாதங்கள் அளிக்கப் பெற்றன. மக்கள் வீட்டிலே இவற்றை தயாரித்து வந்து காவிரிக் கரையில் பொழுதுபோக்குவர். தாலி, பொட்டு, வளையல், ஓலைக் காதணி (காதோலை) வழங்குகின்றனர்.

*பவித்திரோத்சவம் :* தவறுகளுக்குப் பரிகாரமான விழா. யக்ஞ சாலைக்கு காணச் செல்கிறார். இந்நாளில் 365 பூணூல் அணிந்திருப்பார். ஒவ்வொரு திவ்யதேசப் பெருமாளுக்கும் அவருடைய உடலில் இடம் உள்ளது என அந்தப் பகுதியில் ஒரு பவித்திரம் சாற்றப்படுகிறது என்றும் நம்புவர். இந்த ஆராதனை முடிவடைய இரண்டு மணி நேரமாகும்.

## தாயார் திருவடி தரிசனம்

புரட்டாசி மாதம் நவராத்திரி விழாவில் ஏழாம் நாள் விழா மிகவும் சிறப்பு வாய்ந்தது. அந்த ஏழாம் நாள் விழாவில் மட்டுமே தாயாரின் தாமரைப் பாதங்களைத் தரிசிக்கலாம். அந்த ஒருநாள் மட்டுமே தாயாரின் பாதங்களைத் தரிசிக்க இயலும் என்பது குறிப்பிடத்தக்கது.

## கார்த்திகை

சொக்கப் பானை கொளுத்திய பின் பெருமாள் சந்தனு மண்டபம் அடைவார். திருமங்கை ஆழ்வாரும் அங்கு வந்து சேருவார். ஆழ்வார் பெரிய திருமொழியில் முதல் பாசுரத்தைப் பாடுவார்.

பெருமாள் ஆழ்வாரை அவருடைய விருப்பம் என்ன? என்று கேட்குமாறு அர்ச்சகரிடம் கூறுவார். மார்கழித் திருவிழாவில் நம்மாழ்வார் வந்து பங்கேற்க வேண்டுமென்பார் பெருமாள்.

நம்மாழ்வார்க்குத் திருமுகம் ஒன்று கொண்டு செல்லப் பெற வேண்டும் என்று ஆணையிட்டுத் தன் பல்லக்குத் தூக்கிகளைத் தம் பல்லக்கை அழைப்பிதழுடன் எடுத்துச் சென்று ஆழ்வார் திருநகரி சென்று அழைத்து வரும்படி கேட்டுக் கொண்டு ஆணையிடுவார். அவர்கள் திருமங்கை ஆழ்வாருடன் உடன் அந்த இடத்தைவிட்டு நீங்குவார்கள். அதன்பின் தன் கருவறை செல்ல வேண்டும் என்பதைப் பெருமாள் உணர்வார்.

ஏற்கனவே பல்லக்கை அனுப்பிவிட்டதால் அர்ச்சகர்கள் அவரைத் தூக்கிச் செல்வர். அப்போது ஒவ்வொரு பக்கமும் திரும்பித் திரும்பிப் பெருமையும் மகிழ்ச்சியும் பொங்க ஒவ்வொரு அடியாக அடியெடுத்து வைத்துப் பெருமாள் செல்லும் காட்சி இனிமையாக

இருக்கும். இதையெல்லாம் எழுத்தில் வர்ணித்து வார்த்தைகளில் அடக்கிட முடியாது.

## மாசி பந்தக் காட்சி

மாசி மாதத்தில் நடைபெறும் தெப்பத் திருவிழாவின் நான்காம் நாள் கருட சேவை காணக் கொடுத்து வைக்க வேண்டும். அந்தக் கருட சேவை கண்டால் காசிக்குப் புனிதப் பயணம் மேற்கொண்ட புண்ணியம். எட்டாம் நாள் தெப்பத் திருவிழா முடித்து நம்பெருமாள் திரும்புகையில் அவர் பல்லக்கைச் சுற்றித் தீப்பந்தக் கூட்டம் உடன் வரும். இதுவும் கற்பகையில் காணவியலாத எழில் கோலம். இதனைப் பந்தக் காட்சி என்பர்.

இயல் : பன்னிரண்டு

# திருவரங்கத்துப் பிரசாதங்கள்

தளிகை எனப்படும் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு தம் வாயை மூடிக் கொண்டு வரவேண்டும். நாச்சியார் பரிக்ரகம் தளிகை வகைகளைத் திறக்க பால்காரர் தளிகை மேல் நெய் சேர்ப்பார்.

உச்சிக் காலத்தில் தயிரமுது நெய், வெல்லம், வேளையம், அமுது செய்வித்துத் திருமஞ்சனம் கண்டருளப் பண்ணுவார்கள். விருப்பன் திருநாளில் பத்தாவது நாள் பெருமாள் இளநீர் அமுது செய்கிறார்.

ஸ்ரீரங்கம் நம் பெருமாள் வசந்தோத்சவம் ஏழாம் நாள் விசாகத்துக்காகப் பால் மாங்காய் அமுது செய்வார். நம்பெருமாள் நாதமுனி ஆழ்வாருக்கு அவருடைய அவதார நட்சத்திரமான அனுஷத்தன்று ஆண்டிற்கு இருமுறை அவருடைய உபயமாகப் பெருமாளுக்கு ஒருபடி தோசை அமுது கண்டருளப் பண்ணுவர்.

ஜயேஷ்டாபிஷேக நாளில் அதிகாலையில் பொங்கல் அமுது படைக்கின்றனர்.

ஜயேஷ்டாபிஷேகத்தின் அடுத்த நாளில் சந்தனு மண்டபத்தில் ஓலைப் பாயின் மீது வெறும் பிரசாதம் பரப்பி பழங்கள், தயிர், பால் ஆகியன சேர்க்கின்றனர்.

பாஞ்சராத்ர ஸ்ரீ ஜெயந்தியின் போது கிருஷ்ணனுக்குச் சங்குப் பால் விசேடமான திருப்பணியாரங்கள் நிவேதனம் ஆகின்றது.

ஆவணி சுக்ல பட்சத்தில் கஜானனருக்கு அமிர்த கலசம் என்னும் மோதகம் அமுது செய்வித்து அருளுகின்றனர்.

கார்த்திகை மாதத்தில் வடை பருப்புப் பிரசாதம் நம்பெருமாள் பட்டர் பெருமாளிடம் அளிப்பார்.

திருமொழித் திருநாளில் திருப்பணியாரம் அமுது செய்து அருளுவார். பத்தாம் திருநாளில் பன்னீராயிரம் பணியாரம் திரு அமுது செய்வர்.

தை மாதம் பௌர்ணமிக்கு முதல் நாளும் உடையவர் சந்நிதியில் இளநீர் அமுது செய்கிறார்.

கொடியேற்றத்தின்போது விழாக் காலங்களில் கொடி ஏற்ற அப்பம் விநியோகமாகிறது.

**அரவணை**

திருவரங்கத்துப் பிரசாதங்கள் எல்லாம் புதுப்புது மண்பாண்டங்களாலேயே ஆக்கப்படுகின்றன. தினமும் மட்பாண்டங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதைப் போலவே விறகு அடுப்பில்தான் பிரசாதங்களைச் செய்கின்றனர்.

திருவரங்கத்துப் பிரசாதங்கள் பத்துக் கடையில் விற்கப்படுபவைகளை விட நம் பெருமாளுக்குப் படைக்கப் பெறுபவை நெய்யில் செய்யப் பெறுபவை.

திருவரங்கத்துப் பிரசாதங்களில் மிளகாய் சேர்க்கப்படுவதில்லை. புளியோதரை முதலியவைகளுக்கும் மிளகுதான். நல்லெண்ணெய்தான்.

இரவு அர்த்த ஜாமத்தின் போது தாயார் சன்னதியிலும், நம்பெருமாள் சன்னதியிலும் அரவணை அமுது கிடைக்கும். முதலிலேயே சொல்லி வைத்தால் கிடைக்கும்.

தாயார் சன்னதியில் அரவணையுடன் கீரை மசியலும் இருக்கும்.

அரவணை என்பது அரிசி, புத்துருக்கு வெண்ணெய், வெல்லம், ஏலக்காய் மட்டும் சேர்த்துச் செய்யப்படுவது. சர்க்கரைப் பொங்கல் போன்று இதில் முந்திரி, திராட்சை இராது. வெண்ணெயை உருக்கி அப்படியே ஊற்றிச் செய்வதில் இனிப்பும் தூக்கலாக இராது. ஆகையால் சுவையாக இருக்கும்.

## மார்கழி மாதத்துச் சிறப்பு

மார்கழி மாதத்தில் குளிர்காலம் ஆகையால் செல்வர் ரொட்டி என்று ஒருவகை ரொட்டி கிடைக்கும். சாதாரணமாக எளிதில் கடித்துச் சாப்பிட இயலாதவாறு "கடுக்" என்று கடினமாக இருக்கும். ஊறவைத்துதான் அதனைத் தின்ன முடியும். மார்கழி மாதம் தவிர மற்றைய நாள்களில் செல்வர் ரொட்டி கிடைக்காது என்பது சிறப்பு அம்சம்.

மார்கழியில் மற்றொரு சிறப்பு அம்சம் தோசை ஆகும். நெய்யில் செய்யப்படும் இத்தோசை மார்கழியில் ஏராளமாகச் செலவாகும்.

மார்கழி மாதத்துப் பெரிய வடை, பெரிய அதிரசம் எல்லாம் தனிச்சிறப்பு வாய்ந்தவை. அது போலவே திருவரங்கத்துத் தேன்குழல் சுற்று ஒவ்வொன்றும் ஒரு விரல் அளவில் இருக்கும். மடப்பள்ளி பிரசாதத்தின் சுவை தனிச்சுவைதான்.

வடையை நெய்யில் வேகவைத்து எடுப்பது போலவே, தேன்குழலும் நெய்யில் பொரித்து எடுக்கின்றனர்.

## மைசூர் பாகு

பங்குனி உத்திர நாளில் சேர்த்தியின் போது நள்ளிரவில் வழங்கப்படும் சூடான கேசரிக்கும் தனிச்சுவை உண்டு. அதுபோலவே மைசூர்ப்பாகு, அக்கார வடிசல் ஆகியன பங்குனி உத்திர நாள் சிறப்புப் பிரசாதங்கள்.

பிரசாத ஸ்டாலில் விற்கப்படும் அதிரசத்தில் சிறிய அதிரசத்தை விடப் பெரிய அதிரசம், பெரிய வடை ஆகியன கைமணக்க, வாய் இனிக்கச் செய்வன.

இன்னின்ன நாளில் இன்னின்ன பூஜைக்கு இன்னின்ன பிரசாதம் என்றும் வழிவகுத்துக் கொடுத்திருக்கிறார் இராமானுஜர் என்பது குறிப்பிடத்தக்கது.

இயல் : பதிமூன்று

# திருவரங்கத்துச் சிற்பங்கள்

## சேஷராயர் மண்டபம்

சேஷராயர் மண்டபத்தின் முகப்பில் உள்ள குதிரை வீரர்களின் போர், புலியின் உடலில் குத்திய கூர்வாள் வெளியே நீட்டிக் கொண்டு இருத்தல், குதிரையின் கால், வால் ஆகியவற்றின் அழகிய தோற்றம், தூணில் தசாவதாரச் சிற்பங்கள், ஆஞ்சனேயர், கிருஷ்ணன், சிவன், முனிவர்கள், கருடசேவை, வாலி, சுக்ரீவன் சண்டை, பெண்டிரின் நிர்வாணச் சிற்பங்கள், தலைக்கு மேல் வால் உயர்ந்த ஆஞ்சனேயச் சிற்பங்கள் காணத்தக்கன. ஆயினும் அயலவர், பிற சமயத்தவர், வடபுலத்து இருந்து படையெடுத்து வந்த படையெடுப்பாளர்களின் கலைச் சேதத்துக்கு ஆளாகி மூளியாகியுள்ளன பல என்பது வருந்தத்தக்க செய்தியாகும்.

## 2. வேணுகோபாலர் சன்னதி

வேணு கோபாலர் சன்னதியிலும் பல சிற்பங்கள் சிதைவுபட்டுள்ளன. ஹொய்சாளரின் கலைச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் கண்ணாடி கொஞ்சும் காரிகை, பெண்களில் புற அழகு காட்டும் சிற்பங்கள், வீணை இசைக்கும் மகளிர், வெண்ணெய்க் கண்ணன், நெற்றிக்குத் திலகமிடும் மங்கை ஆகியன இன்றும் காணத்தக்கன. தாக்குதலுக்குப் பிறகும் எஞ்சியிருப்பவை இவை.

## 3. கருட மண்டபம்

இந்த மண்டபம் மிகவும் பெரியதும், அழகு வாய்ந்ததும் என்றால் மிகையாகாது. மதுரை நாயக்கர் காலப் பாணியில் அமைந்த தேவ

கோஷ்டங்களும், கும்பபஞ்சரங்களும் தூணில் பத்துப் பெரிய நாயக்கர், சிறிய, சிறிய நாயக்கர் உருவங்களும் குறிப்பிடத்தக்கன. கண்ணனின் லீலைகளில் கன்னியர் ஆடைகளைக் கைக்கொண்டு மரத்தில் இருத்தல், அனுமன் தோலில் நின்று அம்பு விடும் இராமன், அனுமனுக்கு ஆசி வழங்கும் இராமன், ஆடையில்லா அழகு நங்கையர், நீர் சுமந்து நெளிந்து செல்லும் நித்திலக் கன்னியர், முனிவர்கள், சிம்ம உருவெடுத்து இரண்யனின் குடலைப் பிடுங்கும் நரசிம்மன், காம லீலைகளைக் கல்லில் வடித்துக் காட்டிய சிற்பங்கள், காளிங்க நர்த்தனன் என்று நின்று, நின்று காணத்தக்க சிற்பங்கள் இங்கு ஏராளம்.

## 4. சேத்தி மண்டபம்

இராமர், லட்சுமணர், அனுமான், திருமால் சாமரம் வீசும் கன்னியர், நர்த்தனக் கண்ணன், கோபியர் கொஞ்சக் கொஞ்சப் புடவை திருடிய மாயவன், கோவர்த்தன கிரியைக் குடையாய் ஏந்தியவன், அழகு மங்கையர், அமைதி முனிவர்கள், கருட வாகனப் பெருமாள், நரசிம்மப் பெருமாள், இரண்யனின் குடலை உருவுதல், தூணில் ஆழ்வார்கள் என்று கல்லில் எழுந்த கலைப் படைப்புகள் பிரமிப்பு ஊட்டுகின்றன.

## 5. சொர்க்க வாசல் வழி மண்டபம்

சொர்க்க வாசல் செல்லும் வழி மண்டபங்கள் பக்தி மயக்கத்தை அல்லாது காம மயக்கத்தைக் கடக்கவியலாமல் செய்பவை. சிற்றின்பம், சேர்க்கையின்பம் கடந்தால் தான் பேரின்பம் பெறவியலும் என்று கல்லில் காம லீலைகளைக் கற்பனையிலும் எண்ண முடியாதவற்றைச் சிற்பி ஏன் வடித்தான் என்பது புதிர்தான். உண்மையில் இல்லாத கற்பனை உறவுகளுக்குக் கல்லில் உளி கொண்டு தீட்டி வைத்துப் பிரமிக்க வைக்கும் சிற்பங்கள்.

பிட்சாடனராக நிர்வாணமாகச் சிவபெருமானும், முனி பத்தினியர் முழு நிர்வாணமாயும் இருக்கும் சிற்பங்கள், ஆண் பெண் உடலுறவுச் சிற்பங்கள், நின்ற நிலையில் குழந்தை பெற்றெடுக்கும் பெண் என்று இருந்தாலும் நரசிம்ம அவதார வகைகள், சீதையைக் காணும் அனுமன், இருப்பிடம் தராத இராவணனுக்கு வாலை வளர்த்து உயர்ந்து அமர்ந்த அனுமன், மல்யுத்தம், தசாவதாரம், சஞ்சீவி மலை சுமக்கும் அனுமன் என்று சிற்பங்களுடன், பல்லி, மீன், குரங்கு, பறக்கும்

அனுமன், பாலகிருட்டிணன் பின்னல் சடை அழகி, நடன மங்கையர், அழகு மங்கையர், யுத்தம் செய்கையிலேயே புணர்தல் என்று எல்லாம் கலந்த கலவை எனினும் நின்று பார்த்தால் நம்மை ஒருவிதமாகப் பார்க்க வைப்பன. இலை மறைவு, காய் மறைவுச் செய்திகள் கல்லில் பளிச் என்று வெளிச்சம் போட்டுக் காட்டப்பட்டுள்ளன.

### 6. அரங்கேற்ற மண்டபம்

தாயார் சந்நிதி எதிரில் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றிய மண்டபத்துத் தூண்களில் சிறிய சிறிய சிற்பங்கள் என்றாலும் அழகிய சிற்பத் திறனுக்கும், சிற்பியின் கைவண்ணத்திற்கும் கட்டியம் கூறுகின்றன. காலில் முள் எடுக்கும் கன்னி, காதில் அணிகலன் அணியும் அழகி, கண்ணாடி பார்ப்பவள், சோம்பல் முறிப்பவளான சுந்தரி, வேணுகோபாலன், வெண்ணெய் ஏந்திய கண்ணன், கருட வாகனத்தில் பெருமாளும் தாயாரும், ஆனைக்கு இரங்கிய அண்ணல் ஆகிய சிற்பங்கள் காணத்தக்கன.

### 7. கீழ்ப்பட்டாபி ராமர் முன்மண்டபம்

பெரிய அழகுமிக்க மங்கையர், நடன மங்கை குழந்தை ஏந்திய மங்கை, நிர்வாண நங்கையும் முனிவரும், அனுமான், கருடன், ராமர், போர் புரிதல் பூவேலைப்பாடுகள் குறிப்பிடத்தக்கவைதாம்.

### 8. மணல்வெளி வேணுகோபாலன் சன்னதி எதிர் மண்டபம்

நான்கு பெரிய தூண்களில் பெரிய வடிவில் இராமபிரான், இலக்குவன், அனுமன், கருடச் சிற்பங்கள், பெரிய அழகு மங்கை, குழந்தையைக் கொஞ்சும் கோமலவல்லி, கோதண்டராமன், கருட வாகனர், பாம்பு மாலைப்பெண், ஆடல் கலை நங்கை வேணு கோபாலன், போர் மறவர், பூவேலைத் தூண்கள் என்று சிற்பக் கலைக் கூடம் எனலாம்.

### 9. திருவந்திக் காப்பு மண்டபம்

ஜெகம் புகழும் புண்ணிய கதையாம் ஸ்ரீ ராமனின் கதையைத் தமிழ்ச் சொல்லில் வடித்தார் கம்பர். அந்தக் கம்பனுக்கு இருபதாம் நூற்றாண்டில் சிலை எடுத்தனர். ஆனால் பெரிய கம்பன் சிலையைக் கம்பனுக்கு அன்றே அளித்து விட்டான் சிற்பி இங்கே. வாலி, சுக்ரீவன் யுத்தம், குதிரை வீரர் போர், இராம லட்சுமணர், திருமால், கலிலைக் கண்ணன், ஆடும் கண்ணன், காமச் சிற்பங்கள், ஒரே தலையில் நான்கு குரங்குகளில் வடிவம் ஆகியன இங்கே காணலாம்.

### 10. ரெங்கவிலாஸ் மண்டபம்

கஜானன், துர்க்கை ஆகியோர் தூணில் காண்கிறதுபோல், இராமர், இலக்குவன், நடனக் கண்ணன், ஆடையில்லா நங்கை, ஆடவர் ஆடையின்றித் தவம், ஆசைதுறந்த முனிவர் ஆடை துறந்த மங்கையுடன், நாயக்க மன்னர்கள், பெரிய யாளி உருவத் தூண், இராமாயணக் காட்சிகள், அனுமன், அழகு நங்கையர், காம லீலைக் கற்சிற்பங்கள் நிறைந்துள்ளன.

### 11. தாயார் சன்னதி முன் மண்டபம்

தாயார் சன்னதி முன் மண்டபத் தூணில் துர்க்கை, கருட சேவை, திருமால், தூணில் அனுமன், தூணில் கணபதி, சிவலிங்கம், வேடன், நாயக்க மன்னர் சிற்பங்கள் என நிறையச் சிற்பங்களைக் காண்கின்றோம்.

### 12. ஆயிரங்கால் மண்டபம்

953 கல்தூண்கள் கொண்ட மண்டபம் இது. வைகுண்ட ஏகாதசி நாளில் 47 மரத் தூண்கள் சேர்ந்து ஆயிரமாகும் தேர் வடிவில் அமைந்துள்ள மண்டபம் மனதைக் கவர்கிறது. சக்கரங்களுடன் கூடிய கல் தேரைக் குதிரைகள் இழுத்துச் செல்கின்றன. மிகுந்த அழகிய சிற்ப வேலைப்பாட்டுக்குச் சான்று இது.

### பொதுவான சிற்பங்கள்

நாயக்க மன்னர்கள், தந்தத்தில் அமைந்த விஜயரங்க சொக்கநாதர், இராம லட்சுமணர், திருமால், கருட சேவை, வாலி சுக்ரீவன் போர், வெண்ணெய்க் கண்ணன், புடவை திருடும் கண்ணன், நாட்டிய மங்கையர், நாணம் கொண்ட நங்கையர், நாணமின்றி ஆடை துறந்த அழகியர், ஆண், பெண் அந்நியோன்யச் சிற்பங்கள் ஆங்காங்கே பலப் பல காணப்படுகின்றன.

கல்லில் வடித்துள்ள அணிகலன்கள், நாயக்க மன்னர், மகளிர் ஆடைகள், சிற்பக் கலைக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகள்.

காலங்கள் எத்தனை கடந்த போதிலும் கல்லில் உளி கொண்டு சிலை வடித்துக் கலைக்கு உயிர் கொடுத்த பெயர் தெரியாச் சிற்பியின் கைவண்ணம் தமிழர் பெருமைக்குத் தனிச் சிறப்புக்குச் சான்றாக விளங்குகிறது.

இயல் : பதினான்கு

# கல்வெட்டுக்கள்

திருவரங்கம் கல்வெட்டுக்கள் நிறைந்து வரலாற்றுக்குப் பெருமை சேர்க்கும் திருத்தலம். இரண்டாம், மூன்றாம், நான்காம் திருச்சுற்று மதில் சுவர்களில் ஏராளமான கல்வெட்டுக்கள் நிறைந்துள்ளன. அரங்கரின் நிலபுலன்கள், நிவந்தங்கள் வழிபாடுகள் ஆகியன கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இத்திருக் கோயில் விழாக்கள் குறித்தும் கல்வெட்டுகளிலிருந்து அறியலாம்.

700க்கும் மேலான கல்வெட்டுக்கள், சோழர், பாண்டியர், ஒய்சாளர், விஜயநகர, நாயக்க மன்னர்களால் அளிக்கப் பெற்றவை

முதலாம் ஆதித்தன் (கி.பி. 871–907) காலத்துக் கல்வெட்டே பழமையானது ஆகும்.

கல்வெட்டுக் கூறும் விழாக்கள் பலவாகும்.

முதலாம் பராந்தகளின் கல்வெட்டு பங்குனி உத்திரத் திருநாள், ஏகாதசி, திருமஞ்சனம் குறித்தும், முதலாம் குலோத்துங்க சோழன் கல்வெட்டு பங்குனித் திருநாள், ஐப்பசித் தேர் குறித்தும் கூறுகின்றன. சோழர் காலக் கல்வெட்டுக்களில் 82 முதலாம் குலோத்துங்கன் காலத்தவை. விக்கிரச் சோழன் கல்வெட்டு ஏகாதசித் திருமஞ்சனம் குறித்தும், குலோத்துங்கச் சோழன் கல்வெட்டு 81 கலசங்களால் திருமஞ்சனம் குறித்தும் கூறுகின்றன.

பங்குனித் திருநாள், ஆதி பிரம்மோத்சவம் குறித்துக் கிருஷ்ண தேவராயர், திருமலை மகாராயர், ஸ்ரீரங்கராயர், வேங்கட தேவராயர், மூன்றாம் ரெங்க மன்னன் கல்வெட்டுகள் செய்திகளை வழங்குகின்றன. பெருமாள் எல்லைக் கரை செல்வதை நாயக்கர் கல்வெட்டுக் கூறுகிறது.

சித்திரை மாதத்தில் நடைபெறும் விருப்பண்ணர் திருநாள் பற்றி வேங்கட தேவராயர், விருப்பண்ண உடையார், கல்வெட்டுகள் வாயிலாக அறியலாம்.

வேங்கடராயர் கல்வெட்டு சித்திரா பௌர்ணமி பற்றிக் கூறுகிறது. தமிழ் ஆண்டுப் பிறப்புக் குறித்துச் சடா வர்ம சுந்தர பாண்டியன் கல்வெட்டுக் கூறுகிறது.

திருப்பவித்திரத் திருநாள் குறித்து அச்சுத தேவ மகாராயர், வெங்கராயன், நாயக்கர் கல்வெட்டுகள் கூறுகின்றன.

ஆண்டாளின் திருநட்சத்திரத்தில் சூடிக் கொடுத்த நாச்சியாரின் ஆடிப்பூர விழாவில் ஸ்ரீ ரங்கராயர் அமுது படைத்த செய்தி கல்வெட்டில் காணப்படுகிறது. நாயக்கர் கல்வெட்டுக்கள் ஆடிமாதப் பிறப்பு, திருப்பாவாடை பற்றிக் கூறுகின்றன.

புரட்டாசி மாதம் நடைபெறும் நவராத்திரி மகா நவமி முதலிய விழாக்களைக் குறித்தும், கிருஷ்ண ஜெயந்தி குறித்தும் கிருஷ்ண தேவராயர் கல்வெட்டுக்கள் வாயிலாக அறியலாம்.

திருவாய்மொழி, இயற்பா ஓதுதல் பற்றிய செய்திகள் அச்சுதர் தேவராயர், ஸ்ரீரங்கராயர், வேங்கடராஜா முதலியோர் கல்வெட்டுகள் வாயிலாக அறியலாம்.

சடாவர்மன் சுந்தர பாண்டியன் கல்வெட்டு கார்த்திகைத் திருநாள் பற்றிக் கூறுகிறது. இரண்டாம் இராசேந்திரனின் கல்வெட்டு, இரண்டாம் இராஜாதிராஜன் அவருக்கு முந்தியவர் கல்வெட்டு, அவருக்குப் பிந்தியவர் வீர ராமநாதன் கல்வெட்டு ஆகியன வைகுண்ட ஏகாதசி பற்றிக் கூறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

பதின்மூன்றாம் நூற்றாண்டிலேயே வைகுண்ட ஏகாதசித் திருநாள் சிறப்புடன் நடைபெற்றுள்ளது. கி.பி. 1253இல் ஆட்சி

செலுத்திய மூன்றாம் இராசேந்திரன் காலக் கல்வெட்டு தைப் பொங்கல் பற்றிக் கூறுகிறது.

ஸ்ரீரங்கராயர் கல்வெட்டு முத்தங்கி சேவை, திருப்பாவை பற்றிக் கூறுகிறது.

பூபதித் திருநாள் குறித்து வீரபூபதி மன்னரும், கிருஷ்ண தேவராயரும், அச்சுத தேவராயரும், தெப்பத் திருநாள் குறித்து ஸ்ரீரங்கராசனும் குறிப்பிடக் காண்கிறோம்.

சதா சிவராயரின் மாசித் திருநாள் பற்றிக் கூறும் கல்வெட்டுக் கிடைத்துள்ளது.

இதுபோல் யுகாதி, ஆழ்வார்களுக்குத் திருநாளில் அமுது படைத்தது. சேனை முதலியார் அமுது செய்தருளும் தோசைப் படி இரண்டிற்கு அறக்கொடை, கைசிக ஏகாதசி திருப்பாவாடை, ஊஞ்சல் விழாக் குறித்தும் கல்வெட்டுக்கள் இருப்பன இத்திருக் கோயிலின் தொன்று தொட்டு வரும் விழாச் சிறப்பிற்குச் சான்றுகளாகும்.

இயல் : பதினைந்து

# திருவரங்கன் உலா

திருவரங்கத்தை விட்டு மூன்று முறை நம்பெருமாள் (உற்சவர்) திருவரங்கன் சென்று திரும்பியிருக்கிறார்.

**திருவரங்கன் முதல் உலா**

அலாவுத்தீன் கில்ஜியின் தளபதி, அரவாணியான மாலிக்கபூர் தென்னாட்டின் மீது படையெடுத்து டெல்லி சென்றபோது, யானைகள், குதிரைகள், பொன், மணி, கலைச் செல்வங்களைக் கொள்ளையடித்துச் சென்று மன்னர் முன் வைத்தார்.

மன்னர் வந்த செல்வத்தை வாரித் தம் அன்பிற்குரிய உயர்குடியினருக்கு வழங்கினார். அப்படிக் கொடுத்த பொருள்களில் ஒன்றாக விளங்கியவர் அழகிய நம் பெருமாள். அதனைப் பெற்றவர் அரசரின் கீழ் ஆட்சி செலுத்திய அப்துல்லா உசேன் அசன்பிபாதுஷா.

அவருடைய மகள் அழகிய இளம் பெண் சுரதாணி. தந்தை கொணர்ந்தவற்றில் இருந்த அரங்கனின் திருஉருவைப் பார்த்தாள். அரங்கனின் திருஉரு அவளைக் கொள்ளை கொண்டுவிட்டது.

அரங்கன் அரங்கத்து மாநகர் விட்டுச் செல்கையில் திருவரங்கத்து அருகில் இருந்த திருக்கரம்பனூரில் அரங்கனின் அடியவளாய் இருந்த தேவதாசி ஒருத்தி இருந்தாள். அரங்கனைக் காணாமல், அமுது உண்ணாத, அன்புள்ளம் கொண்ட பாவை.

டெல்லிப் படைகள் அரங்கனைக் கொண்டு சென்றபோது அவளும் பின் தொடர்ந்தாள். அரங்கமீது கொண்ட ஆழ்ந்த பக்தி அவளுக்கு அன்றைய நாள் பயணத்தை அலுப்பாக்கிடவில்லை. ஒரு

பெண் படையின் பின் செல்வதா? அதுவும் டெல்லிக்கு அன்றைய நாளில், அது உண்மையாகுமா என்று கூட வியக்கக்கூடும். ஆனால் அது உண்மை. அவள் பின் தொடர்ந்தது இப்படித்தான்.

அன்றைய நாளில் படையினர் செல்கையில் அவர்களுடன் வியாபாரிகளும் சென்று, படையினருக்கு வேண்டியவற்றை விற்பது வழக்கம். அவ்வாறு சென்ற படையினர் உடன் சென்ற வியாபாரிகளுக்கு உதவி செய்யும் பணிப் பெண்ணாய்த் தொடர்ந்த அவளைப் பின்னாளில் 'பின் தொடர்ந்த வல்லி' என அவள் செய்த பெருமைமிகு பணியினால் சிறப்பித்துக் கூறினர்.

அரங்கன் டெல்லியில் சுரதாணியின் அந்தப்புரத்தில் இருக்கும் செய்தியை அறிந்து, பயணக் குழுவுடன் பயணித்துத் திருவரங்கம் கோயிலாரிடம் பெருமாள் திருஉரு இருக்குமிடத்தைத் தெரிவித்தாள்.

ஆடல் பாடல்களில் ஆசை கொண்ட சுல்தானை ஆடிப்பாடி மகிழ்வுபடுத்தி அரங்கனைப் பரிசாகப் பெறலாம் என்று முடிவு செய்தனர். ஆடல் பாடல்களில் சிறந்த அறுபது பேர் அரங்கனை மீட்க அங்கே சென்று அவர் முன் ஜக்கிந்தி நடனம் ஆடினராம். மனம் மகிழ்ந்து மன்னர் அளித்த வெகுமதிகள் அவர்களை மகிழ்விக்கவில்லை. மன்னரிடம் ஆடலுக்குப் பரிசாக ரெங்கமன்னார் தான் வேண்டுமென வேண்டி நின்றனர்.

மன்னவருக்கோ, பொன் பொருளைவிடப் பெருமாளைப் பொன்னெனப் போற்றுவது கண்டு வியப்பு. அந்தப்புரத்திலிருந்த பெருமாளை எடுத்துச் செல்ல இசைவளித்தார்.

அந்தப்புரத்தில் ஓர் அதிசயம் கண்டனர். சுரதாணி அரங்கன் மீது ஆறாக் காதல் கொண்டு அல்லும், பகலும் அரங்கனைவிட்டு அகலாத பிரேம பாசத்தில் மூழ்கியதைக் கண்டவர்கள், கேட்டால் அவள் தரமாட்டாள் என்பதை உணர்ந்து கொண்டனர். எனவே இரவில் அவள் உறங்குகையில் தெய்வத்தை எடுத்துக் கொண்டு விரைந்து நடையைக் கட்டினர்.

மறுநாள் விழித்தெழுந்த சுரதாணி தம் காதல் மணாளனாம் அரங்கனைக் காணாது தவித்தாள், அரற்றினாள். மகளின் நிலை இவ்வாறாகும் என்று உணர்ந்திடாத பாதுஷா, மகளுக்கு மனமிறங்கி சிறு படையைத் திரட்டி அரங்கனைக் கொணர மகளுடன் அனுப்பினார்.

டெல்லிப் படை தொடர்வது கண்ட அவர்கள் திருவரங்கம் நேரே வராமல் வேறு திசை சென்றனர். சுரதாணி திருவரங்கம் அடைந்தாள். கோயிலில் எங்கும் தேடினாள். திருவரங்கன் அங்கு இருந்தால்

அல்லவா கிடைப்பதற்கு சுரதாணி அக்கணமே துக்கம் தாளாமல் உயிர் துறந்தாள். செய்தி கேட்ட பாதுஷா மனம் வருந்தினார்.

சுரதாணியின் அரங்க பக்தி கண்ட கோயிலார், திருக்கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் வடகீழ் மூலையில் சுரதாணி உருவத்தை ஓவியாமாய் தீட்டி வழிபட்டு வந்தனர். அரங்கனைக் காதலித்தவள் அல்லவா? அதனால்தான் அந்த மரியாதை. இந்தச் சுரதாணியின் பொருட்டுச் சில நடைமுறைகளைப் பின்பற்றுகின்றனர்.

பசும்பாலை அன்றைய நாளில் காய்ச்சாமல் அருந்துவது வடபுலத்தவர் பழக்கம். ஆதலால் பெருமாளை நேசித்த துலுக்க நாச்சியாரும், அங்கிருந்து வந்தவராதலால் காய்ச்சாத பசும்பாலும், ரொட்டியும் வெண்ணெயும் நைவேத்தியமாகக் காலையில் அவருக்குப் படைக்கப்படுகிறது.

பெருமாளுக்குக் கைலி அலங்காரத்துடன் திருமஞ்சனம் காண்பதும் கூடத் துலுக்கநாச்சியார் ஆன சுரதாணியின் பொருட்டே என்பர்.

அதுமட்டுமல்லாமல் வழக்கமாக வெற்றிலை போடுபவர்கள் வெற்றிலையில் சுண்ணாம்பைப் பின்பக்கம் தடவியே போடுவது வழக்கம். டெல்லி இசுலாமியர்கள் வெற்றிலையின் முன்பக்கம் சுண்ணாம்பைத் தடவுவார்களாம். அதனால் திருவரங்கத்தில் பெருமாளுக்குப் படைக்கும் வெற்றிலையில் இன்றும் முன் பக்கமே சுண்ணாம்பு தடவுகின்றனர்.

டெல்லியிலிருந்து கோதவர்கள் எடுத்துக் கொண்டு சென்ற பெருமாள் என்ன ஆனார்? பெருமாள் திருப்பதி வந்து சேர்ந்தார்.

ஓர் ஆண்டிற்குப் பிறகு கோயிலில் வழிபாடுகளைத் தொடர முடிவு செய்து நம் பெருமாள் இடத்தில் புதிய பெருமாள் திருவரங்க மாளிகையரை ஸ்தாபிதம் செய்தனர். பூஜைகள் தொடங்கினர். மரத்தடியில் மறைத்து வைத்த தாயாரையும் அவர்களால் கண்டுபிடிக்க முடியாததால் புதிய உருவம் வடித்துப் புதிய சடங்குகள் செய்தனர்.

கோதவர்கள் பெருமானைத் திருப்பதிக்குக் கொண்டு சென்றவர்கள் பெருமாளைத் தேடிச் சுல்தானின் படை வருவது அறிந்து மூத்த கோதவர் பெருமாளை மறைத்து வைக்க எண்ணிக் குகை ஒன்றில் மறைத்து வைத்தார்கள். அவர்களுக்கு முறையான வழிபாட்டு முறைகள் தெரியாவிட்டாலும் தினமும் பூஜையைச் செய்தனர். இவ்வாறு பூஜைகளுடன் ஐம்பது ஆண்டுகள் திருப்பதியில் ஓடிவிட்டது.

நம்பெருமாள் மீண்டும் திருவரங்கம் வரச் சித்தம் கொண்டார்.

பெருமாளுடன் ஒருநாள் ஒரு தனி மனிதர் திருப்பதி குகையில் இருப்பதைக் கண்ட வேடர்கள் சிலர் சந்தித்து அவரைப் பற்றி விசாரித்தபோது கோதவர் விளக்கமாக என்ன நடந்தது என்று கூறினார். திருவரங்கத்திற்குப் பெருமாளை மீண்டும் கொண்டு செல்ல அவர்களின் உதவியை வேண்டினார். இவருடைய வேண்டுகோளைச் சந்திரகிரியைச் சேர்ந்த ஒரு பெரிய மனிதரிடம் கூற அவர் நம்பெருமாளுடன் திருவரங்கம் திரும்ப உதவினார்.

பெருமாளை அறிந்த மனிதர்கள் அப்போது யாருமில்லை. இளைய தலைமுறைக்குத் திருவரங்க மாளிகையாரையே தெரியும் எனவே, கோதவரின் பெருமாளை ஏற்கத் தயங்கினார். அப்போது அற்புதம் விளைந்தது. கோயிலுக்குள் கோதவர் பெருமாளைக் கொணர்ந்த போது தாயார் மரத்தடியில் மறைந்திருந்தவர் வெளிப்பட்டார். மக்கள் அரை மனதுடன் ஏற்றுக் கொண்டாலும், பல்லாண்டுகளுக்கு முன் தொலைந்து போனவர் இவர்தான் என்பதற்கு உறுதியான ஆதாரம் விரும்பினர்.

அறுபது ஆண்டுகளுக்கு முந்திய பெருமாளை அறிந்த ஒருவரை அவர்கள் அடையாளம் காட்டத் தேடியபோது பெருமாளின் துணிகளை வெளுப்பவர், பெருமாள் திருமஞ்சனம் ஆனவுடன் தரப்படும் துணியைப் பிழிந்து வரும் தீர்த்தத்தைத் தன்னால் உணர முடியும் என்று உறுதிபடக் கூறினர். ஆம் சலவையாளர் வந்திருப்பவர் பழைய நம் பெருமாளே பல்லாண்டுகளுக்குப் பின் எழுந்தருளியவர் என்பதனை மெய்ப்பிக்க 57 ஆண்டுகளுக்குப் பின் வந்தவர் நம் பெருமாள் என அழைக்கப் பெற்றனர்.

## இரண்டாம் உலா

உய்யக் கொண்டாரின் (நாத முனியன் சீடர்) காலத்தில் ஓதியர்கள் பெரும் கிளர்ச்சி ஏற்பட்டது. நம் பெருமாளில் பக்தர்கள் இப்போதும் பெருமாளுக்கு ஆபத்து ஏற்படும் என்று அஞ்சி அழகர் கோயில் கொண்டு சென்று அழகர் கோயிலில் உள்ள கிணற்றில் மறைத்து வைத்தனர். ஓர் ஆண்டுக்குப் பின் மணக்கால் நம்பி பெருமாளை மீண்டும் கொண்டுவந்து கருவறையில் எழுந்தருளச் செய்தார்.

## மூன்றாம் உலா

நம் பெருமாளின் மூன்றாம் உலா வேதாந்த தேசிகரின் காலத்தில் நடைபெற்றது. அப்போதும் பிள்ளை லோகாச்சாரியார் வேதாந்த தேசிகர், சுதர்சன பட்டர் திருவரங்கத்தில் வசித்தனர்.

கொள்ளிடத்தில் ஒருநாள் பெருமாள் திருவிழாவின் போது இசுலாமியப் படை ஒன்று திருவரங்கம் நோக்கி வருவதாகவும், அப்படை கொள்ளிடத்தின் அக்கரையில் சமயபுரம் வந்து விட்டதாகத் தகவல் எட்டியது. மூத்தவர்கள் மக்களைக் கவலை கொள்ள வேண்டாமென கூறினர்.

வேதாந்த தேசிகர் பிள்ளை லோகாச்சாரியரின் தலைமையில் பாதுகாப்பான இடத்திற்குப் பெருமாளைக் கொண்டு செல்லச் சொல்லிவிட்டு, கருவறையினைச் சுவர் வைத்து மறைத்தார்.

இசுலாமியத் தலைவர் நம் பெருமாளைக் காணாது பிற உருவங்களைத் தாக்கினர். தேவதாசிப் பெண் ஒருத்தி அத் தலைவனை மயக்கிக் கிழக்குக் கோபுரத்திற்கு இட்டுச் சென்று அவனைத் தள்ளிவிட்டுத் தானும் உயிர்த் தியாகம் செய்தாள். தலைவனில்லாப் படை திரும்பிச் சென்றது. முப்பது ஆண்டுகள் திருவரங்கத்தில் வழிபாடுகள் ஏதுமில்லாது போயிற்று.

பெருமாளைக் கொண்டு சென்ற பிள்ளை லோகாச்சாரியாரையும் பிறரையும் கொள்ளையர் தாக்கியபோதும் அவர்கள் தப்பித்து மதுரை சென்றனர்.

அவர்கள் மதுரைக்கு அருகில் ஜோதிஷ்குடி சென்ற போது பிள்ளை லோகாச்சாரியார் பரமபதம் எய்தினார். பெருமாளைத் திருநெல்வேலி, திருவனந்தபுரம், கொண்டு சென்று பிறகு திருப்பதிக்கு இறுதியாகக் கொண்டு சென்றனர். இதற்கிடையில் இசுலாமியப் படை வலுக்குன்றியது. விஜய நகரப் பேரரசு வலிமை பெற்றது. கோபண்ண உடையார் செஞ்சியை ஆண்டவர் நம்பெருமாள் திருப்பதியிலிருப்பது அறிந்து அவரைச் செஞ்சிக்குக் கொண்டு சென்று வழிபட்டு விட்டுத் திருப்பதிக்கு அனுப்பினர்.

தேசிகர் சுவாமி உடையாரை முகலீம்களை வீழ்த்தி அரங்கத்துப் பெருமாளை மீண்டும் எழுந்தருளச் செய்ய வேண்டினார். உடையார் திருவரங்கத்திற்கு ஒற்றர் ஒருவரை அனுப்பினார். ஒற்றர் உத்தம நம்பி என்றும் அறங்காவலருடன் வந்தபோது இசுலாமியப் படை பற்றிக் கூறினார். உடையார் இசுலாமியரைத் தோற்கடித்துப் பாழ்பட்டிருந்த கோவிலைக் கட்டினார். தேசிகர் திருவரங்கத்திற்குப் பெருமாளுடன் வந்திருந்து கட்டிய சுவரை இடித்துவிட்டுக் கருவறையில் பெரிய பெருமாளுடன் நம் பெருமாளைச் சேர்ப்பித்தார். இவ்வாறு மூன்று முறை திருவரங்கம் உலாச் சென்று திரும்பியிருக்கிறார்.